உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருள்மிகு உமாபதி சிவாச்சாரியார்
திருவாய் மலர்ந்தருளிய

# கோயிற் புராணம்

(உரையுடன்)

அருள்மிகு குமாரதேவர் திருமடம்
திருமுதுகுன்றம் - 606 001

07-04-2013

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருள்மிகு உமாபதி சிவாச்சாரியார்

திருவாய் மலர்ந்தருளிய

# கோயிற்புராணம்

அருள்மிகு குமாரதேவர் திருமடம்

திருமுதுகுன்றம் - 606 001

27-08-2010

# நூல் விளக்குக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் | : | **கோயிற்புராணம்** |
| ஆசிரியர் | : | **அருள்மிகு உமாபதி சிவாச்சாரியர்.** |
| பொருள் | : | சமயம். |
| வெளியீடு மற்றும் உரிமை | : | அருள்மிகு குமாரதேவர் திருமடம்.<br>காந்தி நகர்,<br>திருமுதுகுன்றம் - 606001,<br>விருத்தாசலம்<br>கடலூர் மாவட்டம். |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் **சு.தங்கத்துரை,**<br>முதல்வர்,<br>திருவள்ளுவர் பல்கலைக்கழகக்கலை<br>மற்றும் அறிவியல்கல்லூரி,<br>திருப்பத்தூர்-635901,<br>வேலூர் மாவட்டம். |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| நாள் | : | 27-08-2010 |
| தாள் | : | 13.7. |
| அளவு | : | 1/8 டெம்மி |
| அச்சுபுள்ளி | : | 13 |
| மொத்தப்பக்கங்கள் | : | |
| மொத்தப்படிகள் | : | 1000 |
| விலை | : | ரூபாய். 75 |
| கட்டமைப்பு மற்றும் அச்சு | : | கிருஷ்ணா கணிப்பொறி அச்சகம்,<br>பண்ணுருட்டி, |
| பேச | : | 04142-242647 |

# பொருளடக்கம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**அருள்மிகு குமார தேவ சிவப்பிரகாச குருவே நம!**

திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம் வீரசைவ ஆதினத்தின்
23 ஆவது குருமகா சந்நிதானம்
**சீர்வளர் சீர் கல்யாண சுந்தர சிவப்பிகாச பரமாச்சாரிய சுவாமிகள்**

# அருளிய ஆசியுரை

திருச்சிற்றம்பலம்

ஆடிய பெருமான் வெய்யோன் அலர்கதி ராயிரத்துக்
கூடிய மண்டலம் போல் குறைவிலா வகை நிறைந்து
நாடரு ஞான மன்றுள் நாமுய்ய வயன்மால் முன்பு
தேடரு மேனி கொண்டு திருநடஞ் செய்யக் கண்டார்.
(கோயில் புராணம். நடராசச் சருக்கம்.17)

கோயில் என்று போற்றப்படும் சிதம்பரமும் அருள்மிகு நடராசப் பெருமான் திருக்கோயிலும் பஞ்சபூதத்தலங்களில் ஆகாயத் தலமாகும். அருளாளர்களால் பல் வகையில் போற்றப்பட்டுள்ள இத்திருத்தலம் பல ஆன்மாக்களை ஈடேற்றியத் தலம் என்றால் மிகையாகாது. இத்தலத்தின் பெருமையையும் திருக்கோயிலின் சிறப்பையும் வரையறுத்துக் கூறமுடியாது என்பதை இத்தலத்தில் தோன்றிய புராணங்கள் முதல் இன்றைய இலக்கிய படைப்புகள் வரை எடுத்துக்காட்டி வருகின்றன.

இப்படி சிறப்புகள் பல நிறைந்த இந்த புண்ணிய பூமியில் தில்லை வாழ் அந்தணர்கள் மரபில் வந்தவரும் அன்புநெறியை முழுமையாகக் கடைபிடித்து வந்தவர். சைவசமய புறச் சந்தானக் குரவர்களில் நான்காவதாகவும் பேறுபெற்றவர் தான் அருள்திரு உமாபதிசிவாச்சாரியார். இவர் இலக்கியத் தொண்டும் சமயத் தொண்டும் ஆற்றிய பேரருளாளர்.

அவர் திருவாய் மலர்ந்த நூல்கள் பல. அவற்றுள் ஒன்றுதான் எல்லோராலும் போற்றப்படும் கோயிற்புராணம். இந்த நூல் தில்லை மாநகரத்தின் சிறப்புகளையும் தில்லை அருள்மிகு நடராசப் பெருமான் திருக்கோயில் சிறப்புகளையும் அங்கு நடைபெறும் திருவிழாக்களையும் இங்குவந்து அருள்மிகு நடராசப் பெருமானை வழிபட்டு பெருவாழ்வு பெற்றவர்களின் பெருமைக் குரிய வரலாற்று செய்திகளையும் கூறும் நூலாகும்.

அருள்திரு உமாபதி சிவாச்சாரியார். அருள்திரு மறைஞான சம்பந்தரிடம் தீட்சைபெற்று ஞானம் பெற்றவர். குருவருளும் திருவருளும் பெற்றமையால் பெருவாழ்வு பெற்று பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்திக்கொடுத்தவர். பல அடியார்களை இறைவன்பால் ஆற்றுப்படுத்தியவர். பல நூற்களை இயற்றியவர். அளவுக்கு அதிகமான சிறப்புகளைச் செய்த அருள்திரு உமாபதி சிவாச்சாரியார் வாழ்ந்து திருவடிப்பேறு பெற்ற இடம் தான் கொற்றவன்குடி அருள்திரு உமாபதி சிவாச்சாரியார் திருமடம்.

அந்த திருமடத்தில் 27-08-2010 அன்று நடைபெற்ற நன்னீராட்டின் போது அவர் திருவாய் மலர்ந்தருளிய இந்தக் கோயிற்புராணம் என்ற நூலை வெளியிடுவதற்குத்திருவருள் புரிந்த அருள்மிகு நடராசப் பெருமான் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

தலத்தின் பெருமைகளை அறிகின்ற போது நாமும் அத்தகையப் பேறைப் பெற வேண்டும் என்ற எண்ணம் தோன்றும். அப்படி ஞானத்தை வழங்கும் இந்த நூலைப் படித்து பேரின்பநிலையை எல்லா சிவஞான மெய்யடியார்களும் அடைய வேண்டும் என எல்லாம் வல்ல தில்லை அருள்மிகு சிவகாமி உடனுறை அருள்மிகு நடராசப் பெருமான் திருவளைச் சிந்திக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்

திருமுகுன்றம்,
27-08-2010

சீர்வளர்சீர் குருமகா சந்திதானம்.

---

உ

சிவமயம்

சிவாய நம

# பதிப்புரை

முனைவர் சு.தங்கத்துரை,
முதல்வர்,
திருவள்ளுவர் பல்கலைக்கழகக்
கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருப்பத்தூர் - 635901.

ஆதீனங்களின் திருத்தொண்டுகள் வரலாற்றுச் சிறப்புடையவை. ஆதீனங்களின் குருமார்கள் மக்களை நெறிப்படுத்த கருத்துகளைத் தலங்களின் சிறப்புகளை வெளிப்படுத்த, தாம் அனுபவித்த அனுபவங்களை வெளிப்படுத்த, மக்களை ஆற்றுப் படுத்த, பல நூற்களாக ஆக்கி வெளியிட்டு வந்துள்ளதைக் காண்கிறோம். ஆதினங்கள் சமய வளர்சிக்குப் பல வகைகளில் தொண்டாற்றி வருகின்றன. காலங்காலமாக அருளாளர்களால், புலவர்களால், அறிஞர்களால் எழுதிவைத்த இலக்கண, இலக்கிய ஓலைச் சுவடிகளை ஆதீனங்கள் பாதுகாத்துவருகின்றன. ஆதீனங்கள் அறிஞர்களைக் கொண்டு ஓலைச் சுவடிகளில் உள்ளவற்றை நூலாக வெளியிட தூண்டு கோலாக இருந்துள்ளன.

இந்த நெறிகளை எல்லாம் திருவண்ணாமலை, துறையூர் திருமுதுகுன்றம் ஆதீனம் காலங்காலமாகச் செய்துவருகின்றது. திருவண்ணாமலை துறையூர் ஆதீனத்தின் குருமுதல்வர் ஆதிசிவப்பிரகாச சுவாமிகள் அத்துவித வெண்பா முதலான 16 நூல்களைத் திருவாய் மலர்ந்துள்ளார்கள். அத்துவித வெண்பா பல பதிப்புகள் வெளிவந்துள்ளன. திருவண்ணாமலை துறையூர் ஆதீன ஏழாவது குருமகா சந்நிதானமாக நன்னூல் சிவப்பிரகாச சுவாமிகள் இந்நூலுக்கு உரை எழுதியுள்ளார்.

ஆதிசிவப்பிரகாச சுவாமிகளால் உயிர்த்தெழச் செய்து திருவண்ணாமலை துறையூர் ஆதீனத்தின் இரண்டாவது குருமகாசந்நிதானமாகப் பொறுப்பேற்ற ஞானக்கூத்தர் பல நூற்களைத் தமிழ் அன்னைக்குச் சூட்டியுள்ளார். அவற்றுள் குறிப்பிடத்தக்கது விருத்தாசலபுராணம் ஆகும்.

அதீனத்தின் ஐந்தாவது குருமாசந்நிதானம் அருள்திரு குமாரதேவர், மகாராஜாதுறவு, சுத்தசாதகம், அத்துவித உண்மை முதலான 16 நூல்களையும் அருள்மிகு பெரியநாயகியம்மைப் பதிகமும் பாடியுள்ளார். இந்த 16 நூற்களையும் சாத்திரக் கோவை என்ற தலைப்பில் ஆதீனத்தில் பல பதிப்புகளாக வந்துள்ளன.

நன்னூல் சிவப்பிரகாச சுவாமிகள் ஆதீனத்தின் ஏழாவது குருமகா சந்நிதானமாக வீற்றிருந்து அருளாட்சி செய்துவந்துள்ளார்கள். அவர்கள் நன்னூலுக்கு உரை எழுதியுள்ளார்கள். ஆதீனத்தின் அருள்திரு. முத்தையா சுவாமிகள் "சின்மய தீபிகை" என்ற தத்துவ நூலை எழுதியுள்ளார். இந்நூலை முதன் முதலாகப் பதிப்பித்தவர் வள்ளலார் என்று போற்றப்படும் இராமலிங்க சுவாமிகள்.

ஆதீனத்தின் 20 ஆவது குருவாக வீற்றிருந்த சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகள் திருமுதுகுன்றம் அருள்மிகு பெரியநாயகி மீது பிள்ளைத்தமிழ் பாடியுள்ளார்.

இவ்வாறு திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்ற வீரசைவ ஆதீனத்தில் எழுந்தருளி அருள்பாலித்த குருமகாசந்நிதானங்கள் தமிழ் அன்னைக்குப் பலவகையான நூற்களைத்தந்து புகழ்சேர்த்துள்ளார்கள்.

திருவண்ணாமலை துறையூர் திருமுதுகுன்றம் ஆதீனத்தின் 23வது குருமகா சந்நிதானமாக (01-01-1972) பொறுப்பேற்றுள்ள **சீர்வளர்சீர் கல்யாண சுந்தர சிவப்பிரகாச பரமாச்சாரியசுவாமிகள்** அவர்கள் இதுவரை பதினெட்டு நூல்களைத் தமிழ் இலக்கிய உலகில் பதிவுசெய்துள்ளார்கள்.

ஆதீனத்தின் 23 ஆவது குருமகா சந்நிதானம் தமிழ்த்தொண்டு செய்துவருவதுபோல சமயத் தொண்டும் செய்துவருகிறார்கள். சிவபூசைக்கு முக்கியத்துவம் கொடுத்துவருகிறார்கள். ஆன்மாக்கள் ஈடேறுவதற்கு சிவபூசைதான் மூலம் என்பதை புராணங்களும் அருளாளர்களும் வெளிப்படுத்தியுள்ளனர். தெய்வங்களும் தங்களை நிலைநிறுத்திக்கொள்ள சிவபூசை செய்துள்ளார்கள் என்பதை வரலாற்றுச் சுவடுகளும் தெளிவுபடுத்துகின்றன. இதன் காரணமாக ஆண்டு தோறும் சிவபூசையும் மெய்த்தொண்டர்களைத் திருமடத்திற்கு அழைத்து ஊக்கப்படுத்தியும் வருகின்றார்கள்.

63 நாயன்மார்களின் பெருமைகளைத் தொண்டுகளை வெளிப்படுத்த ஆண்டு தோறும் விழா நடத்திவருகிறார்கள்.

ஆதீனத்தின் கீழ் உள்ள திருக்கோயில்களையும், கிளைமடங்களையும் திருப்பணிசெய்து நன்னீராட்டு விழா நடத்தி, அந்நாளில் புத்தகங்களை வெளியிட்டும் வருகின்றார்கள். அந்நோக்கில் கொற்றவன் குடியிலுள்ள திருமடத்தின் திருப்பணிகளை நிறைவுசெய்து 27-08-2010 அன்று நன்னீராட்டு விழா நடத்தினார்கள். அப்போது அத்திருமடத்தில் குருமூர்த்தமாக இருக்கும் அருள்திரு உமாபதி சிவாச்சாரியார் திருவாய் மலர்ந்த கோயிற்புராணம் என்ற நூலை வெளியிட்டு சிறப்பித்துள்ளார்கள்.

நன்னீராட்டின் போது இந்நூலை வெளியிட வேண்டும் என 23ஆவது குருமகா சந்நிதானம் அவர்கள் கூறினார்கள். முயற்சிகள் செய்தோம். ஒரு பிரதி கிடைத்தது. அது திருவாடுதுறை ஆதீனவித்துவான் த.ச. மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்களின் முகவுரையுடன் 1965 இல் திருவாடுதுறை ஆதீனத்தால் வெளியிடப்பட்டதாகும். இந்த நூல் சென்னை பெசன்ட் நகரில் உள்ள மகாமகோ உபாத்யாய, டாக்டர் உ.வே. சுவாமிநாதஐயர் நூலகத்திலிருந்து கிடைக்கப்பெற்றது. இதனைப் பெற உதவியாக இருந்தவர் மகாவித்துவான் மயிலம் வே. சிவசுப்பிரமணியன். இதனைப்பொழிப்புரையுடன் வெளியிட்டுள்ளனர். பொழிப்புரை யாரால் எழுதப்பட்டது என்ற குறிப்பு நூலில் காணப்படவில்லை.

கோயிற்புராணம், தில்லைவாழ் அந்தணர் மரபில் வந்த வரும் சைவ சமய புறச்சந்தான மரபின் நான்காவது அருளாளருமான அருள்திருஉமாபதி சிவாச்சாரியர் திருவாய் மலர்ந்ததாகும். அவர் எழுதிய பலநூல்களில் தில்லையின் பெருமையைப்பட்டியிலிட்டுக் கூறும் நூல் கோயிற்புராணம் ஆகும். இந்த நூல் பல அறிஞர்களால் பல ஆண்டுகளில் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.

இரண்டு பதிப்பு நூல்களையும் ஒப்பிட்டுப்பார்க்கும் போது இரண்டும் இரண்டுவகையான உத்திகளின் அடிப்படையில் அமைந்துள்ளது. திருவாவடுதுறை ஆதின வெளியீட்டில் பாடலைக் கொடுத்து, இதன் பொருள் என அந்தப்பாடலின் பொழிப்புரையை எழுதியுள்ளார்கள். மேலும் சில பாடல்களுக்கு விளக்கங்களும் கருத்துரைகளும் எழுதப்பட்டுள்ளன.

சதாசிவப்பிள்ளைப் பதிப்பில் பாடலைக்கொடுத்து இதன் பொருள் என தலைப்பிட்டு வரிவரியாக அதன் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. அதன்பின் சிலபாடல்களுக்கு கருத்துரைகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

திருவாடுதுறை ஆதீன பதிப்பின் பாயிரப்பகுதியில் உள்ளப்பாடல்கள் காப்பு மற்றும் கடவுள் பாடல்களாக அமைந்திருப்பதால் எந்தந்த தெய்வத்துதி என தலைப்புப் கொடுக்கப்பட்டுள்ளது. சதாசிவபிள்ளைப் பதிப்பில் எந்த உபதலைப்புகளும் காணப்படவில்லை.

இரண்டு உரைகளையும் நோக்கும் போது கருத்துக்களை கூறும் தன்மைக்கு ஏற்றவாறு நிறைய வேறுபாடுகள் உள்ளன. கருப்பொருளில் எந்த மாற்றமும் இல்லை. சில சைவ சித்தாந்த கருத்துகளும் நூலில் காணக்கிடைக்கின்றன.

| | பாடல்கள் |
|---|---|
| 1. பாயிரம் | 28 |
| 2. வியாக்கிரபாதச் சருக்கம் | 30 |
| 3. பதஞ்சலிச் சருக்கம் | 99 |
| 4. நடராசச் சருக்கம் | 71 |
| 5. இரண்யவன்மச் சருக்கம் | 133 |
| 6. திருவிழாச் சருக்கம் | 53 |
| | 414 |

என ஆறு பிரிவுகளில் நூல் அமைந்துள்ளது.

தில்லைக்கோயிலின் மேலைக் கோபுர முன்புறத்துள்ள கற்பகவிநாயகரைக் காப்புக் கடவுளாகக் (ஒருபாடல்) கொண்டு நூல் தொடங்கப்பட்டுள்ளது. ஆகமொத்தம் 415 பாடல்கள் நூலில் உள்ளன.

பாடல்கள் எளிமையாகவும் இனிமையாகவும் அமைந்துள்ளன. பாயிரத்தின் தொடக்கத்தில் அருள்மிகு நடராசர் துதிப்பாடல்கள் உள்ளன. அதனைத் தொடர்ந்து சிவகாமியம்மைத் துதி, கற்பகவிநாயகர் துதி, சுப்பிரமணியசுவாமி துதி, மூவர் முதலிய அடியார்கள் துதி, மாணிக்கவாசக சுவாமிகள்துதி, தில்லை மூவாயிரவர் துதி, சண்டேசர் முதலிய திருக்கூட்டாத்தார் துதி, அநபாயசோழச் சக்கரவர்த்தி துதி, அகரம் படிமைப்பதினாறாயிரவர் துதி எனத் துதிப்பாடல்களாக பாயிரம் அமைந்துள்ளது. முன்னோரைப் போற்றும்

துதி மட்டுமல்லாது தில்லை விளங்கக் காரணமாயிருந்தவர்களையும் துதிப்பாடலில் சேர்த்திருப்பது உமாபதி சிவாச்சாரியாரின் தொண்டு செய்தோரைப் போற்றும் பண்பைக் காணமுடிகிறது.

மேலும் இப்பிறப்பின் சிறப்பினைக் கூறும் போது சிதம்பரத்தில் பிறந்து அருள்மிகு நடராசப்பெருமான் நடனத்தைப் பார்ப்பதே சிறப்பு என கீழ்வரும் பாடலில் வெளிப் படுத்தியுள்ளார்.

"மண்ணில் இருவினைக்கு உடலாய் வான் நிரயத்துயர்க்கு உடலாய்
எண்ணில் உடல் ஒழிய முயல் இருந்தவத்தால் எழிற்றில்லைப்
புண்ணிய மன்றினில் ஆடும் போது செய்யா நடம் காண
நண்ணும் உடல் இது அன்றோ நமக்கு உடலாய் நயந்த உடல்"
(கோயிற் புராணம். பாயிரம். 14)

தலச்சிறப்பினைப் பதினான்கு பாடல்களில் சிறப்பித்துள்ளார். நூலில் என்னசெய்தி கூறப் போகிறோம் என்பதை பாயிரத்தின் 26 ஆவது பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

வியாக்கிரபாதச் சருக்கத்தில் மத்தியந்தினன் மகன் மாத்யந்தன் எவ்வாறு வியாக்கிரபாதர் ஆனார் என்ற வரலாறு காணப்படுகிறது.

பதஞ்சலி முனிவர் தில்லை வந்தது. நடராசப்பெருமானின் நடனக்காட்சிக்காக ஏங்கிநிற்பது. கண்ட காட்சியைக் கண்டு பெருமைப்படுவது போன்ற செய்திகளைப் பதஞ்சலிச் சருக்கத்தில் காணமுடிகிறது.

சிபெருமானின் நடன நிகழ்ச்சிக்கான காரணம். அதனைக் கண்ட அடியார்கள். அவர்கள் பெற்ற பலன்கள் போன்றவற்றை கூறுவது நடராசச் சருக்கமாகும். சிவனது நடனத்தைக் கண்டு சிந்திந்துயிருந்த நிகழ்வை ஆசிரியர்.

" கறவையான் வரவு பார்க்குங் கற்றின மெனவுங் கார்சேர்
உறையுண வுணர்ந்து நோக்கி ஓய்ந்தபுள் எனவும் மோங்கல்
செறிமுகின் முழவு கேட்குந் திகழ்மயிற் திரளும்போல
இறையவன் நடமே சிந்தித்து இடைத்தினம் கடத்தினார்கள்"
(நடராசச் சருக்கம்.3)

எனக் குறிப்பிட்டுள்ளார்.

சுவேதவர்மன் ஸ்ரீசைலம் போன்ற பல இடங்களில்

தவம் இருந்து தில்லை வந்து இரணியவன்மன் ஆன வரலாற்றுச் செய்திகளைக் கூறுவது இராணியவன்மச் சருக்கமாகும்.

எல்லா சருக்கங்களிலும் சைவ சித்தாந்தக் கருத்துகள் காணப்பட்டாலும் இராணியவன்மச் சருக்கத்தில் அதிகமாகக் காணப்படுகன்றன.

திருவிழாச் சருக்கத்தில் சிதம்பரம், அருள்மிகு நடராசர் திருக்கோயிலில் நடைபெறும் விழாக்களைப் பட்டியலிட்டு கொடுத்துள்ளார் ஆசிரியர். கார்த்திகை சொக்கபானை நிகழ்வு மார்கழிமாத திருவாதிரை, ஆனி திருமஞ்சனம் போன்ற நடராச அபிஷேக திருவிழாக்களைச் சிறப்பாகப் பாடியுள்ளார்.

நிறைவுப்பாடலில்

"செடிசேர் பொழிலணி புலியூர் வளநகர்
செல்வம் பெருகுக திருமன்றில்
கொடிசேர் விடையினன் அடிசேர் ஒளிதெளி
குறி கூடுக குழு மறை சூழ்க
பொடிசேர் வடிவினர் அடிசேர் முறையினர்
புனல் சேர் இருவிழி யினராகி
அடியேன் எனதுயர் அகல் கூடிடும் நெறி
ஆள்வான் அடியவர் வாழ்வாரே"

(திருவிழாச் சருக்கம். 52)

இப்படி குறிப்பிட்டியிருப்பது உமாபதி சிவாச்சாரியாரின் பக்குவநிலையையும், பத்தி உணர்வையும் சைவசித்தாந்த உறுதிபாட்டையும் உணரமுடிகிறது.

நூலின் நிறைவு பாடலில் "தழைக அஞ்செழுத்தோசை தரையெல்லாம்" எனக்குறிப்பிட்டிருப்பது அஞ்செழுத்துதான் ஆன்மாவை ஈடேற்றும் என்பதை வலியுறுத்துகிறார் எனலாம்.

அற்புதமான கருத்துபெட்டகமாக விளங்கும் இந்நூலை எல்லோரும் படித்து இன்புறுவோமாக.

கொற்றவன் குடி, அருள்திரு உமாபதி சிவாச்சாரியார் திருமடத்தை திருப்பணி செய்து நன்னீராட்டு செய்துதிருப்பது போல ஆதீனத்தின் கீழ் உள்ள எல்லா திருக்கோயில்களையும் கிளைமடங்களையும் திருப்பணி செய்து நன்னீராட்டு செய்வதற்கு 23

ஆவது குருமகா சந்நிதானம் சீர்வளர்சீர் கல்யாணசுந்தர பரமாச்சாரிய சுவாமிகளுக்கு எல்லா நலன்களையும் நல்ல உடல், மனம் ஆரோக்கியத்தையும் அருளவேண்டும் என அருள்திரு குமாரதேவர், அருள்மிகு பெரியநாயகி, அருள்மிகு நடராசப் பெருமாள் ஆகியோரிடம் விண்ணப்பிக்கிறோம்.

அடியேனையும் இந்த புண்ணிய பணியில் ஈடுபடுத்தி நெறிப்படுத்திக் கொண்டிருக்கும் திருவண்ணாமலை துறையூர் திருமுதுக்குன்றம் ஆதீனத்தின் 23 ஆவது குருமகா சந்நிதானம் அவர்களின் அருளை மனம், மொழி, மெய் ஆகியவற்றால் வணங்கி மகிழ்கிறேன்.

இந்நூல் குறிப்பிட்ட காலத்துக்குள் வெளிவர துணையாக நின்ற அன்பு நெஞ்சங்களுக்கும் நல்ல முறையில் கட்டமைப்பு செய்து தந்த பண்ணுருட்டி, கிருஷ்ணா அச்சக உரிமையாளரையும், அச்சகத்தில் பணிபுரியும் உதவியாளர்களையும் அன்புடன் வணங்குகின்றேன்.

கோயிற்புராணம் வெளியிட உதவிபுரிந்த மயிலம் வே.சிவசுப்பிரமணியன் அவர்களுக்கும் சிதம்பரம், மௌனசுவாமிகள் மடத்தின் சந்நிதானம் அவர்களுக்கும் எங்களது அன்பை வெளிப்படுத்திக் கொள்கிறோம்.

இத்தொண்டிற்கு அடியேனை ஆட்படுத்தி ஊக்கப்படுத்தி வெளிப்படுத்திக் கொண்டிருக்கும் அருள்திரு. குமாரதேவரையும் அருள்மிகு பெரியநாயகி உடனுறையும் அருள்மிகு பழமலை நாதரையும் போற்றி புகழ்கிறோம்.

திருச்சிற்றம்பலம்
சிவாய நம
சிவமயம்

திருமுதுகுன்றம், சு. தங்கத்துரை.

27-08-2010.

உ

சிவமயம்

## அணிந்துரை

மகாவித்துவான், மயிலம்

வே. சிவசுப்பிரமணியன்

உலகிற்கு ஒருவாசகம் என்று போற்றப்பெறும் திருவாசகம் ஈந்த பிரான் மணிவாசகர், திருக்கோவையில் சிவபெருமானை,

> "அணியும் அமிழ்தும் என் ஆவியும் ஆயவன் தில்லைச்சிந்தா
> மணி உம்பரார் அறியா மறையோன்" (திருக்கோவை. 5)

என்று போற்றினார். உயிர்க்கு அழகு செய்தான் சிவன் அணி. மிகப்பெரிய சுவையோடு உயிர்க்கு உறுதிபயத்தலான் சிவன் அமிழ்து விரும்பப்படும் பொருள்கள் எல்லாவற்றிலும் சிறத்தலானும் தன்னின் மிக்கது இன்மையானும் சிவன் ஆவி எனப்பெறும் உயிர். இவ்வாறு அவர்கூறிய மூன்று உவமைகளிலும் நடுநாயகமாக நிற்பது அமிழ்து ஆகும். அமிழ்து என்பது தமிழையும் குறிக்கவல்லது. தமிழுக்கு அமிழ்தென்று பேர் என்பது பின்னோர்வாக்கு.சாவாமூவாத்தன்மை உடைமையால் தமிழை அமிழ்து எனலாம். "உலகவழக்கு அழிந்து ஒழிந்து சிதையா உன் சீரிளமைத் திறம்" என்று தமிழின் தன்மையைப் புகழ்ந்தார் மனோன்மணியம் ஆசிரியர். தமிழ் தமிழ் என்று தொடர்ந்து சொன்னால் அது அமிழ்து என்றல்லவா வரும். எத்தகைய அற்புதமான பெயர் இம்மொழிக்கு அமைந்துள்ளது. சிவபெருமானும் அமிழ்தும் ஒன்றானால் தமிழும் ஒன்றாகும் போது தமிழே சிவமயமாய் விடுகிறதுதல்லவா.

தமிழின் பண்டைய இலக்கியங்களைப் பாட்டினும் தொகையினும் கீழ்க்கணக்குகளினும் என்று வரிசைப்படுத்துவர் உரையாசிரியர்கள். பத்துப்பாட்டினுள் முதற்கண் உள்ளது திருமுருகாற்றுப்படை தெய்வ வணக்கப் பாடலை முதற்கொண்டே தமிழ் இலக்கியம் தொடங்கியுள்ளதை இதனால் அறியலாம். இதனால் தெய்வமும் தமிழும் பிரிக்க இயலாதென்பது தெளிவு. தமிழுக்கு இலக்கியம் உடல், தெய்வநெறி விளக்கும் தோத்திரமும் சாத்திரமும் உயிர் ஆகும். தமிழில் உயிர் (எழுத்து) பன்னிரெண்டு. தோத்திரம் பன்னிருதிருமுறை. சாத்திரம் சந்தான ஆசார்யபரம்பரையில் வந்தவை பன்னிரண்டு. அதிலும் மெய்கண்டாரது சிவஞான போதம் பன்னிரண்டு சூத்திரம். அச்சூத்திரப் பொருளை மேலும் விரிவு செய்தவையே மற்ற சாத்திர நூல்கள். எனவே தமிழின் உயிர் பன்னிரண்டு என்பற்கொப்ப இவையும் பன்னிரண்டாகவே உள்ளன. தமிழின் மெய் (எழுத்து) பதினெட்டு அல்லவா?அதற்கொப்ப மேற்கணக்கு எனப்பெறும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை பதினெட்டாதலும் கீழ்கணக்கு பதினெண் கீழ்க்கணக்கு ஆதலும்

நோக்குங்கால் தமிழின் மெய் பதினெட்டும் உடலாகத் தமிழுக்கு அமைந்த இலக்கியங்களாகக் கருதுதற்கு ஒத்தமைகின்றன. இவ்வாற்றல் தமிழின் இலக்கியமும் தோத்திர சாத்திரமும் தமிழ்மொழிக்கு உடலாகவும் உயிராகவும் அமைந்து நலம் செய்கின்றன என்பது விளங்கும்.

தமிழின் உயிராக விளங்கும் தோத்திர சாத்திரங்களை அருளிச் செய்த அருளாளர்கள் உயிரின் பாதுகாவலர்கள் ஆவார்கள். பல் பிறவியினும் பிறந்து இறந்து தடுமாறும் உயிர்க்கு இறவாத, பிறவாத, நிலையான வாழ்வைத் தருதற்கு உற்ற துணையாய் விளங்குவன தோத்திர சாத்திரங்களே.

தோத்திரமாகிய பன்னிரு திருமுறைகளில் பிழிந்தெடுத்த சாரமே பன்னிரண்டு சாத்திரங்களாகவும், முற்பட்ட இரண்டு சாத்திரங்களோடு கூடிப் பதினான்கு மெய்கண்ட சாத்திரங்களாக மலர்ந்தன. சாத்திரங்களை அருளிய பெருமக்களைச் சந்தான குரவர் என்று போற்றுவது வழக்கம். திருவருள் முதல் குரவர் மெய்கண்டார், அவரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ அருணந்திசிவாச்சாரியர் அவருடைய சீடர் மறைஞான சம்பந்தர் அவருடைய ஞானச்சீடர் உமாபதி சிவாச்சாரியர் என்ற நால்வரும் சந்தான ஆசார்ய பரம்பரையை இவ்வுலகில் நிலைபெற செய்த அருளாளர்கள் ஆவார்.

மெய்கண்ட சாத்திரங்களில் எட்டு நூல்களை அருளியவர் தில்லை வாழ் அந்தணர்களில் ஒருவரும் ஸ்ரீ ஆனந்த தாண்டவ பெருமாளுக்கு அணுக்கமான வருமாகிய ஸ்ரீ உமாபதி சிவாச்சாரியார் ஆவார். சந்தான பரம்பரையை அபிடேக பரம்பரையாக ஆக்கி வேதாகம புராண சாத்திரங்களைப் பாதுகாத்தளிக்கும் அத்தனைச் சைவமடாங்களும் ஏதாவது ஒரு வகையில் உமாபதி சிவாச்சாரியாரின் கால்வழியில் வந்து சேர்ந்து சங்கமமாகிவிடும் என்றால் அவர் ஒரு ஞான சமுத்திரம் என்று சொல்லலாம்.

சிதம்பர கோத்திரத்தில் தில்லை வாழ் அந்தணர் குலத்தில் சம்புதீட்சதர் எனப் பெறும் நடராஜ தீட்சதர்க்கும் கௌரி என்ற அன்னைக்கும் புதல்வராக திருவருளால் அவதரித்த ஞானச்செல்வர் உமாபதி சிவம் ஆவார். நான்கு வேதங்களையும் அனைத்துக் கலைகளையும் கற்று ஞான பண்டிதராகத் திகழ்ந்தார். ஸ்ரீ மந்திரமூர்த்தி தீட்சதரிடம் ஸ்ரீவித்யா உபதேசம் பெற்று ஸ்ரீ சிவகாமி சந்நிதியில்

ஸ்ரீவித்யா பயஞ்ஞயத்தை அனுஷ்டித்து. அம்பிகையின் அருளையும் அணிமாதி சித்திகளையும் பெற்றவர். பல வேள்விகளை நடத்தியவர். உலகில் வைதிக தர்மத்தையும் மிகப் பழமையான சைவ மதத்தையும் வளர்த்தவர்.

சுவேதாசாரியர் என்ற பெரியோரின் அருளாசியுடன் ஒரு ஸ்படிக லிங்கம். ஸ்ரீ சிதம்பர மேருயந்திரம். வாஞ்சா கல்பலதா கணபதியந்திரம் ஆகியவற்றைப் பெற்றார்.

மறைஞான சம்பந்தரிடம் உபதேசம் பெற்று எல்லா ஆகமங்களையும் ஆராய்ந்து சைவ சித்தாந்த மெய்ப்பொருளைத் தமிழிலும் வடமொழியிலும் தெளிவாகப் பல நூல்களால் வெளிப்படுத்தியவர்.

இவரால் இயற்றப் பெற்ற வடமொழி நூல்கள் பலவற்றுள் ஒன்றே குஞ்சிதாங்கிரிஸ்தவம். 313 சுலோகங்கள் கொண்ட அற்புதமான பெருநூல். சற்று வளைத்து தூக்கிய திருவடியை உடைய நடராசப் பெருமானச் சரண் புகுவதாக இந்நூலில் பாடுகிறார். இந்நூலின் கருத்தாக அமைந்த செய்திகள் பழைய நூல்களிலிருந்து திரட்டப்பட்டவை எனத் தெரிகிறது.சிவபெருமான் இவர்பால் கொண்டிருந்த பெருங்கருணையும் நெருக்கமும் இவரது படைப்புகளால் அனைவர்க்கும் புலன் ஆகியது. சைவ சித்தாந்த ஞானபோதம் வழிவழியாக வளர வேண்டி தம்மிடம் மூவகைத் தீக்கையும் ஞான உபதேசமும் பெற்ற அருள் நமச்சிவாயர்க்கு ஒரு நல்ல நாளிலே ஞான அபிடேகம் செய்து தமக்கு அடுத்த ஆசார்யராக வைத்தருளினார்.

வடமொழியில் இவர் எழுதியநூல்கள் பல. தமிழ் மொழியில் ஞானசாத்திரங்கள் என முன்னுரைத்த நூல்கள் எட்டோடு. கோயிற்புராணம். திருமுறை கண்ட புராணம். திருத்தொண்டர்புராண வரலாறு. திருத்தொண்டர் புராணசாரம். திருப்பதிகக்கோவை சேக்கிழார் புராணம் என்னும் நூல்களையும் அருளிச்செய்தனர்.

வடமொழியில் பௌகர ஆகமத்திற்கு மாபாஸ்யம் என்ற பேருரையும் அருளிச்செய்துள்ளார்.அவர் எழுதிய அருள் நூல்களில் சிதம்பரமான்மியத்தை விளக்க இவரால் அருளிச்செய்யப்பெற்ற கோயிற்புராணம் அச்சேறி அனைவர் சிந்தைக்கும் விருந்தாக வெளிவர இருக்கிறது.

கோயில் எனப்பெறும் தில்லைத்தல வரலாறு கூறும் நூல் கோயிற்புராணம் ஆகும். கோயில் என்பது பொதுவாக எல்லா ஆலயங்களையும் குறிக்குமாயினும் சைவர்களுக்கு கோயில் என்பது சிதம்பரம் ஆகும். இதன் வரலாற்றைக் கூறும் நூல் கோயிற்புராணம்.

பாயிரம் உட்பட 415 விருத்தங்களைக் கொண்டது இந்நூல்.

1. வியாக்கிர பாதச்சருக்கம்.
2. பதஞ்சலிச் சருக்கம்.
3. நடராசச் சருக்கம்.
4. இரணியவன்மச் சருக்கம்.
5. திருவிழாச் சருக்கம் என்னும் ஐந்து சருக்கங்களை உடையது.

தலபுராண நூல்களில் முதன்மையானது,தொன்மையானது. தலபுராண நூல்களிலேயே மிகக் குறைந்த பாடல் தொகையுடைய புராணம் இது என்று தல புராண ஆராய்ச்சியாளர் கூறுவர்.

ஸ்ரீ உமாபதி சிவனார் கொற்றவன் குடியில் தங்கியிருந்த போது கோயிற்புராணத்தை இயற்றினார். சிதம்பர மான்மியம் என்ற வடநூலின் வழியாக இயற்றப்பெற்றது கோயிற்புராணம்.

தில்லைத் திருத்தலம் தோன்றிய வரலாற்றைப் புராண மரபில் கூறுகிறது கோயிற்புராணம். தில்லை மேற்குக் கோயில்வாசலில் உள்ள கற்பகவிநாயகர் தோத்திரத்தோடு இந்நூல் தொடங்குகிறது.

மதியந்தின முனிவரின் குமாரரான மாத்யந்தின் முனிவர் வேதாகம் சாத்திரம் எல்லாம் கற்ற பின்னர், "ஆத்ம ஞானம் பெறுவதற்கான வழியாது" என்று தந்தையைக் கேட்கிறார். அவர் தில்லை வனம் செல், அங்கு சுயம்புவாய் எழுந்தருளியுள்ள சிவலிங்க வழிபாடு செய்தால் ஆத்ம ஞானம் கிட்டும் என்றார். அவர் உரைப்படி தில்லை வந்து இறைவனை வேண்டி, அதிகாலை மலர்பறிக்க புலிக்கண்: புலக்கால் பெற்று வியாக்கிர பாதர் என்னும் பெயரும் பெற்றார். இதுவே வியாக்ர பாதச் சருக்கம் கூறுவது.

இறைவனது ஆனந்த நடனத்தின் பெருமையை ஒரு நாள் ஆதிசேடனுக்குத் திருமால் எடுத்துரைத்தார். அந்நடனத்தைக் கண்டுகளிக்கும் ஆவலோடு ஆதிசேடன் தில்லை வந்தார். பதஞ்சலியாகிய அவரும் வியாக்கிர பாதருடன் கூடி திருநடனம் கண்டு மகிழ்ந்தார். அங்கேயே தங்கி கௌடபாதர் முதலான பல மாணவர்களுக்கு வியாகரண சூத்திர பாடத்தையும் உபதேசித்தார். இதுவே இரண்டாம் பகுதியான பதஞ்சலி சருக்கம்.

நடராசப் பெருமானது திருநடனம். தத்துவம் கூறுவது மூன்றாவது நடராசர் சருக்கம். சுவேதவர்மன். இரணியவர்மன் ஆனது. தில்லைத் திருவம் பலத்தைப் பொன் வேய்ந்தது ஆகிய வரலாறு கூறுவது நான்காவது இரணியவன்மச் சருக்கம்.

தில்லைத் திருக்கோயில் திருவிழாக்கள். மார்கழித் திருவாதிரை. ஆனித் திருமஞ்சனம் என்ற ஒராண்டில் நடைபெறும் இரண்டு பெரிய திருவிழாக்கள். ஆறு வேளை நடைபெறும் நித்திய பூஜைகள் இவற்றைப் பற்றி விரிவாக தத்துவப்பார்வை யோடுகூறுகின்றது. ஐந்தாவது திருவிழாச்சருக்கம்.

மார்கழித் திருவிழாவது மாணிக்கவாசகரைப் பத்து நாளும் சுவாமிசந்நிதியில் எழுந்தருளச்செய்து திருவெம்பாவை பாடி தீபாராதனை நடைபெறும். பத்தாம் நாள் தரிசனம் முடிந்தவுடன் மாணிக்கவாசகர்க்கும் தீபாராதனை நடைபெறும். இவ்விழா பற்றிக் கோயிற்புராணம் கூறுகிறது. (கோயிற் புரா. திருவிழா. 23ஆம் பாடல்)

சைவ சித்தாந்த நுட்பங்கள் கோயிற்புராணத்தில் அங்கங்கே அறியக் கிடக்கின்றன. சற்காரிய வாதம் என்னும் சைவசித்தாந்த அரும்பொருள்,

" வையகம் மாயையின்கண் வினைவழிவரும் கடாதி
செய்பவர் ஒழியத் தோன்றாச் சிலத்த உயிர்கள் சேர்தற்கு
எவ்வகை உணர்வுண்டென்னில் இலங்கும் ஐந்தொழில் யாவும்
உய்வகையால் இயற்றதற்கு யாமுளோம் என உரைத்து"
(பதஞ்சலிச் சருக்கம். 64)

என்னும் பாடலில் பொதிந்துள்ளது.

இறைவன் சுத்தமாயை, அசுத்தமாயைகளினின்றும் உயிர்கள் இருவினைப்பயன் நுகரச்செய்கிறான் என்னும் அரிய கருத்தை இரணிய வன்மச் சருக்கம் இரண்டாம் பாடலில் காணமுடிகிறது.

தலபுராண இலக்கியம் என்பதற்கேற்ப அழகிய உவமைகளை உமாபதிசிவனார் இந்நூலில் தருகிறார். இலக்கியத்தை வளர்க்கும் செவிலித்தாய் உவமையல்லவா.

வேட்டுவனாகிய குளவியையே நினைத்துக்கொண்டிருந்த மென்மையான புழு அக்குளவி உருவத்தைப் பெற்றது போல இறைவனால் கூறப்பட்ட பதஞ்சலி உருவத்தையே எண்ணியிருந்த ஆதிசேடன் மெல்ல மெல்ல அவ்வுருவத்தைப் பெற்றான் என்கிறார் உமாபதி சிவம். இந்த உவமை.

" வேட்டுவனாம் அப்புழுப்போல" என்னும் சிவஞானபோத வெண்பாவை அப்படியே ஒற்றி சைவசித்தாந்த பரமாச்சாரியர் உணர்வில் இவர் தோய்ந்த படியைக் காட்டிநிற்கிறது.

தில்லையில் இறைவன் திருநடனம் செய்ய இருக்கும் நாளை எண்ணி எண்ணி ஆவலோடு எதிர்பார்த்திருந்த முனிவர்களுக்கு மூன்று அழகிய உவமைகளை அமைக்கிறார் ஆசிரியர்.

1. தாய்ப்பசு வரவு பார்க்கும் கன்று.
2. மழைநீரை உண்ண எதிர்பார்க்கும் சாதகப்பறவை.
3. மேகம் மழைபெய்ய முழங்கும் இடியோசை கேட்கும் மயில்.

அன்பு, உயிர்தளிர்க்கும் நிலை, மகிழ்ச்சி என்ற மூன்று நிலைகளையும் காட்ட மூன்று உவமைகளை நடராசச்சருக்கம் மூன்றாம் பாட்டில் காட்டி அற்புதம் செய்துள்ளார் ஆசிரியர்.

இலக்கிய நலமும் தத்துவச் செறிவும் தல வரலாறும் அடங்கிய கருத்துக் கருவூலமாகிய கோயிற்புராணம் இன்றும் என்றும் அனைவர் நிலையிலும் நின்று திகழும் என்பதொருதலை.

அற்புதமான பல நூல்களைத் தமிழ் உலகுக்கும் சைவ உலகுக்கும் அளித்த உமாபதி சிவாச்சிரியார் 76 ஆண்டுகள் பல சீடர்களுக்கு உபதேசித்து சைவ சித்தாந்தத்தை விளக்கியும் சைவமடாதிபதிகளின் பரம்பரையைத் தோற்றுவித்தும் அருளாட்சி செய்து ஒரு சித்திரை அஸ்த நட்சத்திரத்தில் ஸ்ரீ நடராஜப்பெருமான் சோதியில் கலந்தார். இவர் காலம் கி.பி.1270 முதல் 1345 வரை என்பர். கொற்றவன் குடி உமாபதி சிவனார் திரு மடாலயத்தைக் குடமுழுக்குச் செய்யும் இந்தத்திருநாளிலே கற்கோயிலாகிய திருமடத்தைப் புதுப்பித்தல் போலவே கோயிற்புராணமாகிய இச் சொற்கோயிலையும் புதுப்பித்துப் பதிப்பித்து அனைவருக்கும் அளிக்கும் பேரருளை நினையும் தோறும் நெஞ்ச நெகிழ்ந்து துதித்தல் அல்லது வேறு செயல் அறியேன்

விருத்தாசலம் அருள்மிகு குமாரதேவர் திருமடத்தில் மகாசந்நிதானமாக வீற்றிருந்து அருளாட்சி நடத்தி வரும் சீர்வளர் சீர் கல்யாண சுந்தரசிவப்பிரகாச பரமாச்சார்ய சுவாமிகள் திருக்கோயில் வழிபாட்டிலும் சீடர்கள் பாற்கொண்ட பெருங்கருணையிலும் குறைவிலா நிறைவாய் விளங்குபவர்கள். அன்று முதல் இன்று வரை கொற்றவன்குடி மடத்தை கண்ணும் கருத்துமாய் அனைவரும் போற்றும்படி நிர்வாகம் செய்து வருபவர்கள். இன்று கோயிற்புராணத்தைப் புதுப்பித்தளித்து சைவசமய உலகிற்கும் தமிழ் இலக்கிய உலகிற்கும் அரும்பணி ஆற்றியிருக்கிறார்கள். அடியேனுக்கும் இவ்வாய்ப்பு நல்கிய அவர்கள் திருவடிமலர் பணிந்து என்றென்றும் இந்நிலையே எனக்கருள வேண்டும் என அணிந்துரையை நிறைவு செய்கிறேன்.

அன்புடன்.
வழி வழி அடியவன்.
வே. சிவசுப்பிரமணியன்.

உ

சிவமயம்

# முகவுரை

திருச்சிற்றம்பலம்

குனித்த புருவமுங் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே.

- திருநாவுக்கரசு சுவாமிகள்

கோயில் என்பது சிதம்பரம். இறைவர் எழுந்தருளியிருக்கின்ற ஏனைய தலங்களெல்லாம் கோயிலாயினும் இதனையே சிறப்பித்தெழுந்தது 'கோயில்' என்னும் சொல்லாம். கோயில் என்பது மரூஉமொழி.

வாக்கு மனாதீதராகிய சிவபெருமான் பரிபூரணராய்ச் சடசித்துப் பொருள்களில் எல்லாம் நிறைந்து நின்றாராயினும், ஆன்மாக்கள் உணர்ந்து முத்தியடைதல் அருமையாம் எனத் திருவுளங்கொண்டு, ஆன்மாக்களிடத்துக்கொண்ட அளவற்ற கருணையினால் எண்ணிறந்த திருதலங்களில் எருந்தருளி அருள்செய்வாராயினர். அவற்றுள், அறுபத்தெட்டுத் தலங்கள் முத்தித்தலமாகக் கொள்ளப்பட்டன. அவற்றுள்ளும் ஆறு தலங்கள் சிறந்தன; அந்த ஆறு தலங்களுள் மூன்றே சிறந்தனவாம்; அவை திருவாரூர், திருக்காசி, திருவம்பலம் என்பன. அம்மூன்று தலங்களுள்ளே திருவாரூரில் பிறந்தோரும், திருக்காசியில் இறந்தோரும் சிதம்பரத்தில் சென்று ஸ்ரீ பாதம் சேவித்தோரும் சிவசாயுச்சியம் பெறுவர்.திருவாரூரிலே பிறக்கும் பேறும், திருக்காசியிலே இறக்கும் பேறும் ஒருவருக்குக் கிட்டுதல் எளிதன்று. சிதம்பரத்திலே சென்று ஸ்ரீ நடராசப்பெருமான் எடுத்தபொற்பாதம் தரிசிக்கும்பேறு இப்பிறப்பில் பெறக்கூடியதேயாம் (கோயில்புராணம், இரணிய. 66,67,68). கண்ணுதலாடல், வெற்பிற் காரிகை காணும் இந்தப் புண்ணிய மன்றெவர்க்கும் பொது என இப்புராணம் கூறும் (இரணிய. 75).

இத்தலம் உபமன்னியர், வியாக்கிரபாதர், பதஞ்சலிமுனிவர், சைமினி முதலியோரால் பூசிக்கப்பெற்றது. சங்கார வழக்கறுக்கும் அம்பலமாய், களங்கமற்ற கனகமய ரூபமாய் சுத்த கேவலமாய், பூமிக்கு இதய கமலமாய், யாவருக்கும் புகலிடமாய், சாக்கிராதீதம் கழன்ற சுத்தமாய், பரஞ்னமாய், காணுந்தொறும் காணுந்தொறும்

புதுமையாயிருப்பதாய், சத்தியஞான ரூபமாய், சுழுமுனா மார்க்கத்தில் எழுந்தருளியிருக்கிற பிரகாசமான ஞானமாய், தன்னைத் தரிசித்தவர்களுக்கு ஞானானந்தத்தைத் தோற்றுவிக்கும் பொருளாய், பசு பாச ஞானம் நீக்கியிருப்பதாய், எவற்றிற்கும் இடம் கொடுப்பதாய், பத முத்திகளைக் கைவிட்ட இடமாய், மகாமாயைக்கு மேலாய், எப்பொழுதும் எல்லாப் பாதத்திலும் விளங்கும் ஞானமாகிய சபையாய், சிவ சொரூபமாய், தத்துவாதீதராயுள்ள சிவபெருமான் செய்யும் அனவரத தாண்டவத்துக்கு அதிட்டானமாயிருப்பது இத்தலம் (வியாக்கிரபாதா. 29).

சிதம்பரத்தைச் சாமவேதிய சாந்தோக்கிய உபநிடதம் சத் என்றும், சபா என்றும்; கிருஷ்ண யசுர்வேதீய சுவத ரோபநிடதம் பரம்என்றும், சத்தியம் என்றும் ; வாசசநேய பிருகதாரணியோபநிடதம் மகத் என்றும்; கைவல்லியோப நிடதம் விவிக்தம் என்றும், அற்புதம் என்றும்; சாந்தோக்கி யோபநிடதம் புண்டரீகம் என்றும்; தைத்திரியோபநிடதம் குகை என்றும், ஞானானந்தம் என்றும், பரமவியோமம் என்றும், பரமாலயம் என்றும்; பிருகதாரணியோபநிடதம் சுத்தம் என்றும்; தலவகாரேடதம் சத்தியமாயதனம் (சத்தியா ஸ்பதம்) என்றும் கூறுவனவாம் என்பர் பெரியோர். இருதயகமலம், இரவிவிம்பம் முதலிய எவ்வெவ்விடங்களில் சிவபெருமானைத் தியானிக்கினும் அவ்வவ்விடங்கள் அனைத்தினும் சோதிமயமாகிய கைலாசத்தை விபாவித்து அதன்மத்தியில் இருப்பவராகச் சிவபெருமானைத் தியானிக்க என்றும் சிகரிணிமாலையுடையார் கூறுவர்.

தாவரமான அண்டசிருட்டியும் சங்கமமான பிண்ட சிருட்டியும் ஒக்கும். ஆகையால், சரீரத்திலே இடைநாடி இடத்திலும் பிங்கலைநாடி வலத்திலும் சுழுமுனைநாடி நடுவிலும் போமாறுபோல, இந்தப் பரதகண்டத்தில் இடைநாடி இலங்கைக்கு நேரேபோம்: பிங்கலை நாடி நன்றாக உயர்ந்த இமயமலைக்கு நேரே போம் இந்த இரண்டு நாடிக்கு நடுவே சுழுமுனை நாடி போம். அந்தச் முனைநாடி தில்லைவனத்தில் சென்று செவ்வே கூடும். அங்கே நிலைபெற்ற அம்பலம் ஒன்றுண்டு. அங்கே இறைவர் அனவரததாண்டவம் செய்தருளுவர் (பதஞ்சலி. 70,71,72).

"அம்பல மாவது அகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்

அம்பல மாவது அஞ்செழுத் தாமே." (54)

"இடைபிங் கலையிம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாம் சுழுனை
கடவுந் திலைவனம் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமே ." (35)

"பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதி யோன் பயில்திரு வம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையி னீறே." (27)

என்னும் திருந்திரப் பாடல்கள் திருக்கூத்துத் தரிசனம் முழுதும் சிந்திக்கத்தக்கனவாக அமைந்துள்ளன.

யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் எழுதிய பெரியபுராண சூசனத்துச் ' சிதம்பரத்தினது மகிமை' என்னும் பகுதி நோக்கி விரிவாக அறியலாம்.

"சாந்தோக்யோபநிடதத்திலே பிரமபுரமாகிய இச்சரீரத்தில் உள்ள தகரமாகிய புண்டரீக வீட்டினுள்ளே இருக்கும் ஆகாசம்" என்பது முதலாகத் தகரவித்தைக் கூறப்பட்டது. இங்கேஆகாசம் என்றது பிரமமாகிய சிவத்தை என்க. புறத்தும் இவ்வாறே இப்பிரமாண்டம் பிரமபுரம் எனவும், இப்பிரமாண்டத்தினுள்ளே இருக்கும் தில்லைவனம் புண்டரீகவீடு எனவும் இத்தில்லைவனத்தில் நிருத்தம் செய்யும் சிவம் ஆகாயம் எனவும் கூறப்படும். இவ்வாகாசம் பூதாகாசம்போலச் சடமாகாது சித்தேயாம்; ஆதலால் சிதம்பரம் எனப்படும். இச்சிதம்பரம் எந்நாளும் நீக்கமின்றி விளங்கும் தானமாதலால். இத்தில்லையும் சிதம்பரம் எனப் பெயர்பெறும்.

இத்தகரவித்தையைஉபாசிக்கும்முறைமைகைவல்லியோப நிடதத்தில் சிவனது தகரோபாசனாவிதிப் பிரகரணத்திலே "ஏகாந்த ஸ்தானங்களிலே சுகாசனத்தில் இருந்து, சுத்தனாகி, நேராகிய கழுத்துத் தலை உடம்புகளை உடையனாய், அத்தியாச்சிரமஸ்தனாய், இந்திரியங்கள் அனைத்தையும் அடக்கி, பத்தியால் தனது ஆசிரியரை இறைஞ்சி, இருதய புண்டரீகத்தைத் துகளற்ற சுத்தமாகக்கருதி, அதன் மத்தியத்திலே தெளிவுடையவராய்,சோகம் இல்லதாவராய் எண்ணப்படாதவராய், வெளிப்படாதவராய், அனந்த ரூபராய்,சிவனாய், அமிர்தராய்,பிரம்மயோனியாய்,தத்பதமாய்,ஆதிமத்தியாந்த விகீனராய், ஏகராய், விபுவாய், சிதானந்தரூபராய், அரூபராய், அற்புதராய்,

உமாசகாயராய்,பரமேசுவரராய். பிரபுவாய். முக்கண்ணராய். நீலகண்டராய் . பிரசாந்தராய் . பூதயோனியாய். சமஸ்த சாட்சியாய் இருப்பவரைத் தியானித்து. (அதனால்) முனியாகி. இருளின் மேற் போவான். அவர் பிரம்மா: அவர் சிவன்: அவர் இந்திரன்: அவர் அழிவற்றவர்: மேலானவர்: சிவப்பிரகாசர்: அவரே விஷ்ணு. அவர் பிராணன். அவர் காலன்,அக்கினி அவர் சந்திரன்: அவரே இருந்ததும்: இருப்பதுமாகிய் எல்லாமானவர்: என்றும் உள்ளவர். அவரை அறிந்து. (அதனால்) மிருத்தியுவைக் கடப்பன். முத்திக்கு வேறு வழியில்லை" என்று கூறப்பட்டது. இதனால் பிரம விஷ்ணு ருத்திரர்களோடு கூடிய சகல சகத்தும் சிவனது விபூதியே. ஆதலின் சிவனே சருவோற்கிருஷ்டர் என்பது தெளிவுறுத்தப்பட்டமை காண்க. மிருத்தியு என்பது ஆணவமலம்: அது மிருகேந்திரத்தில் கண்டது.

மானவ புராணத்து ஆறாம் அத்தியாயத்தில் "முன்னே சத்தியாபராயணனாகிய ஆசுவலாயனமுனி. பகவானும் பரமேஷ் டியுமாகிய செகந்நாதரை அடைந்து" என்றற்றொடக்கத்தால் ஆசுவலாயனர் வினாவினமைகூறி. அதற்குப் பரமேஷ்டி விடைக் கூறினமை சொல்லத் தொடங்கி. "எண்ணப்படாதவராய் வெளிப்படாதவராய்" என்பது முதலாக விரிவாகச் சிவத்தியானப் பிரகாரத்தைக் காட்டி. "இப்படி முனியானவன் நேரே சாட்சியாய். இருளைக் கடந்தவராய். பூதயோனியாய் புரப்பகைவராய் இருப்பவரைத் தியானித்துத் தனது ஆத்தும வித்தையினால் முத்தியடைவன். தியானிக்கப்படும் பொருளாகியவர் சாம்பசிவன்: சநாதநர். பிரமா விஷ்ணு முதலிய ரூபங்களாகக் கூறுபட்டாற்போல் இருப்பர். அவர் பிரமா. அவர் சிவன் என்று தொடங்கி. " அவரை அறிந்து மிருத்தியுவைக் கடப்பான். அவரைப் பிரத்தியகான்மாவாக அறியும் அறிவேயன்றி முத்திக்கு வேறு வழியில்லை என்னும் துணையால் இந்தச் சுருதிப்பொருளே காட்டப்பட்டது. பிரமகீதையிலும் இப்பொருளே உணர்த்தப்பட்டது.

கோயில் என்னும் சிதம்பர தலம் சோழநாட்டுத் தலங்களுள் ஒன்று. இது காவிரிநதியின் வடபால் உள்ள தலமாம். இது தேவாரம் பெற்றது. இந்தத் தலத்துக்கு இந்நூலுள் வந்த பெயர்கள் மன்று. அமலம். சத்து. உம்பர். இரண்மயகோசம். மகத். தனி. புண்டரிகம். குகை. வண்ககனம். சுத்தம். பரம். அற்புதம். மெய்ப்புதம். சுழுனாவழி. ஞானசுகோதயம். சிதம்பரம். முத்தி. பரப்பிரமம்.

சபை. சத்தி. சிவாலயம் என்பன. இவைகாரணப் பெயர்களாம் (பக்கம்.29 காண்க). பூலோக கைலாயமாகிய இத்தலம் திருவிளக்கு. திருவாயில். திருவலகு. திருவடிநிலை. திருக்கோவில் என வழங்கும். இத்தொடக்கத்தன எல்லாம் திரு என்னும் அடையடுத்துவர அடைகொடாமல் கோயில் என்றே வழங்கப்பெறும். அடைகொடுப்பின் பிறகோயில் முதலியவற்றுடன் இதனையும் ஒப்பித்ததாம். ஆகலான். இதற்கு அடைகொடாமையே இதனை வளக்கிநின்றதென்க.

இத்தேகத்துக்குப் பிரமபுரம் என்றொரு பெயர் உள்ளது. அதில் சூக்குமாதி சூக்குமமாய் தூலாதிதூலமாய் ஒரு ஆகாயம் உண்டு. அதனையே சிவயோகிகள் தியானிப்பர். அவ்வாறே புறத்திலுள்ள பிரமாண்டத்திலும் பஞ்சபூதங்கள் உள்ளன. அவற்றுள். பிருதிவி - காஞ்சி. அப்பு - திருவானைக்கா. தேயு - திருவண்ணாமலை. வாயு - திருக்காளத்தி. ஆகாயம் - சிதம்பரம் என்பர். திருவாரூரைப் பிருதிவித்தலமாகவும் கொள்வர். மற்றும் சூரியன் எங்கு பிரகாசித்தாலும் அதன் பிரகாசத்தை ஆகாயத்தில் காண்பது அருமை. அந்த பிரகாசம் மரம் முதலியவற்றினும் கண்ணாடி முதலியபொருள்களில் காந்தி அதிகமாயிருக்கும். அதனினும் படிகத்தில் அதிகமான ஒளி உண்டு. அதனினும் சூரியகாந்தக்கல்லிலே ஒளியின் அதிகத்தைக் காண்கிறோம். அதுபோல மற்றெல்லாத் தலங்களிளும் சிதம்பரதலத்திலே சிவவிளக்கம் அதிகமாயிருத்தலின் "கோயில்" என்றே சிறப்பித்துக் கூறப்படும். இத்தலம் தில்லைவனம். பெரும்பற்றப்புலியூர் எனவும் வழங்கும்.

## வடமொழி நூல்கள்

இத்தல வரலாறுகளை தெரிவிக்கும் நூல்கள் வடமொழியிலே பலவுள. அவற்றுள் சில வருமாறு :- 1.சிதம்பர ரகசியம். 2.சம்மேளனப் பிரஸ்தாரம். 3. ரகசியப் பிரணவ பிரகார லட்சணம். 4. மகா ரகசியத்தான லட்சணம். 5. தில்லைவன மான்மியம் 6. வியாக்கிரபுர மான்மியம். 7. புலியூர் மான்மியம். 8. புண்டரிகபுர மான்மியம். 9. சிதம்பர மான்மியம். 10. ஏக சபாநாத மான்மியம். 11. ஆகாச பைரவ கற்பம். 12. சிதம்பர ரகசிய மந்திர உபாசனாகற்பம். 13. சிந்தாமணி மந்திரம். 14. சிதம்பர பஞ்சாட்சர கற்பகம். 15. சித்சபா கைங்கரிய ஸ்வதந்திர சக்தி.

16.சித்சபா சம்புரோக்ஷண சூத்திரம். 17.சித்சபா சம்புருபுரோக்ஷன கற்பகம்,18.சித்சபா சம்புரோக்ஷண கவிதை, 19.சித்சபா சம்புரோக்ஷண பாஸ்யம், 20.சிதம்பர கற்பம், 21.சித்சபா பிரதிஸ்டா மான்மியம், 22. நடராஜசகஸ்ரநம தோஸ்த்திரம்.23.சிதம்பரகவசம்.24.சிதம்பர தீக்ஷித ஸ்தோத்திரம், 25.சிதம்பராஷ்டகம், 26.நடேசஸ்டகம், 27.நடேச ஸ்தோத்திரம், 28.நடேச சிந்தாமணி,29. நடராஜ திக்பந்தனம், 30.சிதானந்தாஷ்ட ஸ்தோத்திரம், 31. சிதம்பரேஸ்வராஷ்டகம், 32. சிதம்பரேஸ்வர புஜங்காஷ்டகம், 33. சிதானந்தசாரம், 34.நடேசவிஜயம், 35. பதஞ்சலி சரித்திரம், 36. சபாபதி விலாச நாடகம் முதலியனவும் பிறவுமாம் என்பர்.

**திருமுறைகள் :**

இத்தலத்தைப் பற்றியனவாகச் செந்தண்டமிழ் மொழியிலே திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம் இரண்டு திருப்பதிகங்கள், திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம் எட்டுத் திருப்பதிகங்கள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் ஒரு திருப்பதிகம் ஆகப் பதினொரு திருப்பதிகங்கள் உள்ளன.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அருளிசெய்தனவாகத் திருவாசகத்தில் : கீர்த்தித் திரு அகவல், திரு அண்டப்பகுதி, போற்றி திரு அகவல், திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து, திருத்தசாங்கம், கோவில் மூத்த திருப்பதிகம், கோவில் திருப்பதிகம், கண்டபத்து, அச்சப்பத்து, குலாப்பத்து, எண்ணப்பதிகம், யாத்திரைப்பத்து, திருப்படையெழுச்சி, திருப்படையாட்சி, ஆனந்தமாலை, அச்சோப்பதிகம், திருச்சிற்றம்பலகோவையார் முதலியன.

**திருவிசைப்பாவில்** : திருமாளிகைத்தேவர் 4, கருவூர்த்தேவர் 1,பூந்துருத்தி நம்பிகாட நம்பி 1, வேணாட்டடிகள் 1,திருவாலியமுதனார், 4. புருடோத்தம நம்பி 2,சேதிராயர் 1,ஆகப்பதினான்கு திருப்பதிகங்கள் உள்ளன.

சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு.

**திருமந்திரத்தில்** : திருவம்பலச் சக்கரம், திருக்கூத்து தரிசனம் முதலியன.

**பதினோராம் திருமுறையில் :** பொன்வண்ணத்தந்தாதி, கோவில் நான்மணிமாலை, கோயில் திருப்பண்ணியர் விருத்தம் என்பன.

**பெரியபுராணம் :** இது தில்லையிலிருந்தே பெருமான் அடியெடுத்துக்கொடுக்கப் பாடியதாகலின் முழுதுமே ஆங்காங்கே தில்லையின் பெருமையைக் கூறும்.

**தலபுராணங்கள்**

**கோயிற்புராணம் :** இதனை அருளிசெய்தவர்கள் தில்லை வாழ்ந்தணர்களுள் ஒருவராயிருந்து ஸ்ரீ மெய்கண்ட சந்தானத்திலே மூன்றாங்குரவராகிய ஸ்ரீ மறைஞான சம்பந்தர் பால் ஞானோபதேசம்பெற்றுப் புறச்சந்தான குரவருள் நான்கா மவராக எழுந்தருளியிருந்த கொற்றவன்குடி ஸ்ரீ உமாபதி சிவாசாரியராவார். இந்தப் புராணம் வியாக்கிரபாதச்சருக்கம், பதஞ்சலிச்சருக்கம், நடராஜச்சருக்கம், இரணியவன்மச்சருக்கம், திருவிழாச்சருக்கம், எனும் ஐந்து சருக்கங்களையுடையது. காப்பு -1, பாயிரம் -28 ,உள்பட 415 திருவிருத்தங்கள் கொண்டது.

விநாயகர் காப்பு செய்யுளை முதற்கண் கூறி பாயிரத்தில் திருச்சிற்றம்பலத்தை மூன்று திருவிருத்தங்களால் துதித்துதிருச்சிற்றம் பலமுடையார், சிவகாமியம்மை, கற்பக விநாயகர் இளையப்பிள்ளையார் வணக்கங்கள் கூறியருளி, தேவார முதலிகள் மூவர், மாணிக்கவாசக சுவாமிகள், தில்லை வாழ்ந்தணர், மூவாயிரவர், சண்டேசுரநாயனார் முதலிய அடியார்களையும் துதிசெய்தனர். பின்பு திருநீற்றுச் சோழரையும் அகம்படித் தொண்டு செய்வோரையும் துதிசெய்தனர். மன்றில் நடங்காணுதற்கு வாய்ப்பாகவுள்ள இந்த உடம்பே உடம்பாம் எனவும், சிதம்பரத்திலே பிறந்த ஆன்மாக்களுக்கு தரிசனம் செய்த ஆன்மாக்களுக்கும் இறந்த ஆன்மாக்களுக்கும் முத்தி சித்திக்கும் எனவும், உயிர்பிணிக்கும் உடற்பிணிக்கும் மருந்தாவது தில்லையல்லது இல்லை எனவும் கூறியருளினர். 29 செய்யுட்கள் உள்ளன.

**வியாக்கிரபாதச்சருக்கத்தில்:** வியாக்கிரபாதர் மத்தியந்தண முனிவருடைய புத்திரரெனவும், வண்டுகள் உண்ணாமுன் மலர் பறித்து சிவபெருமானுக்குச் சாத்த வேண்டும் என்று தவங்கிடந்து புலிக்காலையும், நகத்திற் கண்களையும் பெற்ற வரலாற்றினையும் கூறும்.

தாருகவன முனிவர்கள் வரலாறும் விரித்தோதப்பெறும். தாருகவனத்தில் நடனமாடியமை குறிக்கத்தக்கது. தலத்தினுக்குள்ள வேறுபெயர்களும் காரணங்களும் விளக்கப்பட்டுள்ளன. 30 செய்யுட்கள் உள்ளன.

**பதஞ்சலிச் சருக்கத்தில் :** ஆதிசேடன் பதஞ்சலியாயினமை, நிலவுலகுக்கு வந்து வியாக்கிரபாதரோடு சென்று திருமூலட்டான மூர்த்தியை வழிப்பட்டிருந்து திருநடனம் தரிசித்தமை முதலியன கூறப்பட்டுள்ளன. 99 செய்யுட்கள் உள்ளன.

**நடராசச்சருக்கத்தில் :** தைப்பூசத்திலே வியாழக்கிழமை சித்தயோகத்தோடு கூடிய நன்னாளிலே வியாக்கிரபாதர், பதஞ்சலி முனிவர்கட்குத் திரோதானத்தை நீக்கி ஆனந்த சுபாவ நிருத்தத்தைத் தரிசிப்பித்ததும், அரிபிரம இந்திராதிகளுக்கும் தேவர்களுக்கும் வேதங்களுக்கும் ஆணவ அளவை விந்து அவத்தை நீக்கி திரோதானத்தில் அருளானந்தநிருத்தம் தரிசிப்பித்ததும், மூவாயிரம் முனிவர்கட்கும் கலாபந்தம் நீக்கி வைந்த வானந்தம் தரிசிப்பித்ததும் கூறப்பட்டுள்ளன. 33 ஆம் செய்யுளில் குடமுழா, கொக்கரை, தாளம், குழல், வீணை, படகம், கத்தரிக்கை, தடாரி, பணிலம், துடி, கரடிகை, சச்சரி முதலிய வாத்தியங்கள் பேசப்பட்டுள்ளன. கருப்பக்கிரகம் முதலிய இடங்களில் காவல் செய்வோர் இவர், தேவர், இருடியர் தேவமாதர், கணநாதர், மனிதர் முதலியோர் வந்து தரிசிக்கும் காலம் இது என்பதும் வகுக்கப்பட்டுள்ளன. பிரம்மதேவர் அந்தர்வேதியில் யாகம் செய்தமை முதலியனவும் இடம்பெற்றுள்ளன. 'பறப்பைப்படுத்தெங்கும் பசுவேட் டெரியோம்பும் சிறப்பர் வாழ்தில்லைச் சிற்றம்பலம்" என்பதனுள் பறப்பை என்பது யாது? என விளக்கும் குறிப்பு குறிப்பிடத்தக்கது. 71 செய்யுட்கள் உள்ளன.

**இரணியவன்மச்சருக்கத்தில் :** கௌட தேசத்து அரசனாகிய சிங்கவர்மன் ஒருவேடனைத் துணைக்கொண்டு தில்லைக்கு வந்து வியாக்கிரபாதரைத் தரிசித்தமை, சிங்கவன்மன் வந்தமையைப் பதஞ்சலி முனிவருடன் கூறிச் சிவபெருமானுக்கு விண்ணப்பித்தல் சிங்கவன்மனைச் சிவகங்கையிலே மூழ்குவித்து இறைவர் கட்டளைப்படி அழைத்துவருதல், பஞ்சாக்கர உபதேசம் செய்தல், ஆனந்த நடனத்தை இரணியவன்மனுக்குப் புலப்படசெய்தல் முதலியன கூறப்பட்டுள்ளன.

இச்சருக்கத்து 65 முதல் 75 வரை முத்தித்தலங்கள், தில்லையின் பெயர்கள், தரிசித்து முத்தரானோர் என்பன விளக்கப்பட்டுள்ளன. மார்கழித்திருவாதிரைத் திருநாட்சிறப்பு, உபமன்னிய முனிவர் சைமினா முனிவர் சிதம்பரநிருத்தம் தொழுது வேதபாத ஸ்தவம் செய்தமை, மாசிமகத்திலே, கடலில் பாசமறுத்தான் துறையில் தீர்த்தம் கொடுத்தல் ( 82 ), சிதம்பரதல நவதீர்த்தங்கள், வியாக்கிரபாத முனிவர் இரணியவன்மனைப் புத்திரனாகவே கொள்ளுதல் வசிட்டமுனிவரை காணல், சைவசிரேட்டர் வியாக்கிரபாதர் வைதிகசிரேட்டர் வசிட்டர் என்பது, விசிட்டருடன் கௌடதேசம் செல்லல், மூவாயிரவரை அழைத்துவரல், கொற்றவன்குடிமுதலியவைகள் விவரிக்கப்பட்டுள்ளன.இந்தச்சருக்கத்தில் ஆங்காங்கே சைவ சித்தாந்த நுண்கருத்துக்கள் பல விளக்கப்பட்டுள்ளன. 133 செய்யுட்கள் உள்ளன.

**திருவிழாச்சருக்கத்தில்:** இரணியவன்மன், தம்பிமார்களின் அரசுரிமை,விவாகம், சிங்காதனம் ஏறல், அம்பலம் பொன் வேய்ந்தமை (16,17), கனகாலயம் கண்டமை, பதஞ்சலி அருளிய சித்தாந்தரத்நாவளி, வசந்தவிழா, சித்திரை - கொழுந்து சாத்தல், ஆடி - புதுப்புனலாடல், பவித்திரம் சாத்தல், ஐப்பசிப் பூரம், தீபோற்சவம், மார்கழித் திருவாதிரை, தைப்பூசப் பாவாடை, ஆனித்திருநாள், இரதோற்சவம், மாசிமகம் முதலிய திருவிழாக்கள் கூறப்பட்டுள்ளன. 16,17ஆம் பாடல்களில் ஆலயம் கட்டும் முறை உரையாசிரியர் விரித்தமை சிந்திக்கத்தக்கது.

**கருக்கிரக உறுப்புகள் :** உபானம், பத்மம்; குமுதம், காந்தம், அக்ரப்பட்டியல், அசுவபாதம், சிங்கம், பத்மபந்தம், கலசம், குடம், பலகை, போதிகை, கபோதம், யாளம், கால், கிரீவாம், சிகரம், ஸ்தூபி என்பன குறிப்பிடத்தக்கவை. இஃது உரையாசிரியர் உரைவிளக்கமாகும்.

**சுவாமி திருநாமங்கள் :** நடராஜர், நிருத்தர், நிருத்தராசர், கருமூலகரன், ஆனந்த ஒளி, தேவர்கள் தேவன், தில்லை நடராசர், நடமாடும் திருவாளன், ஞானச்செவ்வொளி என்பனவும் பிறவும். மூலட்டானேசுவரர் என்பது சிவலிங்க திருமேனி.

**அம்பிகை :** சிவகாமியம்மையார்.

**தலப்பெயர் :** புலியூர், பெரும்பற்றப்புலியூர், புலிச்சரம், திருச்சிற்றம்பலம், சிற்பரமாம், அம்பரம், தில்லைமன்று தில்லைத் திருச்சிற்றம்பலம் என்பன.

**தீர்த்தம் :** சிவகங்கை, குய்யதீர்த்தம் (பாசமறுத்ததுறை), புலிமடு, வியாக்கிரபாத தீர்த்தம், அனந்த தீர்த்தம், நாகசேரி, பிரம்ம தீர்த்தம, சிவப்பிரியை, திருப்பாற்கடல், பரமானந்தகூபம் முதலியன.

**தலவிருட்சம் :** தில்லைமரம்

**வழிபட்டுப் பேறுபெற்றோர் :** வியாக்கிரபாத முனிவர், பதஞ்சலி முனிவர், உபமன்னியு முனிவர், திருவுடையந்தணர்கள், வியாச முனிவர்,சுகமுனிவர், சௌனக முனிவர், சைமினி முனிவர், சூதமுனிவர் முதலாயினோர்.

**சிதம்பர புராணம்:** இது புராணத்திருமலைநாதரால் இயற்றப்பெற்றது. மான்மியச்சருக்கம், துன்மதச்சருக்கம்,நியமச்சசுருக்கம்,பாயிரத்துடன்

சோமநாதச்சருக்கம், தீர்த்தச்சருக்கம் திருச்சிற்றம்பலச்சருக்கம், சமாதி ச்சருக்கம், துற்றெரிசனச்சருக்கம், என்னும் பத்துச்சருக்கங்களையும் 813 செய்யுட்களையும் உடையது.இதற்குப் பழைய உரை ஒன்று உண்டு. ஸ்ரீ ஆறுமுகநாவலவர்களின் மாணவர் ஸ்ரீஇராமலிங்கபிள்ளை அவர்களால் (சென்றவிசுவாவ வருடம்) புத்துரையொன்று செய்யப்பெற்று அச்சிடப்பட்டுள்ளது.

**புலியூர்ப் புராணம்:** இது யாழ்பாணத்துத் தெல்லிப்பிழை சிவானந்தையர் என்பவரால் இயற்றப்பெற்றது. இதன் செய்யுட்தொகை 1205.1906 இல் அச்சிடப்பெற்றது.

**சிதம்பர சபாநாத புராணம்:** இது திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதினத்து வித்துவசிகாமணி சபாபதிநாவலர் அவர்களால் இயற்றப்பெற்றது.காப்பு, கடவுள் வாழ்த்து,நாட்டுப்படலம்.

நகரப்படலம், நைமிசப்படலம், புராண வரலாறு, பிச்சாடனப்படலம், தேவதாருவனப்படலம், அனந்தப்படலம், புண்டரீகபுரப்படலம், வியாக்கிரபாதப்படலம், திருநடனப்படலம்,ஏமவன் ம படலம்,தீர்த்த விசேடப் படலம், யாத்திரோற்சவப்படலம் என்னும் பதின்மூன்று படலங்களைப் பெற்று விளங்குவது.இதன் செய்யுட்தொகை 898. சென்ற பார்த்திப ஆண்டிலே அவர்களாலேயே இந்நூல் பதிப்பிக்கப்பெற்றது. இது வடமொழியிலுள்ள ஏமசபாநாத மான்மியத்தின் தமிழ்மொழிபெயர்ப்பாகும்.

சாத்திரங்கள் :

**திருக்களிற்றுப்படியார்:** திருக்கடவூர் உய்யவந்ததேவ நாயனாரால்அருளிச்செய்யப்பெற்றுப் பஞ்சாக்கரப்படியில்வைக்க,அதனைப் படியிலுள்ளதிருக்களிற்றுக்கை நிமிர்ந்து ஸ்ரீ ஆனந்தகூத்தருடைய திருவடிகளில்வைக்கப்பெற்றதெய்வீகமுடையது.கொடிக்கவி, திருக்களிற்றுப்படியார் இவ்விரண்டும் மெய்கண்ட சாத்திரங்களில் வைத்து எண்ணப்படுவன.

**கொடிக்கவி :** ஸ்ரீ நடராஜப்பெருமான் திருக்கோயில் கொடி ஏறும்பொருட்டு ஸ்ரீ உமாபதிசிவாசாரிய சுவாமிகளால் அருளிச்செயப்பெற்றது. நான்கு பாடல்கள் கொண்டது.

**பிரபந்தங்கள்:** கோயில் நான் மணிமாலை ஸ்ரீ பட்டினத்தடிகள் அருளியது.

**பொன்வண்ணத்தந்தாதி :** சேரமான் பெருமாள்நாயனாரால் அருளிச்செய்யப்பெற்றது.

**கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம் :** நம்பியாண்டார் நம்பிகள் அருளியது.

**தில்லைக்கலம்பகம் :** இரட்டையர் பாடியது.

**தில்லையுலா :** பாடியோர் பெயர் தெரிந்திலது.

சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை ஆகிய நூல்கள் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளால் அருளிச்செய்யப்பெற்றவை.

**புலியூர் வெண்பா :** தில்லைவிடங்கன் ஸ்ரீ மாரிமுத்துப் பிள்ளையவர்களால், அவருடைய இரண்டாம் குமாரனுக்கு நேர்ந்த சித்தப்பிரமை தீரப் பாடப்பெற்றது.

**சிதம்பர வெண்பா :** திருவண்ணாமலை ஸ்ரீ குகை நமச்சிவாயரால் இயற்றியருளப்பெற்றது.

**தில்லை யமகவந்தாதி :** திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்றது.

**நடேசர் திருவருட்பா :** தருமபுர ஆதீனத்துப் பத்தாங்குரு

மூர்த்தியாக எழுந்தருளியிருந்த ஸ்ரீ சிவஞானதேசிக ஞான சம்பந்த பரமாசாரிய சுவாமிகளால் அருளப்பெற்றது.

**நடராச சதகம் :** தருமபுர ஆதீனத்து முனிவர்குழாத்தில் உள்ள ஸ்ரீ சிதம்பரநாத முனிவரால் அருளிச்செய்யப்பெற்றது.

**ஸ்ரீ நடராசர் திருப்புகழ் :** மாயூரம் கிருஷ்ணையர் பாடியது.

ஸ்ரீ சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ், சிவகாமியம்மை பதிகம், பரமராசியமாலை முதலியவைகளும் உள்ளன.

மற்றும் பல பெரியோர்களால் பாடப்பெற்ற தனிப்பாடல்களும் மிகப் பலவுள.

**தில்லையில் உள்ள ஐந்து சபைகள் :**

**கனகசபை : பொன்னம்பலம். சிற்சபை :** ஸ்ரீ நடராசமூர்த்தி ஏழுந்தருளியுள்ள இடம்; இது பராசத்தி வடிவம் : **சிற்றம்பலம்** என்பது இதுவே. **நிருத்தசபை :** ஊர்த்துவ தாண்டவமூர்த்தி எழுந்தருளியுள்ள இடம்; ஸ்ரீ நடராசமூர்த்தி சந்நிதியிலுள்ள கொடிமரத்தின் தென்பால் உள்ளது; குதிரைகள் பூட்டப்பெற்ற தேர்வடிவில் அமைந்தது. **இராசசபை;** ஆயிரங்கால் மண்டபம்; ஸ்ரீ நடராசமூர்த்தி ஆனி, மார்கழி மாதங்களில் இங்கு அபிஷேகம் கொண்டருளுவர். **தேவசபை;** பேரம்பலம் என்பது இதுவே. உற்சவ மூர்த்திகள் எழுந்தருளிருக்கின்ற இடமும் இச்சபையே. மற்றும் ஐவகைமன்றுகள் உள்ளன. அவை : இரத்தினசபை - திருவாலங்காடு, கனகசபை - தில்லை, இரசதசபை -மதுரை, தாமிரசபை-திருநெல்வேலி, சித்திரசபை- திருக்குற்றாலம். கந்தபுராணகாரர், “ஐவகை மன்று தொறாடிய வள்ளல்” என்பர்.

இரகசியத்தானம் அருவம், ஸ்ரீ நடராசமூர்த்தி உருவம், ஸ்படிகலிங்கம் அருவுருத் திருமேனிகள்.

**ஆனந்த நடனம் :** ஐந்தொழில் நடனம் என இந்த நடனம் பேசப்படும். இறைவர் செய்யும் நடனம் ஐந்தொழில்நடனமாமாறு; உடுக்கை பொருந்திய திருக்கரம் சிருட்டியைக் காட்டும். அமைத்த திருக்கரம் காத்தலைக் குறிக்கும்.அக்கினி பொருந்திய திருக்கரம் அழித்தலை உணர்த்தும். ஊன்றிய திருவடி ஆன்மாக்களை உலக போகத்திலே அழுத்துமாறு தெரிக்கும். எடுத்த பொற்பாதம் ஆன்மாக்களைப் பிறவிப் பெருங்கடலினின்று முத்திக்கரையில் சேர்ப்பதை நினைவூட்டும்.

மற்றும் ஸ்ரீ நடராசமூர்த்தி சிற்சபையைவிட்டு எழுந்தருளல் படைத்தலையும், இரட்சாபந்தனம் செய்தல் காத்தலையும், கிருஷ்ணகந்தம் சாத்துதல் அழித்தலையும், வெள்ளை சாத்துதல் மறைத்தலையும், திருவிழாக் கொண்டருளல் அனுக்கிரகத்தையும் குறிப்பனவாம் என்க.

**அபிடேக நாட்கள் :**

"சித்திரையில் ஓணமுதல் சீரானி யுத்தரமாம்
சத்ததனு ஆதிரையும் சார்வாகும் - பத்தி
மாசியரி கன்னி மருவு சதுர்த்தசிமன்(று)
ஈசரபி டேகதினம் ஆம்"

(தனு - மார்கழி, அரி - ஆவணி, கன்னி - புரட்டாதி.)

மார்கழி உஷத்காலம், மாசி காலைச்சந்தி, சித்திரை உச்சக்காலம், ஆனி பிரதோஷகாலம்,ஆவணி மாலைச்சந்தி, புரட்டாசி அத்தயாமம் ஆகிய இவை தேவதினத்தில் நடைபெறும் ஆறு கால பூசையாம்.

இத்தலத்துக்குரிய ஆகமம் மகுடாகமம்; இதனை இரட்டையர் வாக்கினும் காண்க.

இத்தகைய மிகப்பெரும் சிறப்புவாய்ந்த தில்லை என்னும் சிதம்பர தலத்தைப்பற்றிய இக்கோயற்புராணத்தின் அச்சிட்ட பழம் பிரதி ஒன்று அடியேன் சிதம்பரம் ஸ்ரீ மீனாட்சி தமிழ்க்கல்லூரியிலும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் வித்துவான் 7 B தமிழ் பைனல் (Final) 1930இல் படித்து வருங்காலத்துச் சிதம்பரம் தெற்கு வீதியிலிருக்கும் ஸ்ரீ வேங்கடேசதீட்சிதர் அவர்களிடம் பழகி வரும்பொழுது அவர்கள்பால் இருந்தமையைக்கண்டு, அதனைப்பெற்றுப்படித்து,

மூலத்தையும்பொழிப்புரையையும் பிரதிசெய்துகொண்டேன். படிக்கப் படிக்கத் தெவிட்டாத இனிய சுவைப்பாடல்களை என் அன்பரும்,என்னுடன் கல்லூரியில் பயின்றுவந்தவருமாகிய வித்துவான், ஸ்ரீ பொ.கோவிந்த மூப்பனாருடன் அடிக்கடி படித்துச்சுவைத்து மகிழ்வதுண்டு. அப்பழைய புத்தகம் 1867 ஆம் ஆண்டு காஞ்சிபுரம் மகாவித்துவான்

ஸ்ரீ சபாபதி முதலியார் அவர்களால் திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதிகளைக் கொண்டு பரிசோதிக்கப்பட்டு மூலமும் பொழிப்புரையுமாகப் பதிக்கப்பட்டுள்ளது. அதன்பின் யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்களால் பரிசோதிக்கப்பெற்று, அவர்கள் செய்த புத்துரையுடன் 1867இல் அச்சிடப்பெற்றுள்ளது. அதன்பின், சென்னை வித்துவான் ஸ்ரீ சுப்பராயநாயக்கர் அவர்கள் மேற்கூறிய பழையவுரையை 1890இல் பதித்து வெளியிட்டார்கள். காலயுத்தி வருடம் ஸ்ரீ ஆறுமுகநாவலர் அவர்கள் மாணவர் ஸ்ரீ சதாசிவப்பிள்ளை அவர்களால் மூலபாடம் மட்டும் அச்சிடப்பட்டுள்ளது.

இங்ஙனமாக, அடியேன் திருவாவடுதுறைப் புத்தகசாலையாகிய சரசுவதி மஹால் நூல்நிலையத்தில் மேற்கண்ட அச்சிட்ட பிரதிகள் அனைத்தையும் கண்டேன். பழைய உரையுடனே கூடிய அச்சிடமுயற்சித்தேன். திருவருளும் குருவருளும் கூட அதனை நன்கு ஆராய்ந்து செவ்வியல்முறையில் அச்சிட எண்ணி ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானத்திலே வணக்கத்துடன் விண்ணப்பம் செய்துகொண்டேன்.

ஸ்ரீ ல ஸ்ரீ மகாசந்நிதானம் அதனைத் திருச்செவிசாய்த்து 'நம் ஆதீனத்துப் பூஜா மூர்த்தியாகிய ஸ்ரீ ஞானமாநடராசருடைய தொடர்புள்ள கோயிற்புராணம் சந்தானகுரவருள் ஒருவராகிய ஸ்ரீ உமாபதி தேவநாயனாரால் அருளிச்செய்யப்பெற்றது; ஆயினும், இந்த நடராசமூர்த்தி அந்த ஞானாசாரியருடைய பூசாமூர்த்தியாதலின் பெரிதும் தொடர்புடையது இஃதல்லாமலும் நம் ஆதீனத்து மகாவித்துவானாக விளங்கியத் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் ஆசிரியருள் ஒருவராகிய காஞ்சிபுரம் மகாவித்துவான் சபாபதி முதலியார் அவர்களால் இவ்வுரை அச்சிடப்பெற்றது. இத்தொடர்புகளை எல்லாம் சிந்தித்தல் வேண்டும். உடனே நன்கு அச்சிட்டு முடிக்க எனக் கட்டளையிட்டருளினார்கள். அவ்வாணையைச் சிரமேற்கொண்டு ஒருவாறு இதனை அச்சிட்டு முடிக்கலாயிற்று.

இந்நூலின் உரையாசிரியர் பெயர் தெரியவில்லை. ஆயினும், உரையாசிரியர், வடமொழிப் பயிற்சி மிக்குடையவர்; சிவாமங்களிலும், சித்தாந்த சாத்திரங்களிலும், சிற்ப நூல்களிலும் நல்ல முறையான பயிற்சியுடையவர் என்பதை இரணியவன்மச் சருக்கத்தாலும், திருவிழாச் சருக்கத்தாலும் நன்கு அறியலாம்.

ஏனைய சருக்கங்களில் ஆங்காங்கே இடம்பெறும்பொழுதெல்லாம் சித்தாந்த சைவக்கருத்துக்கள் பல மிளிர்வனவாம்.

இருபத்தொராவது குருமகாசந்நிதானமாக இவ்வாதீனத்திலே வீற்றிருந்து சிவஞானச் செங்கோல் செலுத்தி, சிவக்ஷேத்திர குருக்ஷேத்திரபரிபாலனங்களும், செந்தண்டமிழ் பரிபாலனம் சித்தாந்தசைவசமயபரிபாலனங்களும்செய்து, ஆண்டுகள்தோறும் சிவராசதானியாக விளங்கும் திருவாவடுதுறையில் திருமந்திரமாநாடும் திருவெண்ணெய்நல்லூரில் சித்தாந்த சைவ மாநாடும் கூட்டி விரிவுரைவாயிலாகவும் நூல் உரைகள் இலவச வெளியீடுகள் வாயிலாகவும் செந்தமிழ் மக்களுக்குப் பெருங்கருணையுடன் சமய சாத்திர தோத்திர நூல்களின் சாரத்தை எளிதில் நுகரும்படி செய்வித்து, சிவஞானதான வள்ளலாக விளங்கி வரும் ஸ்ரீ லஸ்ரீ சுப்பிரமணிய தேசிகசுவாமிகள் கட்டளையிட்டருளியபடி வெளியிடப்பட்டுள்ளது. இதில் குற்றமுள்ளதாயின் பொறுத்தருள்க.

வழக்கம் போல் இந்த நூற்பதிப்பு வேலையில் ஈடுபட்ட சிரஞ்சீவி ஆர். இராமசேஷன், B.A., B.Ed., வித்துவான் திரு. ஆறுமுக தேசிகர் முதலியோருக்கும், ஸ்ரீ நமசிவாயமூர்த்தி அச்சக அலுவலர்கட்கும் எல்லாம் வல்ல ஸ்ரீ ஞானமாநடராசர் திருவருளும், குருவருளும் முன்னின்று பாதுகாத்தருளுக எனப் பிரார்த்திக்கின்றேன்.

திருவாவடுதுறை.
30.03.1965.

இங்ஙனம்
சித்தாந்த சைவமணி
**த.ச.மீனாட்சிசுந்தரம்பிள்ளை**
ஆதினவித்துவான்.

## நூலாசிரியர் வரலாறு

ஸ்ரீ உமாபதிதேவநாயனார் திருவுடைத் தில்லை வாழ்ந்தணர் திருமரபிலே அவதரித்தவர்கள். சிறுபருவத்திலே விதிப்படி வேதசிவாகமங்களை ஓதியுணர்ந்து சிவபுன்னியப்பேறு முதிரப்பெற்று விளங்கினார்கள். கற்றதனாலாய பயன் தில்லைச் சிற்றம்பலமுடையார் கழலிணைப்பூசையே எனத்துணிந்து தம் மரபுக்கு இயல்பாகவேயுள்ள ஸ்ரீ நடராசமூர்த்தியை நன்கு வழிபட்டு வருவாராயினர். கிரியாமார்க்கத்தில் தலைசிறந்து நாடோறும் செய்துவந்த சிவபூஜை பெரும் புண்ணியமும் பெருகி வளர்வதாயிற்று. கிரியை எனச் மரு வுமவையாவும் ஞானம் கிடைத்தற்கு நிமித்தம் எனச்சிவாகமங்கள் கூறுதலின் இருவினையொப்பும் மலபரிபாகமும் சத்திநிபாதமும் அவர்களிடம் தோன்றின.

உமாபதிசிவாசாரியார் வழக்கம்போல அம்பலவாணரைப் பூசித்துச் சிவிகை மேற்கொண்டு தமது திருமாளிகைக்கு அடியார் புடைசூழ விருதுகளுடன் ஒரு நாள் வீதியில் வருவாராயினர். அப்போது திருக்களாஞ்சேரியில் எழுந்தருளியிருந்து தமது ஞானசாரியார் ஆகிய ஸ்ரீ அருணந்தி தேவநாயனார் தமக்கு அநுக்கிரகம் செய்தவாறே தமது சீடர்களுக்குச் சிவஞான போதம், சிவஞான உபதேசமும் சிவஞான சித்தியார் முதலிய சித்தாந்த சாஸ்திரோபதேசங்களும் செய்தருளுபவர்களாகிய ஸ்ரீ மறைஞான சம்பந்ததேவ நாயனாருடைய திருவருட்பார்வைக்கு உமாபதிதேவர் இலக்காயினார். '**பட்டக்கட்டையில் பகற்குருடு ஒன்று சிட்டர் சூழ்தரச் செல்லுதல் பாரீர்**' என்றச் சொல் சிவிகையில் செல்லும் உமாபதிதேவர் திருச்செவியில் விழுந்தது. ஞானாசிரியர் திருவருட்பார்வையுடன் கூடிய இச்சொல் அவர் செவிற்பட்டவுடன் சிவிகையினின்று குதித்து ஓடி ஞானசிரியர் திருவடிகளில் அடியற்ற மரம்போல் வீழ்ந்து வணங்கினார்கள். தமக்கு ஞானோபதேசம் செய்தருளவேண்டும் எனப் பிரார்த்தித்து நிழல் போல நீங்காமல் சென்றார்கள். ஞானசாரியர் தமது திருமடம் நோக்கிச் செல்லுங்காலத்தும் உச்சியம் போது ஆயினமையின் நூற்பாவில் செலுத்தும்அக்கஞ்சியைத் தமது பசிக்கு கையில் ஏற்று உண்டருளினார். ஆசாரியர் முழுங்கையிலிருந்து வழிந்தொழுகிய மிச்சிற்கஞ்சியை உமாபதிதேவர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டார்.

சீடருடைய இருவினையொப்பு மலபரிபாகம் சத்திநிபாதக் குறிப்புக்களை அறிந்த ஞானகுரவர். அவருக்கு உமாபதி சிவம் என்னும் தீட்சாநாமம்செய்து, தமக்குக்கிடைத்தவாறே சிவஞானாபதேசமும் சிவஞானசித்தி முதலியசாஸ்திரோபதேசமும் செய்தருளி, சிவஞான நிட்டையில் அமர்ந்து திருக்களாஞ்சேரியிலேயே சிவபரிபூரணமாயினர். பின்பு உமாபதி சிவம் சிவகுரு அநுக்கிரகம்பெற்றுத் தமக்குரிய சாதியாசாரத்தைக் கைவிட்டமை அறிந்து தில்லைவாழ்ந்தணர்கள் அவர்களைத் தமது கூட்டத்தினின்று விலக்கி ஸ்ரீ நடராஜப்பெருமான் பூஜையையும் செய்யவொட்டாமல் தடைசெய்தனர். உமாபதிசிவம் சிதம்பரத்துக்கு அண்மையில் உள்ள கொற்றவன் குடியிலே ஒரு திருமடத்தில் எழுந்தருளியிருந்தார்கள்.

ஸ்ரீ உமாபதி சிவாசாரியசுவாமிகள் பௌட்கரபாடியம் முதலிய வடமொழி உரைநூல்களும் செய்தருளினார்கள். மற்றும் சிவப்பிரகாசம், திருவருட்பயன், நெஞ்சுவிடுதூது, போற்றிப்பஃறொடை, உண்மைநெறி விளக்கம், கொடிக்கவி, வினாவெண்பா, சங்கற்ப நிராகரணம் என்னும் சித்தாந்த சாத்திர நூல்களையும் கோயிற்புராணம், சேக்கிழார் நாயனார் புராணம், திருத்தொண்டர் புராணசாரம், திருமுறைகண்ட புராணம், திருப்பதிகக்கோவை என்னும் நூல்களையும் அருளிச்செய்தார்கள். பெற்றான் சாம்பானுக்கும் முள்ளிச்செடிக்கும் முத்தியளித்தது முதலாகப் பற்பல அற்புதச்செயல்களையும் செய்தருளினார். இவர்கள் சங்கற்பநிராகரணம் செய்தருளிய காலம் சாலிவாகனம் 1235 என அந்நூலிலேயே குறிக்கப்பட்டுள்ளது. அது கி.பி. 1313.இவர்கள் ஒரு சித்திரை அஸ்தநாளிலே கொற்றவன்குடியிலேயே சிவபரிபூரணமாயினார்கள்.

**"இப்பிறப்பே சீவன்முத்தி யெய்துவிக்கும் மேற்பிறக்கும்**
**அப்பிறப்பும் இங்கே அறுத்தருளி - ஒப்பறவே**
**உண்மையருள் கொற்றங் குடிவாழ் உமாபதிதன்**
**வண்மையருட் கண்டோகைம் மாறு "**

திருச்சிற்றம்பலம்

அருள்மிகு பதஞ்சலிமுனிவர் அருளிய

# அருள்மிகு நடேசாஷ்டகம்

ஸதஞ்சிதம் உதஞ்சித நிகுஞ்சிதபதம்
ஜல ஜலஞ்சலித மஞ்ஜு கடகம்
பதஞ்சலி த்ருகஞ்ஜனம் அநஞ்சனம் அசஞ்சலபதம்
ஜனன பஞ் ஜனகரம்
கதம்பருசிம் அம்பரவஸம் பரமம் அம்புத
கதம்பக விடம்பக களம்
சிதம்புதி மணிம்புத ஹ்ருதம்புஜ ரவிம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 1

ஹரம் த்ரிபுரபஞ்ஜனம் அநந்த க்ருதகங்கணம்
அகண்டதயம் அந்தரஹிதம்
விரிஞ்சிஸுர ஸம்ஹதி புரந்தர விசிந்தித பதம்
தருண சந்த்ர மகுடம்
பரம் பதவிகண்டிதயமம் பஸிதமண்டித தநும்
மதன வஞ்சன பரம்
சிரந்தனம் அமும் ப்ரணத ஸஞ்சிதநிதிம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 2

அவந்தம் அகிலம் ஜகத் அபங்ககுண துங்கம்
அமதம் த்ருதவிதும் ஸுஸரித்
தரங்க நிகுரும்ப த்ருதிலம்பட ஜடம்
சமன டம்ப ஸுஹரம் பவஹரம்
சிவம் தசதிகந்தர விஜ்ரும்பித கரம்
கரல ஸன்ம்ருகசிசும் பசுபதிம்
ஹரம் சசிதனஞ்ஜய பதங்க நயநம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 3

அனந்த நவரத்ன விலஸத் கடக சிங்கிணி
ஜ்ஜலம் ஜ்ஜலம் ஜ்ஜல ரவம்
முகுந்த விதி ஹஸ்தகத மத்தள லயத்வனி
திமித்திமித நர்த்தன பதம்
சகுந்தரத வஹ்னிரத நந்திமுக தந்திமுக
ப்ருங்கிரிடி ஸங்க நிகடம்
ஸநந்த ஸனகப்ரமுக வந்திதபதம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 4

அனந்த மஹஸம் த்ரிதச வந்த்ய சரணம்
முனி ஹ்ருதந்தர வஸந்தம் அமலம்
கபந்த வியதிந்த்வவணி கந்தவஹவஹ்நி
மகபந்து ரவிமஞ்ஜு வபுஷம்
அனந்த விபவம் த்ரிஜகதந்தர மணிம் த்ரிணயநம்
த்ரிபுர கண்டன பரம்
ஸனந்த முனி வந்திதபதம் ஸகருணம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 5

அசிந்த்யம் அளிப்ருந்த ருசி பந்துர களம்
குரிதகுந்த நிகுரும்பதவளம்
முகுந்த ஸுரப்ருந்த பலஹந்த்ருக்ருத வந்தன
லஸந்தம் அஹிகுண்டலதரம்
அகம்பம் அனுகம்பிதரதிம் ஸுஜனமங்கள
நிதம் கஜகரம் பசுபதிம்
தனஞ்ஜய நிதம் ப்ரணதரஞ்ஜன பரம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 6

பரம் ஸுரவரம் புரஹரம் பசுபதிம் ஜனித
தந்திமுக ஷண்முகம் அமும்
ம்ருடம் கனக பிங்களஜடம் ஸனகபங்கஜரவிம்
ஸுமனஸம் ஹிமருசிம்
அஸங்க மனஸம் ஜலதிஜன்ம கரளம்
கள பயந்தம் அதுலம் குணநிதிம்
ஜனந்த வரதம் சமிதம் இந்துவதனம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 7

அஜம் க்ஷிதிரிரதம் புஜங்க புங்கவகுணம்
கனகச்ருங்கி தநுஷம் கரலஸ
த்குரங்க ப்ருதுடங்க பரசும் ருசிரகுங்கும
ருசிம் டமருகம்ச ததம்
முகுந்த விசிகம் நமதவந்த்ய பலதம்
நிகம ப்ருந்ததுரகம் நிருபமம்
ஹசண்டிகம் அமும் ஜ்ஜடிதி ஸம்ஹ்ருதபுரம்.
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 8

அனங்க பரிபந்தினம் அஜம் க்ஷிதி துரந்தரம்
அலங்கருண யந்தம் அகிலம்
ஜ்வலந்தம் அனலம் தததம் அந்தகரிபும் ஸததம்
இந்த்ர ஸுரவந்தித பதம்
உதஞ்சதர விந்தகுல பந்துசத பிம்பருசி
ஸம்ஹதி ஸுகந்திவபுஷம்
பதஞ்ஜலி நுதம் ப்ரணவ பஞ்சர சுகம்
பர சிதம்பர நடம் ஹ்ருதி பஜ. 9

இதிஸ்தவமமும் புஜகபுங்க வக்ருதம்
ப்ரதிதினம் படதி ய : க்ஙதமுக :
ஸத : ப்ரபு பதத்விதய தர்சனபதம்
ஸுலலிதம் சரணச்ருங்க ரஹிதம்
ஸர : ப்ரபவ ஸம்பவ ஹரித் பதிஹரி
ப்ரமுக திவ்யநுத சங்கரபதம்
ஸ கச்சநிபரம் நது ஜநுர் ஜலதிம்
பரம துக்க ஜநகம் துரிததம். 10





23 ஆவது குருமகா சந்நிதானம்

**சீர்வளர்சீர் கல்யாண சுந்தர**

**சிவப்பிரகாச பரமாச்சாரிய சுவாமிகள்**

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

## அருள்மிகு உமாபதி சிவாச்சாரியார்

அருளிச்செய்த

# கோயிற்புராணம்

உரையுடன்

**பொற்ப தப்பொது வார்புலி யூர்புகழ்
சொற்ப தப்பொரு ளாகுவ தூயவர்
அற்ப கற்றெழ வாழணி கோபுரக்
கற்ப கத்தினி யானை கழல்களே.**

இதன்பொருள் : சுத்தான்மாக்கள் வாதனையால் மயக்க விகற்பம் மேலிடாமல் இரவும் பகலும் வணங்க விளங்கும் மேலைக்கோபுர முன்புறத்து வாழ்ந்தருளும் ஒப்பற்ற யானை முகமுள்ள கற்பகவிநாகருடைய திருவடிகள், கனகமயமாக அழகுள்ள ஞானசபை பொருந்திய பெரும்பற்றப் புலியூரின் மான்மியத்தைப் புகழும் செய்யுட்பதங்கடோறும் பொருளாய் விளங்குவன என்றவாறு.

சிதம்பர மான்மியம் கூறும் செய்யுட்தங்களுக்குப் பொருளாய் நிகழ்வது அருள் என்பது தேற்றம்.

'பொற்பதப்பொது'என்பதற்கு நடேசமூர்த்தியின் செங்கமலப் பொற்பாதங்களுக்கு இடமாகிய ஞானசபை எனப் பொருள் கூறினும் அமையும்.தேவர்கள் வேண்டும் பொருள்களைக் கொடுக்கும் கற்பகவிருக்ஷம்போல் ஈண்டு அடியார்கள் வேண்டும் பொருள்களைப் பாலித்து அருள்வதினால் கற்பக விநாயகர் எனக் காரணப்பெயராய் நின்றது.

# பாயிரம்

## அருள்மிகு நடேசர் துதி

**பூங்கமலத் தயனுமலர்ப் புண்டரிகக் கண்ணானும்**
**தாங்குபல புவனமுமேற் சகலமுமா யகலாத**
**ஓங்குமொளி வெளியேநின் றுலகுதொழ நடமாடும்**
**தேங்கமழும் பொழிற்றில்லைத் திருச்சிற்றம் பலம்போற்றி.**

இ-ள் : பொலிவினையுடைத்தாகிய தாமரைமலர்மீதில் இருக்கும் பிரமனும், தாமரைமலர்போன்ற கண்ணினையுடைய மாயனும் (இவர்களாலே) சிருட்டித்துத் தாங்கப்படுகின்ற புவனங்களும் (மந்திர பத வன்ன தத்துவ கலாரூபங்களுமாகிய இவைகளை) நீங்காமல் நிறைந்திருகிற மிக்க பிரகாசமான சிவம் திரோதானம் நீங்கி நின்று, சார்வான்மாக்களும் கண்டு தொழும்படிக்கு நிருத்தம் செய்யும் மணங்கமழாநின்ற சோலைகளால் சூழப்பட்ட தில்லைத் திருச்சிற்றம்பலத்தைப் போற்றுகின்றேன் என்றவாறு. (1)

**ஆரணங்கண் முடிந்தபதத் தானந்த வொளியுலகிற்**
**காரங்கற் பனைகடந்த கருணை திரு வுருவாகிப்**
**பேரணங்கி னுடனாடும் பெரும்பற்றப் புலியூர்சேர்**
**சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம் பலம்போற்றி.**

இ-ள் : பாசசாலம் முடிந்த சிவபூமியில் ஒழியாத சுகப் பிரகாசமான சிவம் உலகத்தில் தனக்கு வேறொரு பிரதான காரணமும் நிமித்தகாரணமும் கடந்திருக்கிற காருண்ணியமே திருமேனியாகக் கொண்டு பரையினுடனே நிருத்தஞ்செய்யும் பொருந்தின அழகிய திவ்விய இரத்தினங்களினால் குயிற்றிய மாடங்கள் சூழ்ந்த திருச்சிற்றம் பலத்தைப் போற்றுகின்றேன் என்றவாறு.

சுகப்பிரகாசமான சிவம் காருண்ணிய ரூபியாய், பூரண ஞானத்தை அதிட்டித்து நிருத்தம்செய்யும் புலியூர்ச்சிற்றம்பலமெனக் கூட்டுக, **'பேரணங்கு'** என்று மிகுத்துக் கூறியவதனால் சத்தியினுடைய விருத்தி மேலே அருளிச்செய்கிறார். (2)

## பாயிரம்

**நற்பரமாய்ப் பரபதமாய்த் தாவிலனு பூதியதாய்**
**அற்புதமா யாரமுதா யானந்த நிலயவொளிப்**
**பொற்பினதாய்ப் பிறிவிலதாய்ப் பொருளாகி யருளாகும்**
**சிற்பரமா மம்பரமாந் திருச்சிற்றம் பலம்போற்றி.**

இ-ள்: அதிசூக்குமமாய் மேலான பதங்களுக்கு மேலானதாய்க் குற்றமில்லாத அனுபவித்தம் ஆதலால் சூட்சமமாய் ஆச்சரிய விருத்தியி னாலே பூராணமாய் நிறைந்த அமுதாய் (திரோதானம் நீங்கின) ஆனந்த நிருத்தப் பிரகாசமாய் நேயத்தை நீக்கமிலலாமையால் சாந்தியாய் வஸ்துமாத்திரம் ஆதலால் பொருளாகி (ஆலசியமற்று ஆதியந்தமும் இல்லாமையால்) அருளாகும் ஞானச்சொல்லுக்கு மேலாம் அம்பரமாகி இப்படியே சொல்லும் சத்திரூபமாகிய திருச்சிற்றம்பலத்தைப் போற்றுகின்றேன் என்றவாறு.

சிற்பரமாம் அம்பரமாம் என்பது சிதம்பரம் என்ற கண்டு கொள்க. இதற்கு ஆகமப்பிரமாணம் உண்டு வருகிறபடி கேட்டு அறிக. (3)

**வையகமின் புறநின்ற மருமலிபொற் பதம்போற்றி**
**கையமரு நிலைபோற்றி எகருணைமுக மலர்போற்றி**
**மெய்யிலகு மொளிபோற்றி விரவியெனை யெடுத்தாண்ட**
**செய்யதிரு வடிபோற்றி திருச்சிற்றம் பலம்போற்றி.**

இ-ள்: வையகத்தோர்க்கும் மலபாக சுகப்பிராப்தி உண்டாக நின்றருளிய மணங்கமழ்ந்து பொலிவினை உடைத்தாகிய திருவடிகளைப் போற்றுகின்றேன் (இது சிருட்டி); ஆன்மாக்கள் கன்ம சீவனத்தில் மிகுதி குறைவற அமைத்தருளிய திருக்கரத்தைப் போற்றுகின்றேன் (இது திதி); தரிசித்தமாத்திரத்திலே கரணசூனியம் பிறபிக்கும் காருண்ணியத்தையுடைய திருமுகமண்டலப் பிரசன்னத்தைப் போற்றுகின்றேன் (இது சங்காரம்); அருளாகிய திருமேனியில் விளங்குகிற ஒளியைப் பொருந்தி அவைகளில் ஆழாமல் என்னை எடுத்து ஆண்டு கொண்டருளிய சிவந்த திருவடிகளைப் போற்றுகின்றேன் (இது அனுக்கிரகம்); ஸ்ரீபரமாகயாமான ஞானசபையைப் போற்றுகின்றேன் என்றவாறு. (4)

## சிவகாமியம்மை துதி

**மன்றின்மணி விளக்கெனலா மருவுமுக நகைபோற்றி**
**ஒன்றியமங் கலநாணி னொளிபோற்றி யுலகும்பர்**
**சென்றுதொழ வருள்சுரக்குஞ் சிவகாம சுந்தரிதன்**
**நின்றதிரு நிலைப்போற்றி நிலவுதிரு வடிபோற்றி.**

இ-ள்: சிவகாமசுந்தரியின் கனகசபையிலிட்ட இரத்தின தீபம்போலப் பொருந்தின திருமுகமண்டலப் பிரசன்னத்தைப் போற்றியும், நித்தியமான திருமங்கல நாணின் பிரகாசத்தைப் போற்றியும்,நரசுராதிகள் வந்து நமஸ்கரிக்க அவர்களிடத்து உள்ள திரோபவத்தை நீக்கும் நின்றருளிய திருநிலையைப் போற்றியும் சடசித்துக்களில் பூரணமாயிருக்கிற ஸ்ரீபாதங்களைப் போற்றுகின்றேன் என்றவாறு. (5)

## கற்பகவிநாயகர் துதி

**தன்னோங்கு மலரடியுந் தளிரோங்கு சாகைகளும்**
**மின்னோங்கு முகக்கொம்பும் விரவியகண் மலர்களுமாய்**
**மன்னோங்க நடமாடு மன்றோங்கு மதிற்குடபால்**
**பொன்னோங்கன் முன்னோங்கும் பொற்பமர்கற் பகம்போற்றி.**

இ-ள்: தனது மேலான செந்தாமரைமலர் போன்ற ஸ்ரீபாதமும் பல்லவங்களிலும் சிறந்த செய்ய ஒளிமிக்க ஸ்ரீஅஸ்தங்களும் ஒளிசிறந்த முகத்தில் கொம்பும் பொருந்திய மூன்று திருக்கண்மலர்களு மாய் (பாசத்தைக் கீழ்படுத்தி, பதியானது நிருத்தஞ்செய்யும் கனகசபையைச் சூழ்ந்துயர்ந்த மேலைகோபுரத்தின்முன் வாழ்த்தருளும் அழகு விளங்கின கற்பகப்பிள்ளையாரைப் போற்றுகின்றேன் என்றவாறு.

தன்னோங்கு மலரடியும்......கற்பகம் போற்றி-தனது பெருக்க அகன்ற வடிவையும் துளிர்சிறந்த பக்கக்கிளைகளையும் தடித்திலும் ஒளிமிகும்படி பணைகளையும் தேன் பொருந்தின மலர்களையும் உடையதாகிய கற்பகவிருட்சமென வேறும் ஒருபொருள் தோன்றியவாறு கண்டுகொள்க. (6)

## சுப்பிரமணியசுவாமி துதி

**தேரட்டிக் கயங்காட்டுந் திரண்மாக்கட் டயமூட்டிப்**
**போராட்டிப் புறங்காட்டிப் போங்காட்டிற் புலால்கமழும்**
**நீராட்டிச் சூர்மாட்டி நிகழ்நாட்டிற் புகழ்நாட்டும்**
**பேராட்டி சீராட்டும் பிள்ளையார் கழல்போற்றி.**

இ-ள்: தேர்-தேர்களும், ஆள்-காலாட்களும், திக்கயம் - அதிஷ்டதிக்குகளிலும் பொருந்திய யானைகளப்போல மேனிப்பொலிவு காட்டும், திரள் மா-யானைத் திரள்களும், காட்டு அயம் பாகரை பொறுத்த குதிரைகளும், மூட்டி - கூட்டி, போராட்டி - போர்செய்து, புறங்காட்டி - முதுகுகாட்டி, போம் காட்டில் - பகைவர் ஓடும்படியான யுத்தகளத்தில், புலால் கமழும் - புலால்நாற்றம் நாறுகின்ற, நீராட்டி - உதிரிப் பிரவாகத்தை உண்டாக்கி, சூர்மாட்டி - சூரபன்மனைக்கொன்று, நிகழ் நாட்டில் - பதினான்கு உலகங்களிலும், புகழ் நாட்டும் - தனது கீர்த்தியை நிலைநிறுத்திய, பேராட்டி சீராட்டும் பிள்ளையார் கழல் போற்றி- பார்வதியார் சீராட்டுதலுடன் வளர்த்த சுப்பிரமணியக் கடவுளின் திருவடிகளைப் போற்றுகின்றேன் என்றவாறு.

மூள்வித்தற்கண் மூட்டி என்றார்போல மாள்வித்தற்கண் மாட்டி எனநின்றது. 'மாட்டி என்றே எம்மை' என்றார் பிறகும். (7)

## மூவர் முதலிய அடியார்கள் துதி

**திருஞான சம்பந்தர் செய்யதிரு வடிபோற்றி**
**அருணாவுக் கரசர்பிரா னலர்கமல பதம் போற்றி**
**கருமாள வெமையாளுங் கண்ணுதலோன் வலிந்தாண்ட**
**பெருமாள்பூங் கழல்போற்றி பிறங்கியவன் பர்கள்போற்றி.**

இ-ள்: திருஞானசம்பந்தசுவாமிகளுடைய சிவந்த திருவடிகளைப் போற்றியும், சிவத்தினருள்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகளுடைய அலர்ந்த செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைப் போற்றியும், சனன மரண துக்கம் நீங்கும்படி ஓரறிவு மில்லாத எம்மை ஆண்டருளின நெற்றிக்கண்ணுள்ள பரமசிவம் மணம் விலக்கி வலிய அடிமை கொண்ட வன்றொண்ட ராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பொலிவுள்ள திருவடிகளைப் போற்றியும், மற்றுமுள்ள அடியார்களையும் போற்றுகின்றேன் என்றவாறு. (8)

## மாணிக்கவாசக சுவாமிகள் துதி

**பேசுபுகழ் வாதவூர்ப் பிறந்துபெருந் துறைக்கடலுண்(டு)**
**ஆசிலெழி றடித்துயர வஞ்செழுத்தா லதிர்த்தெழுந்து**
**தேசமலி தரப்பொதுவார் விசபோக மிகவிளை வான்**
**வாசகமா மாணிக்க மழைபொழிமா முகில்போற்றி.**

இ-ள் : பெரியோர்களால் சொல்லப்பட்ட புகழையுடைய திருவாதவூரிலே பிறந்தருளி, திருபெருந்துறையில் ஆனந்த சமுத்திரத்தைப் பருகி, பாசம் நீங்கின ஆன்மப்பிரகாசம் அருளைக் கூடி மிக்குச் செல்லப் பஞ்சாக்கர உச்சரிப்பினால் ஆணவமல வா தனையைத் தள்ளி மேலிட்டு, (அந்தக் கனக சபையில் நிறைந்திருக்கிற சிவானந்தமானது) தேசமெங்கும் நிறையும்படி திருவாசகமாகி மாணிக்கமழையைப் பொழியும் பெரிய முகில்போன்ற திருவாதவூரடிகளைப் போற்றுகின்றேன் என்றவாறு.

பேசு .... மழை பொழி மாமுகில் போற்றி - சர்வான்மாக்களும் சொல்லுதலால் புகழுடைய வாயு மண்டலத்திலே தோன்றி, பெரிய பட்டினங்கள் சூழ்ந்த துறையினையுடைய கடலைப்பருகி, குற்றமில்லாத ஒளிசிறந்த மின்னைப் பிறங்கி, சலத்தினுடைய வளமையாகிய அதனலே முழக்கமேலிட்டு, இவ்வுலகத்தோர் சர்வ சம்பன்னராக யாவர்க்கும் பொதுவாகி நிறைந்து நிற்கிற சுத்தபோகம் விளையும் வண்ணம் மழை பெய்யும் மேகம் என வேறும் ஒரு பொருள் தோன்றியாவாறு அறிக. இதுவும் கடவுள் வணக்கம் எனக் கொள்க. எங்ஙனம் என்னில், "**வீழ்க தண்புனல்**"என்கிற பிராமணத்தில் எனக் கொள்க.

## தில்லை மூவாயிரவர் துதி

**நாவிரவு மறையினராய் நாமிவரி லொருவரெனும்**
**தேவர்கடே வன்செல்வச் செல்வர்களாய்த் திகழ்வேள்வி**
**பாவுநெறி பலசெய்யும் பான்மையராய் மேன்மையராம்**
**மூவுலகுந் தொழுமூவா யிரமுனிவ ரடி போற்றி!.**

இ-ள் : நாவிலே அனவரதமும் பொருந்தின வேதத்தை உடையவர்களாயும், இவர்களில் நாமும் ஒருவர் என்று அருளிச் செய்யும் தேவர்கள் தேவனையை தங்கள் செல்வமாகப் பெற்ற ஐசுவரியத்தையுடையவர்களாயும், விளங்கிய யாகாதி கன்மங்கள் பொருந்திய நெறிகளை வெகுவிதமாகச் செய்யும் பகுதி உடையவர்களாகியும், (பத்தி ஞான வைராக்கியங்களினாலே யாவர்க்கும்) மேலானவர்களாயுமிருக்கிற பூமி அந்தர சுவர்க்கத்தோர் நமஸ்கரிக்கும் தில்லையில் மூவாயிர முனிவர்களுடைய திருவடிகளைப் போற்றுகின்றேன் என்றவாறு. (10)

## சண்டேசர் முதலிய திருக்கூட்டத்தார் துதி

**தந்தையெனா திகழ்ந்தபுகழ்ச் சண்டேசர் விறறகுமெய்ச்**
**சிந்தையரா யெல்லையிலாத் திருவேடத் தினராகி**
**எந்தைபிரா னருள்வளர்க்கு மியல்பினராய் முயறவங்கள்**
**அந்தமிலா வடியவர்க டிருக்கூட்ட மவை போற்றி !.**

இ-ள் : பிதா என்று அங்கிகரியாமல் சிவத்துரோகம் கண்டு கால் தடிந்த கீர்த்தியையுடைய சண்டேசுரநாயனாரையும், ஞானவீரம் பொருந்திய உண்மையான சித்தத்தையுடையவர்களும்,எண்ணிறந்த திருவேடங்களை உடையவர்களும்,எந்தைபிரானுடைய அருளினை வளர்க்கும் இயல்பு உள்ளவர்களும் செய்கின்ற தவங்களிலே முடிவில்லாதவர்களுமாய் இருக்கிற அடியாரது திருக்கூட்டத்தையும் போற்றுகிறேன் என்றவாறு.

புகழ் என்று மிகுத்துக் கூறியவதனால் பிரமகத்தியாதி தோடமும் பிதாவைக் கொன்ற தோடமும் குருத்துரோகமுமாகிய பசுபாவம் சிவசன்னிதியில் நில்லாமல் அதுவும் சிவா புண்ணியமாய்ச் சாரூப்பியபதமும்சிவக்கினையும் அதிகாரமும் முதலானவை கொடுத்தவை கண்டுகொள்க. 'எல்லையிலாத் திருவேடம்' என்பதனால் சடை முண்டிதம் சிகை முதலான பல வேடங்களில் முடிவில்லாமை கண்டுகொள்க. (11)

## அநபாயசோழச் சக்கரவத்தி துதி

**ஒன்றியசீ ரிரவிகுல முவந்தருளி யுலகுய்யத்**
**துன்றுபுகழ்த் திருநீற்றுச் சோழனென முடிசூடி**
**மன்றினடந் தொழுதெல்லை வளர்கனக மயமாக்கி**
**வென்றிபுனை யநபாயன் விளங்கியபூங் கழல்போற்றி!.**

இ-ள் : சீர் பொருந்திய சூரியவமிசத்திலே விரும்பித் தோன்றியருளிச் சர்வ ஆன்மக்களும் உய்யும் வண்ணம் மிகுந்த சிவகீர்த்தயையுடைய திருநீற்றுச் சோழன் என்று அபிஷேகநாமமும் பெற்றுக் கனகசபையில் நிருத்தத்தை வணங்கித் திருவம்பலமும் திருக்கோபுரமும் திருமண்டபங்களும் மற்றும் சூழ்ந்த எல்லையை மாற்றுமிக்க கனகசொரூபமாகப் பண்ணித் திக்குவிசயம் பொருந்தின அநபாயசோழச் சக்கரவர்த்தியின் பிரகாசப் பொற்பையுடைத்தான ஸ்ரீபாதங்களைப் போற்றுகின்றேன் என்றவாறு. (12)

## அகம்படிமைப் பதினாறாயிரவர் துதி

**மல்குபுகழ் நடராசன் வளர்கோயி லகலாது**
**பல்கிளைஞ ருடனுரிமைப் பணிசெய்யும் பரிவினராய்க்**
**கல்விகளின் மிகுமெல்லைக் கருத்தினராய் நிருத்தனருட்**
**செல்வமலி யகம்படிமைத் திறலினர்தம் பதம்போற்றி.**

இ-ள்: மிகுத்துச் சொல்லும் சிவகீர்த்தியையுடைய நடேசமூர்த்தியின் சிவதர்மம் வளரும் திருக்கோயிலை நீங்காமல் பல கிளைஞருடனே தங்களுக்கு அமைத்த ஊழியர்களைப் பரிவுடனே செய்யும் பத்திமான்களும் கல்விகளினாலே மிகுந்த நிலையான கருத்தை உடையவர்களும் தம்பிரானாருடைய அருளாகிய சம்பத்துமிகுந்த ஞானவீரத்தை உடையவர்களுமாகிய திருவகம்படியரான பதினாறாயிரவர் திருவடிகளைப் போற்றுகின்றேன் என்றவாறு. (13)

## பிறவியை வியந்தது

**மண்ணிலிரு வினைக்குடலாய் வானிரயத் துயர்க்குடலாய்**
**எண்ணிலுட லொழியமுய லிருந்தவத்தா லெழிற்றில்லைப்**
**புண்ணியமன் றினிலாடும் போதுசெயா நங்காண**
**நண்ணுமுட லிதுவன்றோ நமக்குடலாய் நயந்தவுடல்.**

இ-ள்: பூமியில் பொருந்தின புண்ணியப் பாவத்துக்குட்பட்ட பிராரத்தசரீரமாய்ச் சுவர்க்கத்திலும் நரகத்திலும் போய் மீண்டு துக்கப்படும் யாதனாசரீரமாயிருகின்ற எண்ணிறந்த சரீரமோழியப் பண்ணப்பட்ட பெரிய நல்வினையால் அழகு பொருந்திய தில்லைவனம் சூழ்ந்த அனுக்கிரகமன்றினில் ஆடுகின்ற ஒருதன்மையான ஆனந்தத்நிருத்தத்தை தரிசிக்கப் பொருந்தின இந்தச் சரீரமன்றோ நமக்குச் சரீரமாகி நம்மளவில் விரும்பிய சரீரம் என்றவாறு,

'**நமக்கு உடல்**' என்பதற்கு நமக்கு உடைமை எனினும் அமையும். (14)

## தலவிசேடத்தை உரைத்தது

**மறந்தாலு மினியிங்கு வாரோமென் றகல்பவர்போல்**
**சிறந்தார நடமாடுந் திருவாளன் றிருவடிகண்(டு)**
**இறந்தார்கள் பிறவாத விதிலென்ன பயன்வந்து**
**பிறந்தாலு மிறவாத பேரின்பம் பெறலாமால்.**

இ-ள் : இவ்விடத்து எப்போதும் மறந்தேயாயினும் வரக்கடவமல்லோம் என்று சலித்து அவ்விடத்து அகன்று போனவரைப் போல அருள் சிறந்து நிறைவு தக நிருந்தஞ் செய்யும் திருவாளனது ஸ்ரீபாதம் தரிசித்துச் சிவபூமியில் சென்றவர்கள் பிறவாநெறியிருக்கும். இதில் மிகுந்த பிரயோசனம் ஏது? சிதம்பரத்திலே வந்து பிறந்தாலும் ஒழியாத பேரின்பம் பெறுவது நிச்சயம்; ஆதலால் என்றாவறு.

இது சிதம்பரத்தில் சனித்த ஆன்மாக்களுக்கு முத்தி உறுதி என்றமை கண்டுகொள்க. (15)

**காதமருங் கொடுங்குழையான் கரத்தமருங் கொடுங்குழை**
**பாதமுற வளைந்திரவும் பகலுமுற வளைந்திரவும் (யான்**
**பேதமற வுடன்றீரும் பிணிபிறவி யுடன்றீரும்**
**ஓதலுறு மருந்தில்லை யொழியவொரு மருந்தில்லை.**

இ-ள் : திருச்செவியில் பொருந்தின, கொடும் குழையான்- வளைந்த சங்கக்குழையை உடையவனும், கருத்திலே மருங்கு ஒடுங்கின,உழையான்-மான்கன்றைஉடையவனும், ஸ்ரீபாதத்திலே, உறவளைந்து - சென்னியுற வணங்கி, இரு போதும், உறவு அளைந்து- அன்பிலேமுழ்கி, வேண்டினவரம், இரவும் இரவுங்கள், இரண்டற நின்றுவெகுண்டு குணங்களை, ஈரும் -அரியும், பிணியும் பிறவியும் உடனே தீரும் -தீரும், வேதாகம சாத்திரங்களும் நிச்சயித்தற்கு அரிதாகும். இந்தத்தில்லை என்னும் தலம் நீங்கலாக வேறு ஒரு மருந்தும் இல்லை என்றவாறு. (16)

**பொன்றிகழ்பங் கயமூள்கிப் புனிதனபங் கயமூள்கிச்**
**சென்றுதொழக் கருத்துடையார் சிலரொழியக் கருத்துடையார்**
**ஒன்றுமுளத் திருக்கூத்தை யுருவொழியக்குத் திருக்கூத்தை**
**மன்றமரப் பணியீரேன் மருவுமரப் பணியீரே.**

இ-ள் : பொலிவு விளங்கும் அழகிய பொற்றாமரையில் மூழ்கி நிர்மலனாகிய நடேசமூர்த்தி திருவடித்தாமைரயை, ஊள்கி- தியானம்பண்ணி, (விகற்பமறச் சென்று) ஸ்ரீபாதம் தரிசிக்கக் கருத்து உடையாராகிய சித்தபாகமுடைய சிலர் ஒழிய மற்றொருவரும், கருதுடையார் - கருவைத் துடைக்க மாட்டார்கள், ஆன்மாக்களுக்குச் சகசமாய்ப் பொய்யை

மெய்யாகத் திருப்பும் மலமும் ஊத்தையாகிய கன்மமும் உருவாகியு மாயையும் இல்லையாகச் செய்யும் ஆனந்தத் திருக் கூத்தைச் சிதம்பரத்திலே தரிசித்தும் வணங்கிராகில் பொருந்தின மரப்பாவைக்கு ஒப்பீர் என்றவாறு.

'மூள்கி' என்றது மூகாரம் ளகாரமாய் மருவியது. உள்கிஎனற்பாலது 'ஊள்கி' என நீட்டல் விகாரமாயிற்று. (17)

**பொருவிலரு ணெறிவாழ்க புரைநெறிகண் மிகவாழ்க**
**வரைவிறிருத் தொண்டரணி வளர்கருதித் தொண்டரணி**
**அருள்விரவக் கற்றோர்க்கு மடர்புலன்போக் கற்றோர்க்கும்**
**மருவுபுக லம்புலியூர் மாடமலி யம்புலியூர்.**

இ-ள் : ஒப்பில்லாத கிருபையினையுடைய சைவமார்க்கம் வாழ்வதாக ; குற்றம் மிகுந்த லோகாயதன் புத்தன் சமணன் மீமாங்கிசன் மாயாவாதி பாஞ்சராத்திரி முதலான கபட மார்க்கம், மிக ஆழ்க - மிகவும் கீழ்ப்படுவதாக வரை வில் - நவகண்டமாக வரைந்து வில்வடிவாக, திருத்து - திருத்தப் பட்ட, ஒள் தரணி - நல்ல பூமியில், திருத்தொண்டர் வர்க்கம் தழைப்பதாக ; திருவருள் பொருந்தும்படி கற்றோர்க்கும் குரு முன்னிலையில் காற்று உணர்ந்தவர்களில்,போக்கு அற்றோர்க்கும் - குற்றமில்லாத பக்குவான்மாக்களுக்கும் பொருந்திய புகலிடமாவது, சந்திரன் தவழ்கிற மாடகூடங்கள் நிறைந்த அழகிய புலியூர் என்றவாறு. (18)

**இரும்பொத்துச் சிறிதிடமு மின்றெனக்கின் றருளாலே**
**சுரும்புற்ற நறையிதழ்த் தொடைமுடியோ னமரர்தொழக்**
**கரும்புற்ற வரவாடக் காரிகையி னுடனாடும்**
**பெரும்பற்றப் புலியூரா யிருந்ததுளம் பெரிதாயே.**

இ-ள் : எனக்கு இதற்குமுன் என் மனமானது இரும்பை ஒத்துச் சிறிது புரைமற்று இருக்கும் ; இப்போது அருளினாலே வண்டு அமர்ந்த தேன் நிறைந்த கொன்றைமாலை அனிந்த சடாமகுடமுள்ள நடேசமூர்த்தி அமரர் வணங்கப் பெரிய புற்றின் அரவாடக் காளியினுடனே நிருத்தம் செய்யும் பெரிய பெரும்பற்றப்பூலியூராய் இருந்தது மிக என்றவாறு.

பெரும்பற்றப் பூலியூர் என்றது ஆன்மாக்களுடைய உட் பற்றுப் புறப்பற்றாயிருக்கின்ற கரணங்கள் சூனியம் பிறந்த விடத்திலும் ஞானப்பற்றாய் நிற்றலால் ஞானசபையாகிய

புலியூரை அந்தப் பெரும்பற்றப்புலியூர் என்றார். பெரும் பற்று என நிறுத்தி அ-என்கிற சுட்டை இடையிட்டு ஒற்று வருவித்து, புலியூர் என வருமொழிசெய்து 'பெரும்பற்றப் புலியூர்' என்றமை கண்டுகொள்க. (19)

**தேசமலி பொதுஞானச் செவ்வொளியுந் திகழ்பதியாம்**
**ஈசனது நடத்தொழிலு மிலங்குபல வுயிர்த்தொகையும்**
**பாசமுமங் கதுகழியப் பண்ணுதிரு வெண்ணீறும்**
**ஆசிறிரு வெழுத்தஞ்சு மநாதியிவை யாறாக.**

இ-ள் : சிவபூமியிலே தழைத்த சுத்த ஞானத்தினுடைய செம்மை பொருந்தின ஒளியும், விளங்குகின்ற பதியாகிய பரமேசுரனுடைய பஞ்சகிருத்தியமும், விளங்கிய சர்வான் மாக்களும், ஆணவமுதலான பஞ்சபாசமும், அவ்விடத்து ஆன்மாக்களை மேலிட்டுத் தன்வசமாக்கி நின்ற பாசத்தை நீங்கப்பண்ணுகிற திருவெண்ணீறும், திரோதானம் கடந்த அருளஞ்செழுத்தும் இவை ஆறும் அநாதியாம் எ-று. (20)

**கற்பங்க டொறுநடஞ்செய் கழலடைந்தோர் கணிப்பிலர்தம்**
**சிற்பங்க டரும்புகழுஞ் சென்றனவிச் செல்காலத் (து)**
**அற்பங்கொ டுதிக்குமிறை யருடருமென் றனரென்றார்**
**சொற்பந்த முறுமனமே துணையாகத் தொடங்குதலும்.**

இ-ள் : கற்பங்கடோறும் (அநுக்கிரக கிருத்தியத்திலே பொருந்தி) ஆனந்த நிருத்தஞ்செய்யும் திருவடிகளில் பொருந்தினவர்கள் அளவிலர்; தமது எண்ணிக்கைக்குப் பிரமாண மாகக் கற்பங்கடோறும் வகுத்துவகுத்துச் சொல்லப்பட்ட ஆகமக் பிரமாணமாகிய புராணங்களும் இறந்துபோயின, இந்தக் கலியுகவர்த்தமான காலத்தில் அற்பார்த்தமான துதிக்கும் பரமேசுவரன் அநுக்கிரகித்தருளுவன் என்று வேதாகமம்போன்று அவர்களருளினார்கள் என்று பொருந்திய சொல்லை அருளாற்பொருந்தின எனதுமனமானதே எனக்குத் துணையாகச் சிதம்பரமான்மியத்தைத் துதி செய்யத்தொடங்குதலும் என்றவாறு, (21)

**ஆராத மனமினிய வாநந்த நடத்தளவும்**
**சாராத தன்மையினாற் றகுமொழிக்குச் சொற்படுத்த**
**வாராதென் றறிந்தாலு மற்றதுகட் புலப்படலால்**
**ஓராத பேராசை யொருக்காலு மூலவாதால்.**

இ-ள் : பூரண ஞானத்தைப் பொருந்தாததாகிய மன மானது ஆனந்த நிருத்தமளவாகச் செல்ல வியாத்தியில்லாத தன்மையினலே அந்த ஆநந்த நிருத்தமான அருத்தத்துக் குத்தக்க சுலோகத்துக்குச் சொற்செய்ய வராது என்பது ஆகம சாத்திர சம்பிரதாய அனுபவங்களினால் அறிந்தாலும் அந்த ஆநந்த நிருத்தமானது பதஞ்சலிமகா இருடிக்கு அருளின வரப்பிரசாதத்தினலே திட்டிகோசரமாதலால் விசார ஈனமான மிகுந்த ஆசை ஒருக்காலும் ஒழியாது ஆதலான் என்னசெய்வோம் என்றவாறு. (22)

**காதரமார் தருமனமே கமலமல ரயனல்லை**
**சீதரமா யனுமல்லை சிவனுமனற் றிரளல்லன்**
**நீதரமா வருளுடையை நிலைகலங்கே லினிமன்றில்**
**ஆதரமா துடனாடு மண்டனடங் கண்டனையால்.**

இ-ள் : அச்சம் மிகுந்த மனமே ! நீ கமலமீதினிலிருக்கிற அயனுமல்லை; பூமகளை மார்பில் தரிக்கும் அரியுமல்லை; சிதம்பர மூர்த்தியோ அவர்களால் பறந்தும் இடந்தும் காண்பரிய சோதிசொருபி அல்லன்; நீ அவர்கள் இருவரினும் மேலான அருளுடையை ஆதலால் நிலைகலங்காதே; அஃது எங்ஙனம் என்றுகேள்; கனகசபையில் விரும்பின. அருட்சத்தியைப் பொருந்தி ஆநந்தநிருத்தம் செய்யும் சிவனுடைய நிருத்தம் கண்டனை ஆதலால் என்றவாறு.

இது சித்த சமாதனம். மேல் புராண - வரலாறு கூறுகின்றது. (23)

**நாதனருள் பிரியாத நந்திதரச் சனற்குமரன்**
**வேதவியா தனுக்களிக்க மேன்மையெலா மவன்விளங்கிச்**
**சூதமுனி தனக்குதவச் சோபான வகைதொகுத்த**
**மூதறிவா லவன்மொழிந்த புராணமவை மூவாறில்.**

இ-ள் : ஸ்ரீ நீலகண்ட பரமேசுவரன் அருளிச்செய்த பதினெண்புராண அர்த்தங்களை அவருடைய பிரதான சீடரான நந்தீசுவரர் சனற்குமார பகவானுக்கு அருளிச்செய்ய, அவர் தம்முடைய பிரதான சீடரான வேதவியாசருக்கு அருளிச்செய்ய, அவர் நன்றக விசாரணை செய்து தம்முடைய பிரதான சீடரான சூதமுனிவருக்கு அனுக்கிரகிக்க, இப்படிச் சோபான பாரம்பரியமாக வந்த சுருக்கமான அருத்தத்தைத்

தம்முடைய முதிர்ந்த அறிவினலே விரித்து உரைத்த பதி னெண்புராணத்தில் என்றவாறு.

சோபானபாரம்பரியம் என்பது ஒருபடிவிட்டு ஒருபடி ஏறுதல். (24)

**நலமலியுந் திருத்தில்லை நடராசன் புகழ்நவிலும்**
**பலகதியில் யானறிந்த படிபடியிற் பயிறாரிச்**
**செலவினர்போ லெவ்வழியுஞ் செவ்வழியாச் சிறிதியங்கித்**
**தொலைவில்பெரும் பதியணையத் துணிந்தருளே துணையாக.**

இ-ள் : நன்மை மிகுந்திருக்கும் தில்லைவனத்து நிருத்த ராசனது சிதம்பர மான்மியத்தைச் சொல்லும் வெகுவித மார்க்கத்தில் யான் அறிந்து கொண்டபடி எப்படி என்னில், பூமியில் முன் நடந்திருக்கும் வழியே நடக்குமவரைப்போல் சுற்றுவழி எல்லாம் செவ்வைவழியாகத் துணிந்து அருளைக் கூடிச் சிறிது தள்ளி எடுத்துக்கொண்ட விசாரனையில் போக்குவரத்துப்பண்ணிச் சிவபூமியைக் கண்டுக்கொண்டேன் என்றவாறு. (25)

**மங்களமார் திருமன்றின் மன்னனடம் வளர்புலிக்கால்**
**பங்கமில்சீ ரருண்முனிக்கும் பதஞ்சலிக்கும் பணித்தருளிச்**
**சிங்கவரு மன்றனக்குந் தெரிவித்துத் திருவருளால்**
**அங்கவரைப் பணிகொண்ட வடைவறிந்த படிபுகல்வாம்.**

இ-ள் : மங்களம் நிறைந்த கனகசபாபதி ஆனந்த நிருத்தத்தை அருள் வளராநின்ற குற்றமில்லாத சீர்சிறந்த வியாக்கிரபாத முனிக்கும் பதஞ்சலிமுனிக்கும் தரிசிப்பித்தருளி, இரணியவன்மனுக்கும் புலப்படுத்தி, காருண்ணியத்தினாலே இந்த மூவரையும் சேவைகொண்ட அடைவு அறிந்தபடி சொல்லுகின்றேன் என்றவாறு. (26)

**சொல்லோடும் பொருளோடுந் துணிவுடையோர் சொற்றன**
**எல்லாருங் கொளவெட்டு மிரண்டுமறியாதோமும் [றென்று]**
**வல்லோர்போ லொருபனுவன் மதித்தோமா னவைபொறுக்க**
**நல்லோரை யிரந்தோமே னகையாமென் றுரையாமால்.**

இ-ள் : சொல்லுடனும் பொருளுடனும் உறுதியும் உடைய புலவர் சொன்னார்கள் என்று கேட்ட ஞாதாக்கள் எல்லோரும் கைக்கொள்ளும்படிக்கு எட்டும் இரண்டும் பத்து

என்பதற்கு விபரமில்லாத யாமும் கவி வல்லவர்களைப்போல ஒரு பனுவல் சொன்னதாகப் பண்ணி, செய்யுட்குற்றம் பொறுக்கப் பெரியோரை வேண்டிகொண்டோமாகில் கேட்டவர்களுக்கு நகையை உண்டாக்கும் என்று உரைத்தோம் இல்லை என்றவாறு.

இதில்'எல்லோரும் கொள எட்டும் இரண்டும்'என்பதற்கு எட்டான சொல்லும் இரண்டான பொருளும் என்று பொருந்தும் சொற்பொருளாம் என்றும், அகாரம் உகாரம் என்றும், தசகாரிய தசாவத்தை என்றும் சொல்வாருமுளர்,இதில் சொற்பொருள் இலக்கணம் ஓராதோர்க்கும் கவிவருதலானும், அகாரம் உகாரம் முதலானவை சிறுபான்மையான சம்பிரதாயவர்த்தமாகலானும், அவையடக்கத்துக்குப் பொருந்தாமையால் மறுக்கப்பட்டது. எட்டான சொல் என்பது நேமிநாதத்தில்''ஏற்ற திணை இரண்டும் பால் ஐந்தும் ஏழ் வழுவும், வேற்றுமை எட்டும் தொகை ஆறும் - மாற்றரிய, மூன்றிடமும் காலங்கள் மூன்றும் இரண்டிடத்தால், தோன்ற உரைப்பதாம் சொல்.''இரண்டாகிய பொருள் அகப்பொருள் புறப்பொருள். (27)

**என்றுமருந் தவமுயல வினிவேண்டா யாவர்க்கும்**
**பொன்றுமுடல் கன்றுமுனிப் பொற்கோயில் புகழ்மாலை**
**சென்றுசெவிப் புலன்புகுமேற் றீவினைக ளவைதீர்க்கும்**
**மன்றினருள் புரிவிக்குந் தெரிவிக்கு மலர்ப்பாதம்.**

இ-ள் : இன்று முதல் பெரிய தவசுகளை யாவர்க்கும் பண்ணவேண்டுவதில்லை; நீர்க்குமிழிபோல இறக்கும் சரீரம் பார்த்த கண் மாறுதற்குமுன்னே இந்தச் சிதம்பரமான்மியம் செவிகளுக்கு விடயமாகுமாகில், அக்குற்றமுள்ள புண்ணிய பாவங்கள் தாரசுமுள்ளுப்போல் சமப்படுத்தும் மலபாகத்தைப் பண்ணி அருளைப் பிரகாசிப்பித்து வியாபகமாய் இருக்கிற ஞேயத்திலே அழுத்துவிக்கும் என்றவாறு. (28)

**பாயிரம் முற்றிற்று.**

ஆகத் திருவிருந்த்தம் - 29.

**இரண்டாவது**

## வியாக்கிரபாதச்சருக்கம்

**மன்னுமருந் தபோதனரின் * மருவுமத்தி யந்தினனாம்**
**உன்னரிய திருமுனிபா லோங்குலகந் துயர்நீங்கப்**
**பன்னரிய சிவஞானம் பத்திதரும் பான்மைதகத்**
**தன்னிகரில் திருவருளா லவதரித்தா னொருதனயன்.**

இ-ள் : நிலைபெற்ற பெரிய பிரம இருடிகளில் பொருந்திய மத்தியந்தினன் என்று பேரையுடைய உன்னுதற்கரிதாகிய மாக இருடியினிடத்திலே, பெரிய சர்வலோகங்களும் பிறவித் துன்பம் நீங்கும் வண்ணம் திரிவிதகரணங்களும் கடந்த சிவனிடத்தில் பத்திஞான வைராக்கியங்களில் உண்டான பகுதி மிகத் தனக்கு ஒப்பில்லாத கடாக்ஷத்தினாலே ஒரு குமாரன் திருவவதாஞ்செய்தான் என்றவாறு.

(1)

**தனிப்புதல்வன் றனையணைத்துத் தகவுச்சி மோந்துசடங்(கு)**
**அனைத்துமடை வினிலியற்றி யருமறைநூ லவைகொடுத்து**
**மனத்துணையாந் திருநாம மருவுநெறி யுபதேசித்(து)**
**இனிச்செயவேண் டுவதென்கொ லெனமொழிந்தா னெனின்**
**(மு)னிவன்.**

இ-ள் : நல்லொழுக்கம் உள்ள மத்தியந்தின முனிவர், ஒப்பில்லாத குமாரனைத் தழுவிக்கொண்டு,இலக்ஷணமுள்ள உச்சியை மோந்து, உபநயனமுடிவாயுள்ள கன்மங்களடைவே பண்ணி, பதினாலு வித்தையையும் கற்பித்து,உயிர்த்துணையாகிய ஸ்ரீ பஞ்சாக்கரம் முறைமையிலே பொருந்தும்படி உபதேசித்து, குமாரனைப்பார்த்து இனி நாம் உனக்குச் செய்யும் உபகாரம் ஏது என்று கேட்டருளினார் என்றவாறு.

பதினாலு வித்தையாவன: ஆறு அங்கம், நால்வேதம்,மீமாஞ்சை, புராணம், தருக்கம், தருமசாத்திரம் என்பவைகளாம். (2)

* 'மருவியமத் தியந்தினனாம்' எனவும் பாடம்.

**இந்தவகை சிவனருளா லிரவியெதிர் மணியுமிழ**
**வந்தவன லெனவிளங்கு மழமுனிவ னடிவணங்கித்**
**தந்திரமுன் புகலுமருந் தவத்தொகையிற் றலையான**
**அந்தமின்மா தவமடியேற் கருளுகென வுரைசெய்தான்.**

இ-ள் : இந்தக் கிரமத்தினால் கன்மம் சமமாய் அருள் மேலிட ஆதித்தன் சன்னிதியில் சூரியகாந்தம் சுவலிக்குமாறு போல (ஞான உதயமான) மழமுனி பிதாவை நமஸ்கரித்து, வேதாகமம் முன்சொன்ன அரியதவசுகளில் மேலான தவசு அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும் என்று சொன்னன் என்றவாறு. (3)

**தவமெவையு முணர்ந்தமுனி தனயன்முக மிகநோக்கிப்**
**புவனமலி போகங்கள் பொருந்துமருந் தவம்புரிந்தால்**
**சிவகதியு மிதுவன்று சிவார்ச்சனமார்ச் சனமாகில்**
**பவமகலும் பரபோகம் பெறலாகு மெனப்பகர்ந்தான்.**

இ-ள் : எல்லாத் தவசுகளும் அறிந்த அந்த முனிவர், குமாரனுடைய திருமுகத்தை மிகுந்த அனுக்கிரகத்தாலே பார்த்து அருளிச்செய்வார்; உலகங்களில் அரிய தவசுகள் பண்ணினால் மிகுதியான சுவர்க்காதிபோகங்கள் பொருந்தும்; இது சிவலோகத்துக்குப் போம்வழி எங்ஙனம் என்னில் ? சிவபூசையை ஆர்ச்சிப்பை ஆனால் சனனம் விடும் ; பரலோகமும் சித்திக்கும் என்று அனுக்கிரகித்தார் என்றவாறு. (4)

**சொன்னமொழி கொண்டிறைவன் தோன்றிமகிழ்ந் துளதானம்**
**பன்னுகென மழமுனிக்குப் பார்முழுதும் பரப்பிரம**
**சன்னிதிகா ணதுகாணுந் தவக்குறைகா ணென்றாலும்**
**மன்னிடமாய் நிகழுமிட முளதென்றான் மாமுனிவன்.**

இ-ள் : குருவுபதேசத்தை உட்கொண்டு பரமேசுவரன் திரோபவியாமல் பிரகாசித்து ஆனந்தசத்தியுடனே எழுந்தருளியிருக்கின்ற புண்ணியத் தலம் அருளிச்செய்யும் என, இருநூற்று இருபத்துநாலு புவனங்களும் சிவசன்னிதியாம்; (அப்படியன்றென்று) காணும்படிசெய்த தவசுகளில் குறைவாகிலும் (சரீதம் முழுதும் ஆன்மா வியாபியாய் நின்றாலும்) அந்த ஆன்மா இருக்கு இடம் ஒன்று உண்டாயிருப்பது போலச் சிவன் எங்கும் நிறைந்து நின்றலும் சிவனுக்கு

அதிட்டானமாய் விளங்கும் புண்ணியத்தலமும் உளதென்று முனிவர் அருளிச்செய்தார் என்றவாறு. அஃது ஏதென்னில்,

**பாயிர்கட் குபகரித்துப் பரப்பினடுப் படுவதொரு**
**மேருகிரி யும்புடைசூழ் வெற்புமவற் றிடைநாடும்**
**ஆருயிர்கள் பயனருந்து மமருலகா மெனக்கழித்தான்**
**சீருலவு நாறுவளர் செறுவெனலாஞ் * சிறுமையுற.**

இ-ள் : பதினாலுலோகத்திலுமுள்ள ஆன்மாக்களுக்குச் சலனம் வாராமல் பூமிக்குநடுவேநிற்கிற மகாமேருவும், அதன் பக்கம் சூழ்ந்த குல பருப்பதங்களும்,அவைகளின் நடுவில் இருக்கும் இராச்சியங்களும், ஆன்மாக்கள் இந்தப் பூமியிலே ஆர்ச்சித்த கன்மபலம் அனுபவிக்கின்ற சுவர்க்கத்துக்கு ஒக்கும்;அதில் கன்மபலம் நாற்றங்கால் விளைவுக்கு ஒக்கும் எனக் கழித்தான் சிவன் என்றவாறு. (6)

**எத்தகைய போகங்க ளெவற்றினுக்குங் காரணமா**
**வைத்தபடி யிடம்போதா வகைநெருங்கு மன்னுயிர்கள்**
**முத்திபெறத் திருவுள்ள முகிழ்த்தபெருங் கருணையினால்**
**அத்தனுமித் தலநண்ணி யலகிலிடங் கைக்கொண்டான்.**

இ-ள்: எல்லாப்பெருமையும்உடையபோகபூமியானசுவர்க்காதிபதும் முதலான நரகாதி எவைகளிலும் காரணமாக வைத்தகன்மபூமி இடம்போதா தபடியாலே ஒன்றுக்கு ஒன்று நெருங்கிநிற்கிற எண்ணிறந்த ஆன்மாக்களும் சிவபுண்ணியத்தினாலே கன்ம சாமிய சத்திநிபாத மலபாகமாய் முத்திபெறத் திருவுள்ளத்தில் குறித்த பெரிய கிருபாசத்தியை அதிட்டித்துப் பரமேசுவரனும் அந்தக் கன்மபூமியைப் பொருந்தி எண்ணிறந்த திருப்படைவீடு இடமாகக்கொண்டிருந்தார் எ-று.

இனி, இதிலும் அதிகம் அருளிச்செய்கிறார். திருப்படை வீடு என்பது ஆலயம். (7)

**ஞாலத்தா யிரகோடி நற்றன முளவவற்றின்**
**ஏலத்தா னலமார விடங்கொண்ட வெழிற்றில்லை**
**மூலத்தா னத்தொளியாய் முளைத்தெழுந்த சிவலிங்கக்**
**கோலத்தா னின்பூசை கொள்வானென் றுரைசெய்து.**

---

* 'செறிமையுற' எனவும் பாடம்.

இ-ள் : இந்தக் கன்மபூமியில் எண்ணிறந்த திருப்படை வீட்டில் ஆயிரங்கோடி புண்ணியத் தலம் உண்டு; இந்தத் தலங்களில் ஆனந்தநிருத்தம் செய்யப் பொருந்தின தில்லை வனத்து ஆலடியில் பிரகாசமான பாதாளத்தின்கீழ்ச் சொல்லிறந்த சிவபூமியிலே நின்றும் குறி தோன்றின சிவலிங்கக் கோலத்தான் நினது பூசைகொள்ளும் அவர் என வாசக தீட்சைபண்ணினார் என்றவாறு. (8)

**திருநீறு நுதல்சேர்த்தித் திகழுச்சி தனைமோந்தெம்**
**கருநீறு படவுதித்த காளையென வணைத்துவிழி**
**தருநீர்மத் தியந்தினனாந் தந்தையைவந் தனைசெய்து**
**வெருநீர்மை யன்னையையு மடியணிந்து விடைகொண்டான்.**

இ-ள் : நெற்றியிலே திருநீறுசாத்திப் புத்திரவாஞ்சை யாலே உச்சியை மோந்து எனது கருவாகிய பாசம்நீறுபட்டுப் போம்படி சனித்தபிள்ளை என்று ஆலிங்கனம் பண்ணி இந்தப் பிள்ளையை நீங்குகிறோமே என்று விழி நீர்தர இருக்கிற பிதாவாகிய மத்தியந்தினமா முனிவரையும் நமஸ்கித்து, பிள்ளை நீங்குகிறன் என்கிற பயத்தையுடைய மாதாவையும் நமஸ்கரித்து அனுமதிபெற்றார் என்றவாறு. (9)

## வேறு

**மண்டா னிடர்தீர் வகையால் அருளால்**
**வருவா னிருளார் மகலா லயநீர்**
**தண்டா ரகைபோல் தரளம் புரளத்**
**தள்ளுந் தடமா டுயர்தில் லைவனத்(து)**
**அண்டா திபன மமதே துணையா**
**அரியுங் கரியுந் திரியுஞ் சரியும்**
**கண்டா னுழையா வுயர்கா னமுமுன்**
**காணா தனகண் டுகடந் தனனே.**

இ-ள் : பூலோகம் பிறவித்துன்பம் நீங்கும்படிஅருளினலே தெற்கு நோக்கி வருகின்றவர்,கருங்கடற்றரங்க நீர் குளிர்ந்த தாரகைகளைப்போல் முத்துக்களை ஒதுக்கும் கரைப் புறம் சூழும் பெரியதில் அலைவனத்து அண்டர்நாயகனது பஞ் சாக்கரமே வழித்துணையாக, சிங்கமும் யானையும் சஞ்சரிக்கும் வழியும் கண்ணுக்கு நுழையவொண்ணாத இருள் செறிந்து உயர்ந்த கானமும் முன்காணாதவை யெல்லாத்தையும் கண்டு நீங்கினார் என்றவாறு. (10)

மொழியும் மொழியும் பரிசொன் றிலதா
முன்னான் மறையோ தமுழங் கியகான்
வழியும் வழியும் மதுவார் புதுவீ
வாசந் தகவீ சியவார் குவளைக்
கழியுங் கழியும் படிவந் தலர்பொற்
கமலங் கண்மலங் களையுங் கயநீர்
பொழியும் விழியும் மனமுங் குளிரப்
புதுமா முனிகண் டுபுகழ்ந் தனனே.

இ-ள் : அநாதி காலத்திலே தொடங்கி வேதாகமங்களும் வாக்குக்கெட்டாது என்றொழியாமல் முழங்கிக்கூப்பிடும் வனமார்க்கமும் ஒழுகுந்தேனை நிறையப்பருகின புதிய வண்டுகளும் மணம்பொருந்தி வீசிய நீளிய நீலோற்பலம் மலர்ந்த கழியும் நீங்கும்படி வந்து, அலர்ந்த பொற்றாமரைகளையும் பாச மறுக்கும் திருக்குளத்தையும் நீர்பொழியுங்கண்ணும் மனமும் களிகூரக்கண்டு தோத்திரம் பண்ணினார் புதியமுனி எ-று.

முற்பிறப்பில் இந்தத் தலத்தைத் தரிசித்தவர் அல்லர்; தரிசித்திருந்தால் முத்தி அடையவேண்டுமே அல்லது மறு சன்மம் வாராது; இப்போது மறு சன்மம் கொண்டு வந்து தரிசித்தார் ஆதலால் 'புதிய முனி' என்றார். (11)

சீரார் தருபொய் கைவணங் கியதன்
தென்பான் மிகுமன் பொடுசேர் சரியே
பேரா வகைசெல் லவொரா லநிழற்
பிரியா தபிரா னெதிர்நேர் படமுன்
பாரா ரவிழுந் துமெழுந் தும்விழிப்
பயின்மா ரிபொழிந் துமழிந் துமொழிந்(து)
ஆரா வமுதே யெனையா ளுடையாய்
அறிவே யெனவோ தினனா ரணமே

இ-ள் : வைபவம் மிகுந்த புண்டரீகப்பொய்கையை வணங்கி அதற்குத் தெற்காக மிகுந்த அன்பு துணையாகப் பொருந்தின சரிவழியே விலங்காமல் செல்லுமளவில், ஒரு ஆலடிநிழலைப் பிரியாத ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் முன்னே வெளிப்படத் திருமுன்னே ஏகாங்கமாக விழுந்து, தெண்டம்பண்ணியும் எழுந்திருந்தும் விழியிலே பயிலப்படா நின்ற நீர் மேகம்போலப் பொழியாநின்றும் தன்னை இழந்தும் தோத்திரங்கள் மொழிந்தும், தெவிட்டா அமுதே ! என்னை

பொழியாநின்றும் தன்னை இழந்தும் தோத்திரங்கள் மொழிந்தும், தெவிட்டா அமுதே ! என்னைஅடிமையாக உடையவனே ! என் அறிவே! என்று வேதங்களாலே தோத்திரம் பண்ணினார் என்றவாறு, (12)

**முன்னாள் பதியா யினுமே தகுசீர்**
**மூலப் பதியா ளுடைமுக் கணனே**
**பொன்னார் தருபொய் கையுடைப் புனிதா**
**பொடிசேர் வடிவே முடிவே யடியேன்**
**என்னா தரவார் தருபூ சைகொள்வாய்**
**இனியாய் முனியா தெனவோ திமடுப்**
**பன்னாண் மலர்கொய் ததின்மூழ் கியருட்**
**பாதங் களணைந் துபணிந் தனனே.**

இ-ள் : அநாதிகாலத்திலே தொடங்கிப் பெத்த முத்தி இரண்டினும் சுதந்திரத்தினலே ஆண்டருளிய பதியேயாயினும் பின்னையும் சீரிய உனக்கொத்திருக்கிற மூலமான பதியை ஆண்டுகொண்டருளிய மூன்று கண்ணினை உடையோனே ! இதுவுமின்றி உனக்கு மேலும் அருளுமாயிருக்கிற புண்டரீகப் பொய்கையையுடைய புனிதனே ! இயல்பாகவே விபூதிதூளிதஞ்சேர்ந்த திருமேனியை உடையவனே ! எல்லாப் பொருளுக்கும் முடிவே ! பேதையாகிய அடியேனுடைய ஆசை மிகுந்த அருச்சனையைக் கொண்டருளுவாய்; யாவர்க்கும் இனியனே ! தீதென்று திரோபவியாமற்கொண்டருள் என்று திருக்குளத்திலே மூழ்கி அதில் புதிதாக மலர்ந்த பல பூக்களையும் பொற்றமரைப்பூவையும் எடுத்துவந்து அருட்பாதங்களை அருச்சித்தார் என்றவாறு, (13)

**தடமா மலர்கொண் டுவணங் கியருந்**
*** தாவா முனிதில் லைவனச் சரியே**
**குடபா லணைவான் மணமா மலரும்**
**குளமுங் கரையுந் தளமுங் குறுகித்**
**திடமார் தருவே நிழலா வெழிலார்**
**சிவலிங் கமருத் தியருந் தியொடங் (கு)**
**இடமா கவிரண் டிடமும் பணிவுற்**
**றிறையே துணையா கவிருந் தமர்நாள்.**

இ-ள் : பெரிதாய் அலர்ந்த திவ்விய மலர்கொண்டு பூசித்துப் பெரிய அருள்நீங்காத முனிவர் தில்லைவனத்தில்

---

* 'தவமாமுனி' எனவும் பாடம்.

மேற்காக ஒரு சரிவழியே செல்லுகையிலே, பரிமளம் மிகுந்த பூவினையும் வாவியினையும் கரையினையும் உள்ளாடு வெளியையும் பொருந்திச் சிக்கென்றதொரு தில்லைச் செடிநிழலிலே சோதிரூபமான சிவலிங்கம் தாபித்து, ஆசையுடனே பன்ன சாலையும் உண்டாகப் பண்ணி, மூலத்தானத்துடன் இரண்டு இடமும் பணிவுற்று, இறைவனே துணையாகத் திரிவிதகரணமும் பொருந்தியிருக்கும் நாளில் என்றவாறு.

'திடம் ஆர் தருவே' எனபதற்கு வலிய மரம் எனினும் அமையும். (14)

காலம் பெறநீ றணிமா முனிநீர்
கமழ்குண் டிகைதண் டுகரண் டிகையுட்
சாலும் பலபோ துசமித் தொளிர்புற்
சாகா திபலா சிலைதா மிகமேல்
நாலுஞ் சடையெட் டுமுடித் தொருநாள்
நண்ணித் திகழர்ச் சனைபண் ணமருப்
பாலொன் றலராய் பொழுதே பழுதார்
பலமா மலர்கண் டுபகர்ந் தயர்வான்.

இ-ள் : சந்தியாவந்தனகாலங்கள் பொருந்த அனுட்டானம் பண்ணும் மழமுனி என்பவர் பரிமளமுள்ள சலம் பொருந்தின கமண்டலம், தண்டு, திருப்பூங்கூடை நிறைந்த பல புட்பங்கள், சமிதை, பசிய தருப்பை, அறுகு முதலானவை மிகக்கொண்டு வந்து, அதற்குப் பின்பு, தாழ்ந்த சடையை எட்டு முடியாகக் கட்டி முடித்து, ஒருநாள் புட்பவிதிப்படி பொருந்தப் பூசிக்க, பரிமளம் பொருந்தின புட்பம் ஆராயும் அளவில் குற்றம் மிகுந்த பல புட்பங்களைக் கண்டு விதனப்பட்டுச் சொல்வார் என்றவாறு. (15)

வண்டு தும்விடிந் தெனிலல் லெனிலோர்
வழியுந் தெரியா துமரங் கண்மிகக்
கண்டு ரவளர்ந் துமரங் சரணங்
காலும் பனியால் வழுவுங் கழிதேன்
உண்டு றுபடுத் தியசெம் மனல்வீ
யொத்தே றுமரும் புவிரும் பலரைப்
பண்டு றொடெரித் தபரம் பொருளார்
பழுதென் றனரென் றுபகர்ந் தயர்வான்.

இ-ள் : புட்பம் விழுந்து எடுக்கில் வண்டுகள் தீண்டும்; இராத்திரி எடுக்கப்போனல் வழியும் தெரியாது; கோங்கு முதலான மரங்களிலே எடுக்கலாம் என்னில் அடிமரம் கண்ணுக்கும் எட்டாமல் உயர்ந்து வளர்ந்திருக்கிறபடியாமல் கையும்காலும் பனியால் வழுக்கும்; மிகுந்த வண்டுகள் தேனையுண்டு ஊறுபடுத்திய பழமையாகிய நல்லபூவும் மலரும்பக்குவத்தைப் பொருந்தி வண்டுகள் ஏறத்தக்க அரும்புகளும் நாட்பூவும் முன்னே விரும்பாத முப்புராதிகளை ஊருடனே எரித்தருளிய தம்பிரானார் ஆகமத்திலே பழுது என்று அருளிச்செய்தார்; இதற்கு என்ன செய்வோம் என்று விதனப்பட்டிருந்தார் என்றவாறு. (16)

தண்ணார் மதிசூ டுசடா மகுடத்
தலைவா கடைவாழ் வுதவிர்ப் பவனே
கண்ணார் நுதலோ யொருமான் மறிசேர்
கரவா வரவா * கருமூ லகரா
மண்ணார் புகழ்தில் லைவனம் பிரியா
மணியே யெனையா ளமகிழ்ந் தனையேல்
எண்ணா துநினைந் தவைதந் தருண்மற்
றின்பார் தருமன் பிலமென் றயர்வான்.

இ-ள் : குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணிந்த சடாமகுடத்தலைவனே ! ஈனமான உலகவாதனையை அடியார்களுக்குத் தவிர்ப்பவனே ! நிறைந்த பாலலோசனனே ! ஒப் பற்ற மான்மறி பொருந்தின கரத்தையுடையானே ! பாம்பைப் பூணகவுடையானே ! பவபாசமூலத்தைக் கெடுப்பவனே ! பூமியிலுள்ளோர் துதிக்கும் தில்லைவனம் நீங்காத சிந்தாமணியே! என்னை ஆட்கொள்ளத் திருவுள்ளமகிழ்ச்சியுண்டாகில் பத்தி ஞான வைராக்கியம் இல்லான் என்று என்னை எண்ணாமல் அடியேன் நினைத்த வரம் தந்தருள்; வேறொரு சுகத்தில் ஆசையிலேன் என்று சோர்வார் என்றவாறு. (17)

அன்பூ டுருகப் பணிவா ரலரேல்
அருளா யெனும்வாய் மையறிந் தும்விடா
என்பூ சையுநே சமும்யா னுமுனக்
கெங்கே யெனநொந் தயர்வா னெதிரே

* கரு மூல கரா : ஹரா என்பது கரா எனலாயிற்று.

வன்பூ தமிகப் புடைசூழ் விடைமேன்
மதிசூழ் சடைவா னவர்கோன் வரநேர்
முன்பூ தலமீ துபணிந் திருகண்
முகமார் புனலா டினன்மா முனியே.

இ-ள் : பத்தியினால் நெஞ்சம் கரைந்து வணங்கார்களாகில் கடாட்சியாய் என்கிற வேத ஆகம வாக்கியங்களை உண்மையாகக் கண்டும் ஆசைவிடாத எனது அருச்சனையும் அகப்பட்ட நெசமும் (தபோதனனாய் இருக்கிற) யானும் (ஆத்தியந்த சூனியமாய்ப் பரிபூரணமாய்ப் பக்தவற்சலனாயும் இருக்கிற) உனக்குத் தகும்படி எப்படி என்று விதனப்பட்டு மோகிப்பவன் முன்னே, வலிய பூதப்படை மிகச்சூழும் இடபவாகனத்தில் இளந்திங்கள் அணிந்த சடையையுடைய தேவ தேவன் எழுந்தருள, அவர் சன்னிதிக்கு நேராகப் பூமியிலே சாட்டாங்கமாக நமஸ்கரித்து இரண்டு கண்களாலும் தாரை கொள்ளுகிற சலத்தாலே மழமுனிவர் ஸ்நானம் பண்ணினார் என்றவாறு. (18)

ஆலந் தருவா னமுதா மொழியா
லருமா முனியர்ச் சனையிச் சையினின்
சீலந் திகழ்வாய் மைமகிழ்ந் தனநீ
சிந்தித் தவரம் பலசெப் பெனவென்
காலும் கரமும் புலியின் மலியக்
கண்ணங் கவைதங் கவிரங் கிமுதற்
கோலந் திகழ்பூ சைகொளென் றுவரங்
கொண்டா னவையெந் தைகொடுந் தனனே.

இ-ள் : அழகுள்ள ஆலமரநிழலில் நீங்காத தம்பிரானார் அமுதசொரூபமாயிருக்கிற தமது திருவாக்கினலே 'அரிய மழமுனியே ! நம்மை அருச்சிக்கப் பெருக ஆசைப்பட்ட நல்ல சீலம் பொருந்தின உன்னுடைய திரிவிதகரண சுத்தியின் உண்மையைக் கண்டு சந்தோஷப்பட்டோம் ; நீ நினைத்த பல வாகிய வரங்களைச் செப்புவாயாக, என்று அருள், 'அடியேனுடைய கையும் காலும் புலியைப்போல வலுவான நகப்பற்று உண்டாகவும் அவைகளில் கண்கள் பொருந்தவும் இரங்கியருளி, முன்னே புட்பவிதிக்குத் தேவரீர் கற்பித்த நானதி கர்ம அருச்சனைகொண்டருளும்' என்று வேண்டிக்கொள்ள அந்த வரங்களைச் செகற்பிதாவாகிய பரமேசுவரர் திருவுளம் பற்றினார் என்றுவாறு. (19)

விண்ணா டருநா டருமே லவனே
விரவா வரமுந் தருவா னெனநற்
கண்ணா றுமரும் புபெரும் புனன்மெய்க்
காலா றெனவார் தருகா தன்மையால்
மண்ணா ரவணங் கவணங் குடனே
மறைவா னிறைவான் வழிமே வியபின்
பண்ணா ரவியாக் கிரபா தனெனும்
பாவார் பெயரோ தினபா ரிடமே.

இ-ள் : அரி அயன் இந்திராதிகளும் சொப்பனத்திலும் காண்பதற்கரிய பகிரண்டங்கடந்த மேலோனே என்பொருட்டாக இவ்விடத்தே திருமேனிகொண்டு எழுந்தருளி வேண்டின வரந்தருவான் என்று கண்களில் நின்றும் உண்டாகா நின்ற பெரும்புனல் உண்மையான ஆற்றங்கால் போல நீண்டொழியாமற் செல்லும் பத்திமையால் பூமி அதிர ஏகாங்க மாக நமஸ்கரிக்க ஈசுவரியுடனே மறைந்தருளின. சிவபொருமான் சிதம்பரத்திலே எழுந்தருளின பின்பு பண்ணும் பாடலும் பொருந்த வியாக்கிரபாதன் என்கிற திருநாமத்தைப் பூத கணத்தார் கூறினார்கள் என்றவாறு.

பார் இடம் - பூலோகத்தார் எனினும் அமையும். (20)

அறுகா லெழுகால் பிறகா மடுவுற்
றமையா நியதிச் சமைவா தரியா
மறைகா தலின லறைவா னறவார்
மந்தா ரமரும் புசெருந் திகுரா
நிறைபா திரிகோங் குயர்சண் பகமே
நீர்வாழ் மலர்வல் லிகொணீண் மலர்கொண் (டு)
இறையா னடியே முறையால் வழிபட்
டெண்ணார் தருகா லமிருந் தனனே.

இ-ள் : வண்டுகள் எழுவதற்குமுன்னே பொய்கையினிடத்துச் சேர்ந்து முடியா நியதி முடித்து அன்புடனே வேதங்களைப் பத்தியினல் உச்சரித்துச் சென்று பற்றி ஏற நகமும் பார்த்து எடுக்க விழியும் கை கால்களில் பெற்றமையால் கோட்டுப்பூ கொடிப்பூ நீர்ப்பூவும் குற்றமறத் தெரிந் தெடுத்துக்கொண்டு நல்ல தம்பிரானாருடைய திருவடியிலே விதிப்படி அருச்சித்து எண்ணிறந்த காலம் இருந்தனர் என்றவாறு. (21)

நற்றந் தைபுலிச் சரணங் கரநீள்
நயனங் கள்பரித் தமைகா ணநயந் (து)
உற்றங் கெதிர்சென் றுவணங் கமகிழ்ந்
தொளிர்மே னியின்வாய் மையுந் துடனே
பொற்றண் மலர்வா விபடிந் திறையைப்
பூசித் தருண்மே வுபுலீச் சரமும்
பற்றும் பெருமா னையுமர்ச் சனைசெய்
பயில்வா ரவிருந் துபரிந் தொருநாள்.

இ-ள் : நல்ல பிதாவாகிய மத்தியந்தின முனிவர் நம்முடைய பத்திரன் புலிக்காலும் கையும் அவைகளில் கண்களும் பெற்றனன் என்று சந்தோஷப்பட்டுக் காணும்படிக்கு வந்த வருக்கு எதிரே சென்று பொருந்தி நமஸ்கரித்த அளவில், வியாக்கிரபாதமான தேசோன்மயமாகிய சத்திசரீரத்தை இன்புறக்கண்டு மகிழ்ந்து அப்பொழுதே பொன்மையும் குளிர்ச்சியும் உள்ள மலர்கள் பொருந்திய சிவகங்கையிலே மூழ்கி, ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானாரை அருச்சித்து, காருண்ணியமான திருப்பூலிச்சரத்தல் பொருந்தின தம்பிரானாரையிம் நாடோறும் பூசைசெய்து, வியாக்கிராதருடைய பன்னசாலையிலே இருந்து குமாரனுடைய சரீரத்தைக் கண்டு பிரியப்படடு ஒருநாள் ஒருவார்த்தை சொல்வார் எ-று. (22)

நற்பான் மிகுதந் தையரும் புதல்வா
நஞ்சந் ததியுய்ந் திடநண் ணினையேல்
இற்பா லினியா குதியா திமறித்
திடுவா னுடையா னெடுவா னடைவான்
முற்பா லுனையா னெனநீ பெறுமா
முனியா துகொளென் றுவசிட் டமுனிக்
கற்பார் தருபின் னியைமன் னுமணக்
கடனா லுடனா நெறிகண் டனனே.

இ-ள் : நல்ல பகுதி மிக்க பிதாவானவர், யான் பெறுவதற்கு அரிய புதல்வனே ! நம்முடைய சந்ததி தழைத்து ஓங்கப் பொருந்துவையாகில் இல்லறத்தின் பகுதிக்கு இனி ஒன்று சொல்லக்கேள்; 'பிதிரர்களும் எதிர்கொள்ளும் சங்கிராந்திகாலத்தில் தருப்பணம் பிண்டோ தகக்கிரியை முதலாகப் பண்ணுகின்றவனாகிய புத்திரனை உடையவனே பிதிர்லோ கத்தை அடைவன்' என்று வேதம் சொல்கையால் முன்னம் உன்னை யான் புத்திரனாகப் பெற்றதுபோல ஒரு புத்திரனை

நீயும் பெற, வெறுத்து விடாமல் விவாகம் செய்துகொள் என்று சம்மதிக்கப்பண்ணி, வசிட்டமாமுனியின் தங்கையான கற்புமிகும் கன்னியைப் பேசிப் பொருத்த நிமித்தம் பார்த்து * விரத சமாவர்த்தனம் பாணிக்கிரகணம் கர்ப்பாதானம் பும்ஸ வனம் சீமந்தம் சாதகன்மாந்தமாகச் செய்வித்துப் போனார் என்றவாறு. (23)

பின்பக் கொடிமன் னுபமன் னியனைப்
பெறவந் தவருந் ததிகொண் டுபெயர்ந் (து)
இன்பச் சுரபிப் பொழிபா னுகர்வித்
தெழிலா ரவளர்த் திடுநா ளிவர்தாம்
அன்பிற் புணரக் கொணர்வித் துமகிழ்ந்
தயிலென் றிடுமுன் பயிலும் படிசேர்
புன்பற் கமர்பண் டமுமுண் டறிபால்
போலுய்த் தனவும் புகழா திகழ்வான்.

இ-ள் : சிறிது காலத்துக்குப்பின் வியாக்கிரபா தருடைய தேவியார் திடசித்தனான உபமன்னிய பகவானைப் பெற,சாதகன்மத்துக்குவந்த அருந்ததியார் அந்தக் குழந்தையைத் தம்முடைய ஆச்சிரத்துக்குக் கொண்டுபோய் இனிய காமதேனு சுரந்தபாலை ஊட்டி அழகுபெற வளர்க்குநாளில் வியாக்கிரபாதருடைய தேவியாரும் புத்திரவாஞ்சையாலே தங்கள் பன்னசாலையிலே கொண்டுவரச்செய்து ஆசையுடனே உண் என்று முன்னேயிடப்பட்ட பாகஞ்செய்து சிறிய பல்லுக்கு மெத்தென்ற பதார்த்தமும் முன் புசித்தறிந்த பால்போலக் கற்பித்த திரவியங்களையும் புசியாமல் உமிழ்ந்து போடுவார் எ-று. (24)

மணமே தகுபால் பெறுமா றழமா
மகனார் முனியாம் வறியோ மறியோம்
உணவே யினிதா மவைதா மிவர்கா
னுடையா ரெனவாழ் வுடையா னெதிரே
துணர்மே லெழுவெங் கனறங் கிநடுத்
துஞ்சுந் தொழிறஞ் செனநைஞ் சமுதக்
கணமே யிறையா னிறையா னிறைபா லலையுங்
கடல்பெற் றதுகண் டுகளித் திடுவான்.

* விரதசமாவர்த்தனம் - முகூர்த்தத்திற்குமுன் செய்யும் சடங்கு.

இ-ள் :திவ்விய பரிமளமிகுந்த காமதேனுவின் பாலைக்கருதி உபமன்னியபகவான் அழ வியாக்கிரபாதமுனி யாங்கள் தரித்திரர்கள், பாலும் பழமும் இனிய பதார்த்தமும் சொப்பனத்திலும் அறியோம், புசிப்புக்கு இனிய பதார்த்தங்களை மிகுதியாகவுடையவர் இவர்தான் என்று அழியாத சம்பத்துள்ள ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் சந்நிதியிலே வளரும்படிவிட, சிகைவிட்டேமுகின்ற ஜாடராக்கினியைப் பொருந்தி மத்தியிலிறக்கும் செய்கை பொருந்த அழவும் சீவனற்று அப்பொழுதே தம்பிரானர் திருவருளினாலே மிகுந்த அலைபொருந்தின திருப்பாற்கடல் வரப்பெற்றுப் பானம் பண்ணினதை இருடி கண்டுகொண்டு களிப்புற்றாடினார் என்றவாறு, (25)

ஆளும் பெருமா னெதிரங் கொருநா
ளலர்பங் கயவா தனமா யமரத்
தாளொன் றுதலஞ் சகனந் தவிரச்
சடரந் தொடர்மார் பெதிர்தள் ளவிழத்
தோளங் கைபொரக் களமே னிமிரச்
சுரிதந் தநிரைப் பிரிவந் தரநா
வாளொன் றுவிழிக் கடைதுண் டம்விடா
வண்ணந் தகுதிண் ணியமா முனியே.

இ-ள் : ஒருநாள் தன்னை ஆண்டுகொண்டு அருளிய தம்பிரானார் சன்னிதியிலே பத்மாசனம் பொருந்த ஒருதாள் பூமியையும் * சகனத்தையும்பொருந்தாமல் வயிறுதொடர்ந்து மார்பை எதிரே தள்ள இரண்டு தோளும் தாழக் கை இரண்டும் புட்பம்போலக் கழுத்து மேனோக்கி உயரக் கீழ்வாய்மேல் வட்டப்பாட்ட பல்லுக்கு நடுவே நாவை வைத்து ஒளிபொருந்தின விழிகளை மூக்குநுனியிலே வைத்திருந்து நாலுவன்னத்திலே மேலான திடசித்தத்தையுடைய பிரம இருடி எ-று. (26)

சீரார் சிவயோகா கமகம் புணரச்
செறியின் புணரக் குறியின் புறுமா (று)
ஏரார் தருதா ருவனத் திடையா
றெண்ணாயிரமா முனிவர்க் கிறைவன்

* சகனம் – கடியின் முற்பக்கம்.

ஓரா தவர்மோ கமொழித் தருளா
ளொருநா ணடமா டலுகந் தனனென் (று)
ஆரா வுணர்வா லறிவுற் றயரா
அந்தோ வெனநொந் தயர்கின் றனனே,

இ-ள் : அட்ட ஐசுவரியத்துக்கு மேலான சிவயோகமானது ஆன்ம சைதன்னியத்தைப் பொருந்த விளைந்த சுகானு பவத்தினாலே பார்த்த இடக்குறியிலே பிரியா அதிசயமாக அழகுவிளங்கின தேவதாருவனத்தில் நாற்பத்தெண்ணாயிர மாக இருடிகட்குத் தன்னை உணராதவருடைய மோகங்களையும் நீக்கி, ஒருநாள் தேசோரூபமாக நிருத்தம்செய்யப் பொருந்தினன் என்னும் இதனைச் சிறிது அறிவினாலே கண்டமாத்திரத்திலே அயர்ந்து அந்தோ என நொந்து வியாகுலத்திலே அழுந்தினார் என்றவாறு. (27)

நம்மே னிகொடெந் தைபிரான் வெளியே
* நடமா டியநல் லிடமா யிடநாம்
முன்னே யமரா வகைமா முனிவன்
மூலப் பதிசே ரமொழிந் தனனல்
தன்னே ருறுதா ளருணா முணரத்
தகுமோ மிகுமன் பகமோ விலதால்
என்னே பெருமா னொருமா னுடன்வந்
தெங்கே பரதந் தருமென் றயர்வான்.

இ-ள் : எம்முடைய தம்பிரானார் தேசோரூபியாய் இருடிகள் யாரும் காண நிருத்தம் செய்தருளிய தேவ்தாருவனம் நமக்குச் சிவபூசைபண்ணி இருக்கும் இடமாகக் கற்பியாமல் நம்முடைய பிதாவாகி மத்தியந்தினமுனி ஸ்ரீமூலத்தானத்திலே சிவபூசைபண்ணி இரு என்று கற்பித்தனர்; தனக்குத் தானே ஒப்பாகிய ஸ்ரீபாதத்தின் உண்மைப்பற்றுச் சற்றும் இல்லாத யாம் அறியும் தகுதியோ ? உள்ளத்தில் மெய்யன்பு இல்லை ; எப்படியோ தம்பிரானார் ஈசுவரியுடனே எழுந்தருளி நமக்கு எவ்விடத்தே நிருத்தம் தரிசிப்பத்தருளுவர் என்று சோர்வார் என்றவாறு,

பின்பு தெளிந்து சிதம்பரத்தலமே நிருத்தத்தைத் தரும் என்கிறர். (28)

* 'நடமா டியநா டிடமா' எனவும் பாடம்.

அத்தன் பரதத் துவனித் தனடத்
தமரும் பொதுவின் பெயர்மன் றமலம்
சத்தும் பரிரண் மயகோ சமகத்
தனிபுண் டரிகங் குகைவண் ககனம்
சுத்தம் பரமற் புதமெய்ப் பதமச்
சுழுனா வழிஞா னசுகோ தயநற்
சித்தம் பரமுத் திபரப் பிரமந்
திகழுஞ் சபைசத் திசிவா லயமே.

இ -ள் : செகற்பிதாவாய்த் தத்துவாதீதனாய் நித்தனாயிருக்கிற சிவபெருமான் அனவரத தாண்டவன் பொருந்தின அப்பொதுவின் பெயர் சர்வான்மாக்களுக்கும் பொதுவாய்ச் சங்காரவழக்கு அறுக்கிற அம்பலம் ஆதலால், அநாதியோ பரசாசுவதம் ஆதலால், பெத்தம் முத்தி இரண்டிலும் நீங்காமல் உயிர்க்குயிராய் நீங்காமல்நிற்கிற சற்காரியம் ஆதலால், மேலான பொருள் ஆதலால், களங்கமற்ற கனகமய ரூபம் என்று வேதம் சொல்லுதலால், தன்னைத்தானே அறிந்து இருக்கும் ஆதலால், சுத்தகேவலம் ஆதலால், பூமிக்கு இதயகமலம் ஆதலால், யாவருக்கும் புகலியிடம் ஆதலால், சுத்த பரமாகாசனம் ஆதலால், சாக்கிராதிதம் கழன்ற சுத்தம் ஆதலால், பரஞானம் ஆதலால், காணுந்தோறும் காணுந்தோறும் புதுமையாயிருத்தலால், சத்திய ஞானரூபமாய் இருத்தலால், சுழுமுனாமார்க்கத்திலே எழுந்திருக்கிற பிரகாசமான ஞானம் ஆதலால், தன்னைத் தரிசித்தவர்களுக்கு ஞானானந்தத்தைத் தோற்றுவிக்கும் பொருளாதலால், பசு பாச ஞானம் நீங்கி இருத்தலால், சர்வத்துக்கும் இடங்கொடுத்திருத்தலால், பத முத்திகளைக் கைவிட்ட இடம் ஆதலால், பிரமசொரூபமான மகாமாயைக்கு மேலாதலால், எப்பொழுதும் எல்லாப் பாதத்திலும் விளங்கும் ஞானமாகிய சபை ஆதலால், சிவசத்தி சொரூபமாதலால், ஆனந்த நிருத்தத்துக்கு அதிட்டானமுமாய் ஆலயமும் ஆதலால் என்றவாறு. (29)

என்றின் னமனே கமனே கமெடா
ஏரார் பொதுவின் பெயரா ரணநூல்
நின்றென் றுமியம் பிடுமின் னுமிதின்
நேரே யெனவிங் காரே யறிவார்

அன்றந் நிலயத் தலைவன் னிலைகண்
டவருண் டெனவின் றுணர்கின் றனமால்
மன்றந் தெரியத் தருமென் றருளால்
வளர்சிந் தைதெளிந் தனன்மா முனியே.

இ-ள் : என்று இப்படியே இன்னம் பல நாமங்களை அழகு விளங்கும் பொதுவின் பெயராகக் கற்பித்து வேதாகம சாத்திரங்கள் இடைவிடாமல் நின்று எக்காலமும் கோஷியா நிற்கும் இந்தச் சிதம்பரத்தினுண்மையை இன்னது என்று அளவிட்டு யார்தான் அறிவார் ? முற்காலத்திலே நிருத்த மூர்த்தியினுடைய சத்தியத்தைத் தரிசித்தவர்கள் உண்டு என்று ஆகமப் பிரமாணத்திலே இன்று கண்டறிந்தோம். ஆதலால் சிதம்பரந்தானே தரிசிப்பிக்கும் என்று திருவருளினலே தெளிந்தார் என்றவாறு. (30)

## வியாக்கிராபதச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் -59.

முன்றாவது

# பதஞ்சலிச்சருக்கம்

இந்தவகை வளர்புலிக்கா லெழின்முனிவன் தெளிந்தெந்தை
அந்தமிலா வானந்த நிருத்தமளித் தருளென்று
பந்தமறப் பணிந்திருப்பப் பரவுபதஞ் சலியவன்பால்
வந்தபடி யிருந்தபடி போனபடி வகுத்துரைப்பாம்.

இ-ள் : ஞான ஞேயங்களுக்குப் பிறிவு இல்லாமையால் ஞானந்தானே ஞேயத்தைத் தரிசிப்பிக்கும் என்று அறிந்த வகையினாலே பெரிய தேஜசையுடைய வியாக்கிரபாதமுனி சித்தந்தெளிந்து, சுவாமியே ! முடிவிலா ஆனந்த நிருத்தமும் தரிசிப்பித்தருளுவாயாக என்று அதற்கு விலக்காயிருக்கும் பந்தபாசநீங்கச் சிவார்ச்சனைப் பண்ணியிருப்ப, யாவரும் பரவும் பதஞ்சலி தபோபலத்தினாலே வியாக்கிராபாதரருகே வந்தபடி நெடுநாள் தவசுபண்ணியிருந்தபடி எமக்குத்தெரிந்த மரியாதை கூறுபடுத்திச் சொல்லுவாம் என்றவாறு. (1)

பரந்தபெரும் பாற்கடலிற் பள்ளிகொள்வா னொழிந்தொருநாள்
அருந்தவமா ரனந்தன்மிசை யரியரசங் கரவென்று
கரங்கள்சிர மிசைமுகிழ்ப்பக் கண்ணருவி சொரியநிமிர்ந் (து)
இருந்தனன்முன் சலியாத வெழுதுமணி விளக்கென்ன.

இ-ள் : அகன்று விசாலமாகிய பெரிய திருப்பாற் கடலில் பெருந்தவம் மிக்க நாகசயனத்தில் பள்ளிகொள்ளுஞ் செய்கையை ஒழிந்து ஒருநாள் மகாவிஷ்ணுவானவர், அரகர சங்கர என்று உச்சரித்து, கைகளானவை தலைமேலே ஏறிக்குவியாநிற்ப, கண்கள் அருவிபாய, வாயுமுன் சலியாத சித்திர தீபம்போலப் பத்மாசனம் விளங்க இருந்தார் என்றவாறு. (2)

திருமகளு மணுகாது திகைத்தயரத் திருந்துபணி
பரிசனமு மிகநடுங்கப் பரானந்த பராயணனாய்ப்
பொருவிலனு பவநீங்கிப் புவிமிடைந்த திருளெனவந் (து)
இருபரிதி யெழுகிரிபோ லிருகண்மலர் தரவிருந்தான்.

இ-ள் : இப்பரிசுகண்ட மாகாலட்சுமியும் அணுகப் பயப்பட்டுத் திகைத்துநிற்ப, குற்றந்தீர்ந்த அடிமையான சேடனும் மற்றப் பரிசனங்களும் நம்பால் அபராதம் உண்டோ என்று

மிகவும் நடுங்க, பரமானந்தத்திலே பரவசராய் ஒப்பில்லாத சிவானுபவம் நீங்கிப் பூமியில் அந்தகாரம் மேலிட்டது என்ன இரண்டு ஆதித்தர் கூடிவந்து உதிக்கும் உதயபருப்பதம்போல விழிமலர்ந்திருந்தார் என்றவாறு. (3)

**புண்டரிக விழிமலர்ந்து புணரமளி கழிந்துபுனல்**
**கொண்டுறிய திகண்முடித்துக் குலவியமண் டபமேறித்**
**தண்டரள மணிப்பந்தர்த் தமனியப்பூந் தவிசின்மிசை**
**அண்டர்தொழ வந்திருந்தா னானந்த வனந்தலுடன்.**

இ-ள் : செந்தாமரைக்கண் விழித்து நித்திரை பொருந்தின நாகசயனம் நீங்கி, சுத்தசலங்கொண்டு அனுட்டானம் பண்ணி முடித்து, நவரத்தினப் பிரகாசம் பரந்த மண்டபத்திலேறி, குளிர்ந்த முத்தின்பந்தற்கீழிட்ட பொலிவினையுடைய பொற்சிங்காசனத்தின் மேலே பிரமாதி தேவர்கள் வந்து நமஸ்கரிக்கச் சுகநித்திரையுடனே சாக்கிரம் கலந்திருந்தார் என்றவாறு. (4)

**தாழ்ந்தமடை யுடைபுனல்போல் தம்பிரா னடங்கருதி**
**ஆழ்ந்தவினை வழிமாற்றி யானந்த பரவசனாய்**
**வாழ்ந்தளவில் பேரின்ப வாரிவழி யேயொழுகி**
**வீழ்ந்தகருத் தினைமீட்டு மேட்டுமடைப் புலமேற்றான்.**

இ-ள் : பள்ளமடையை எடுத்தோடும் சலம் போல் பரமசிவம் தாருகாவனத்தில் நடித்தருளிய நிருத்தானந்தத்தில் கருத்தைச் செலுத்தி, தாம் முன்பு அழுந்தும் துன்பக் குழியை மாற்றி, ஒழியாத சுகபரவசராய் வாழ்ந்து, அளவில்லாத பேரின்பவெள்ளத்திலே சென்றமிழ்ந்தின சித்தத்தை மீள்வித்து, விடய ஞானங்களிலே கருத்தேறினார் எ-று. (5)

**தெள்ளுமனந் தெளிபொழுதில் திருந்தனந்த னடிவணங்கி**
**வள்ளலே யடியேனா மலரமளி மிசைமுன்போல்**
**பள்ளிகொள்ளா துணராதிப் பரிசிருந்த படியடியேற் (கு)**
**உள்ளபடி யருள்செய்ய வேண்டுமென வுரைசெய்தான்.**

இ-ள் : கலங்கின மனம் தெளிந்து விடயஞானத்திலே உறைத்தளவில், கிரதகிர்த்தியனாயிருக்கிற சேடன் நமஸ்கரித்து அபீஷ்டவரதனே ! அடியேனாகிய விரிந்த அமளிதனில் முன்புபோலப் பள்ளிகொள்ளாமலும் உணராமலும் இப்படி

ஒருபிரகாரத்திலே எழுந்தருளியிருந்தபடி அடியேனுக்குச் சத்தியமாக அருளிச்செய்யவேண்டும் என்று விண்ணப்பஞ் செய்தான் என்றவாறு. (6)

ஆங்கவனும் நகைத்தருள்கூர்ந் தனந்தனிரு வலர்கமலப்
பூங்குழலு மிருவென்று புகன்றெனையா ளுடைப்புனிதன்
தாங்கரிய பெருங்கருணைத் தன்மையினா லெனக்களித்த
ஓங்குதிரு வருள்கேட்கி லுலவாதென் றுரைசெய்தான்.

இ-ள் : அவ்விடத்து மகாவிஷ்ணு நகைத்தருளி அதிக பிரியத்துடனே, சேடனையும் பெரிய தாமரையிலிருக்கும் திருமகளையும் நோக்கி, இருங்கள் என்று அருளிச்செய்து, என்னை ஆண்டுகொண்ட இயற்கையான சுத்தன் என்னால் பெறுதற்கரியதாகிய பெரிய காருண்ணியத்தின் இயற்கையாலே எனக்குப் பிரசாதித்த மேலான அனுக்கிரகத்தை உள்ளபடி நீங்கள் கேட்க என்னில் ஒருகாலத்திலும் முடியாது என்றார் எ-று. (7)

மன்னுமொளி வளர்பொருவில் வடகயிலை மலைமருந்தைச்
சென்னியுறத் தொழநென்னல் திருந்துதிரு முகமதனால்
என்னைவர வழைத்தருளி நகைத்தருள்கூர்ந் தென்கைமிசைத்
தன்னிகரில் கரமூன்றி யெழுந்திருந்தான் தனித்துணைவன்.

இ-ள் : வைகுந்தத்துக்கும் மநோவதிக்கும் நடுவாய்நிலை பெற்ற சோதிரூபமாய் உயர்ந்த ஒப்பில்லாத உத்தரகயிலாசமலையில், சூக்மாவேஷ்டையான மருந்தை நேற்றுயான் சென்று சிரசாராவணங்கின மாத்திரத்திலே, உயிர்களுக்குத் தோன்றாத் துணையாகிய அந்தப் பரமேசுவரர் பிரசன்னம் பொருந்தின திருமுகத்தினாலே என்னைத் தம் அருகே வர வழைத்தருளி நகைத்து அருள்கூர்ந்து பவிஷ்கிருத்தியத்தை நினைந்து அபயாஸ்தங்கொடுத்து என் கையின்மேலே தமது ஒப்பில்லாத ஸ்ரீயத்தத்தை ஊன்றி எழுந்தருளினார் எ-று. (8)

எழுந்தபொழு தொளிர்சங்க மெம்மருங்கு மிகமுழங்கத்
தழங்குமரு மறைபரவத் தாவில்கணம் புடைசூழச்
செழுந்தவர்கள் மிடைந்தேத்தத் தேவரணி தொழத்திங்கட்
கொழுந்தணியும் பெருமானக் குலகிரியி னடியணைந்தான்.

இ-ள் : வீர சிங்காதனத்தில் நின்றும் இழிந்து எழுந்தருளினபொழுது பானுகம்பனால் ஊதப்படாநின்ற பிரகாசம் பொருந்திய சங்குகள் எத்திக்கும் செவிடுபட முழங்கவும், ஒலிக்காநின்ற வேதங்கள் பரவுதல் செய்யவும், குற்றமில்லாத

கணநாதர்கள் சூழ்ந்து சேவிக்கவும், வளவிய நித்திய அனுட்டான தருப்பணரான தபோதனர்கள் நெருங்கித் துதிக்கவும், தேவர்கூட்டம் தொழவும் அர்த்த சந்திர சடாதரனாகிய எம் பெருமான் அக்கயிலாயத்தின் அடிவாரத்தை அணைந்தார் என்றவாறு. (9)

மேயதொரு மண்டபத்து விரைந்தணைந்து தாருவனத்
தூயவரு முனிவருளஞ் சோதிப்போம் நமக்கிசைய
நீயரிவை யுருவாகி நிலவுகென வருள்செய்து
நாயகனுந் திருமேனி நலங்கிளர வலங்கரித்தான்.

இ-ள் : அவ்விடத்துத் திருவுள்ளத்துக்குப் பொருந்தினதோர் ஏகாந்த மண்டபத்தில் துரிதத்தில் எழுந்தருளி, தேவதாருவனத்தில் பரிசுத்தராயிருக்கிற நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளான பெரியோருடைய சித்தபாகம் பரீட்சிப்போம்,நாம் கொண்ட வேடத்துக்குப் பொருந்த நீயும் ஸ்திரீரூபத்தைக் கொண்டு நம்முடனே வருவாயாக என்று எனக்கு அருளிச்செய்து ஆன்ம நாயகனும் தம்முடைய திருமேனி அழகு விளங்க அலங்கரித்துக்கொண்டார் என்றவாறு.

அஃது எங்ஙனம் ? என்னில், (10)

திருவடியின் மிதியடியுந் திகழுடைவெண் கோவணமேல்
மருவரையும் புரிநூலும் வலஞ்சுழியுந் தியுமார்பும்
ஒருவரையு மிருவரையும் புரையாத வுயர்தோளும்
பரவருநற் பொக்கணமுந் தமருகமும் பலிக்கலனும்.

இ-ள் : ஸ்ரீபாதத்திலே மிதித்தருளின மிதியடியும், விளங்கப்பட்ட திருவுடையாடையும், உட்சாத்தும், இதுகள் பொருந்திய திருவரையும், முப்புரியான திருயக்ஞோபவீதமும், வலமாகச் சுழித்த திருவுந்தியும், திருமார்பும், அதில் சாமுத்திரிகா லக்ஷணம் பொருந்தின ஏகரேகையும், உதயம் அஸ்தமனம் என்னும் இரண்டு பருவதங்களும் ஒவ்வாத உயர்ந்த திருத்தோள்களும், யாவர்க்கும் பரவுதற்கரிதாகிய நல்ல விபூதிப்பையும்,தமருகமும், பிக்ஷாபாத்திரமும் என்றவாறு. (11)

சீராருந் திருமிடறுஞ் செங்கனிவாய்ப் புன்சிரிப்பும்
ஏராரும் வார்காது மிலகுவிழித் தொழினயப்பும்
வேராருந் திருநுதற்கீழ் விருப்புருவத் திருப்புருவம்
தாராநிற் குங்கமலத் தனிமலர்போற் றிருமுகமும்.

இ-ள் : சிறிப்பு நிறைந்த நீலமணிபோல் விளங்கின கண்டமும், செங்கனிவாயில் தோன்றுகின்ற சிறுமூரலும், அழகு நிறைந்த வார்காதும், ஒளி சிறந்த திருஷ்டியின் தொழில் நயமும், வேர்வு நிறைந்த திருநெற்றியில் கீழாக விருப்பமே வடிவாயிருக்கிற திருப்புருவத்தைத் தன்னிடத்திலே தோற்றுவிக்கும் மலர்ந்ததொரு செங்கமலம் போன்ற திருமுகமண்டலமும் என்றவாறு. (12)

பொட்டுமலி திருநுதலும் புரிந்துமுரிந் திசைந்தசைந்த
மட்டுமலி கருங்குழலும் வளர்பவள வொளிமழுங்க
விட்டுவிளங் கியவெழிலார் மேனியுமாய் மெல்லியலார்
பட்டுவிழும் படியில்விழும் படியழகின் படிவமென.

இ-ள் : அகலிய பொட்டுப் பொருந்தின திருநெற்றியும், நெறித்துச் சுருண்டு தன்னில் ஒத்து அலைந்த மணம்மிகுத் திருக்கிற கரிய திருக்கேசமும், பவளவொளியும் கருகச் செவ்வொளிவிட்டு விளங்கின அழகு நிறைந்த திருமேனியுடையது மாகிய இவ்வடிவைக் கண்டு மாதர்கள் மோகப்பட்டு விழுந்தன்மைபோல ஆடவர்களும் விழும்படி அழகின் உருவம் போல என்றவாறு. (13)

மன்னனெதி ருறுமளவில் வளிருடா ரகைகுழறிற்
றென்னமலர் மயிர்சொருகி யிலகநுதற் றிலகமுகம்
பன்னிரிய துகிலுடுத்துப் படர்தானை பின்போக்கித்
தன்னிகரி றலைமுலைமேற் றனிக்காறை தனிற்றுவக்கி.

இ-ள் : என் சுவாமியான தேவராசன் எனக்கு எதிர்ப்படு மளவில் (யான் வடிவுகொண்டது எவ்வண்ணமெனில்) நீண்ட கங்கலுடனே நக்ஷத்திரங்கள் கலந்தாற்போல அகத்திலே பலமலரும் கலந்து திருகி முடித்து அளகம் பிரகாசிக்கவும்.நெற்றியிலிட்ட சிறு பொட்டினாலே முகசோபை உண்டாகவும் விலையிடுதற்கரிய பட்டுவத்திரத்தை உடுத்து அதனுடைய முன்தானையை ஏகாசமாகப்போட்டு இந்த முன்தானையை வலக்கைக்கு உள்ளாலே வாங்கி முலைமீது அணிந்த பதக்கத்தின்மேலே பிணித்துவைத்து என்றவாறு. (14)

மாமணிநற் பாடகமு மலிவித்தோர் வல்லியெனப்
பூமலிசெங் கரத்துடனப் புண்ணியனோர் புணர்பொழுதில்
காமனெழி லழித்தவனுங் காமுறுவோ னெனவெனது
தீமைவிழிக் கடைநோக்கிச் சிறுமுறுவ லிறைசெய்தான்.

இ-ள் : பெரிய நவரத்தினப் பாடகமும், அழகுபெற மிக அணிந்து பூத்ததொரு வல்லசாதக்கொம்பு போலக்கையிலே ஒரு பூங்கொத்தை மிகப்பிடித்து, தருமமூர்த்தியான் ஸ்ரீகண்ட பரமேசுரன் சன்னதியிலே சென்று பொருந்தின வளவிலே, காமனழகை எரித்த அந்தக் கடவுளும் காமவிருப் பங்கொண்டவன் போல எனது கொலைத்தொழில் பொருந்தின பார்வையை மோகத்துடனே பார்த்து மந்தகாசமும் சற்றே பண்ணினார் என்றவாறு. (15)

**அவ்வரையி லிமயமயி லமர்ந்திருப்ப வகிலத்துப்**
**பொய்விரவா முனிவரின் புகழியக்க னெனவுணரச்**
**செவ்வரைமே னியனடியேன் சேயிழையாய்ப் பின்செல்லச்**
**சைவமுனி வர்களிருக்குந் தாருவன மதுச்சார்ந்தான்.**

இ-ள் : அந்தக் கயிலாசலத்தில் ஈசுவிரி தனித்து எழுந்தருளியிருக்க, உலகவாசனை அற்ற அருடிகள் இவன் கீர்த்திபொருந்தின இயக்கனாக வேண்டும் என்று யோசிக்க, செம்பவளக்குன்று போலும் திருமேனியுடையவர் அடிமை யாகிய யான் ஸ்திரீயாகப் பின்செல்லச் சிவபத்தரான இருடிகள் தபசு பண்ணிக்கொண்டிருக்கிற தேவதாரு வனத்தை அணுகினார் என்றவாறு. (16)

**சென்றுமுனி வர்களிருக்குந் தெருத்தலைச்சே ரியிற்செறிந்து**
**முன்றிலிடைத் துடிமுழக்கி முறுவன்மிக முகமலர்த்தித்**
**துன்றுபலி கொணர்ந்தணையுஞ் சுரிகுழலா ரெழினோக்கி**
**அன்றிறைவ னின்றுபுரி யபிநயமா யிரகோடி.**

இ-ள் : ஆச்சிரமமளவாக எழுந்தருளி இருடிகளிருக்குந்தெருவில் முந்தின பன்னசாலையிலே புகுந்து, நடுமுற்றத்திலே நின்று, தமருகத்தை முழக்கி, முகத்தினிடத்தில் ஒளி விளங்க நகைத்தருளி, கைநிறையப் பிட்சைகொண்டுவந்து அருகே நிற்கும் இருடிபத்தினிகளுடைய அழகைக் கண்டு, அப்போது தன்னுடைய வினோதத்தினாலே கண்ணின அபிநயம் ஆயிரகோடியாம் என்றவாறு. (17)

**எண்ணரிய வபிநயங்க ளிறைபுரிய நிறைகற்பிற்**
**பண்ணமரு மொழிமுனிவர் பார்ப்பனிகள் பலரீண்டி**
**நண்ணருநாண் மடமச்சம் பயிர்ப்பென்னு மிவைநமுவக்**
**கண்ணுதலோ னிருமருங்கு மொன்றாகக் கைக்கொண்டார்.**

இ-ள் : சுவாமியானவர் எண்ணிறந்த அபிநயங்களைப் பண்ண நிறைந்த கற்பும் இசைக்கு ஒப்பான மொழியுமுடைய இருடிபத்தினிகள் பலர்கூடிக் கிட்டுதற்கு அரிய இயலபான நாணம், கொளுத்தக்கொண்டு கொண்டது விடாத மடப்பம், பேதைமையால் அச்சம், பயிலாத பொருளில் அருவருப்பான பயிர்ப்பு என்னும் நாலும் கைநழுவவிட்டுப் பாலலோசனன் இரண்டு புறமும் ஒன்றாக வளைந்துகொண்டார்கள் என்றவாறு. (18)

**சாயவார் குழலொருகை கலையொருகை யுறத்தாங்கிப்**
**பாயவாள் விழியருவி பரவசரா யெதிர்பயில்வார்**
**தூயவாய்த் திருவாயிற் றுலங்குநகை யெனமொழிவார்**
**ஆயவா வினியெம்மை யணைந்தருளா யெனவயர்வார்.**

இ-ள் : நீளிய குழல் சரிய அதனை ஒரு கையினாலும் வீழும் மேகலையை ஒரு கையினாலும் இறுகப் பிடித்துக் கொண்டு, வாளையொத்த கண்களில் நின்றும் அருவி பாய மோக வசத்தராகிக் கைநெகிழ எதிர்சென்று பொருந்துவார் சிலர்; திருவாயினிடத்து நகையானது சுத்தமாய் விளங்குகின்றது என்பார்கள் சிலர்; எங்களுக்கு இசைந்தவனை ! மால்கொண்ட எம்மை இப்போது தழுவிக்கொண்டு அருள் என்று மோகித்து விழுவார் சிலர் என்றவாறு. (19)

**ஐயமிட வென்றுகடி தரிசிகொடு புறப்பட்டுக்**
**கையமர வமுதாக்கிக் கலத்திடுவார் நிலத்திடுவார்**
**கொய்யுமல ரிலையுடனே குவித்தகரத் துடன்கொணர்ந்து**
**நையுமட கெனவிடுவார் நாமுய்ந்தோ மெனநவில்வார்.**

இ-ள் : பிக்ஷையிடவேண்டுமென்று கடுக அரிசி அள்ளிக்கொண்டு புறப்பட்டு மேலிட்ட காமாக்கினியாலும் விகார வியர்வினாலும் கையே பாத்திரமாக அதை அமுது சமைத்துப் பிக்ஷாபாத்திரத்தில் இடுமாறு போலக் கண்ணும் மனமும் வேற்று விகாரப்படுகையால் நிலத்திடுவார் சிலர்; ஸ்ரீபாதத்தில் அர்ச்சிக்க எடுத்த பத்திர புட்பங்களை அஞ்சலியத்தத்துடன் கொண்டுவந்து மயங்கிப் பிக்ஷாபாத்திரத்திலே நன்றக வெந்த சாதம் போலாக அதனை இடுவார்கள் சிலர்; இப்படி வடிவு மிகுத்ததொரு நாயகனைப் பெற்றோம் ஆதலால் நாமே பிழைத்தோம் என்பார் சிலர் என்றவாறு. (20)

முன்பிச்சை வரைக்கண்ட முகமென்பார் முயங்கிரதி
மன்பிச்சை வனப்பகழி மாரிசொரிந் திடுமென்பார்
பின்பிச்சை கொண்டுவரப் பெரும்பிச்சை யளித்தகல்வார்
என்பிச்சை கெடவுருக வெமக்கிரங்கா ரெனவயர்வார்.

இ-ள் : இந்த மகேசுவரரைப் பார்க்குமிடத்து முன்பு கண்ட முகச்சாயலாயிருக்கிறது என்பார் சிலர்; பொருந்தப் பட்ட இரதிமணவாளனகிய மன்மதன், தூணியில் நின்றும் அன்புகளை ஒவ்வொன்றாகவாங்கி சரவருஷமாக வருஷித்திடும் என்பார் சிலர்; பின்னே ஒருபிடிப் பிச்சை கொண்டுவர எமக்குத் தாங்கரிய பித்தைத் தந்து அகலப்போம் இவர், என்பும் இச்சையும் கெடும்படி நாம் வருந்தவும் நமக்கு இரங்கியருளார் என்று சிலர் சொல்லுவார்கள் என்றவாறு.

பிச்சு ஐ வனப் பகழி என்பதற்கு, காமவெறியைத் தருகின்ற பஞ்சபாணங்கள் எனவும் ஒரு பொருள்கொள்க. (21)

நில்லுமின வளைதாரும் நீரென்று தகைந்தொன்று
சொல்லிவிடு மெனவணைவார் துணைகொள்மணி முலைகாட்டி
இல்லுமிது வெனமொழிவா ரெவ்விடமு மிடமென்பார்
புல்லியிடு மெல்லையுடன் போதுதுநா மெனப்புகல்வார்.

இ-ள் : நீர் இவ்விடத்திலே நில்லும்; போவீராகில் எம்முடைய வளையலைத்தந்து போம் என்று தடுத்துச் சம்மதியில்லாமையைச் சொல்லிவிடும் என்று தொடர்வார்கள் சிலர்; தம்மில் ஒத்து முத்துவடம் பொருந்தும் தனங்கள் தோன்ற நின்று எம்முடைய மனையும் இது தூரமில்லை என மொழிவார்கள் சிலர்; உமக்குப் பொருத்தமான இடமே எமக்கும் பொருத்தமான இடம் என்பார்கள் சிலர்; நீர் சேரவேண்டும் என்று நினைத்திருக்கிற இடத்தளவும் நாங்கள் வருகிறோம் என்று சொல்லுவார்கள் சிலர் என்றவாறு. (22)

ஐயமுள திலதிடையென் றறிவிப்பா ரெனநிற்பார்
ஐயமுள திலதுயிர்வந் தணைந்துகொளென் பவர்போல்வார்
ஐயமனா மெனக்கணைகொண் டநங்கனடர்ந் தலையாமே
ஐயமனா வெமைநோக்கி யஞ்சலெனை யெனவயர்வார்.

இ-ள் : பிச்சை உண்டு இடை இல்லை என்று அறிவிப்பாரைப்போல எதிரேவந்து நிற்பார் சிலர்; எமது உடலில்

உயிர்வாழ்க்கையுண்டு அது இல்லை என்கிற சந்தேகம் இல்லை யாம்படி வந்து அணைந்து பிழைப்பித்துக்கொள் என்பவரை ஒப்பார் சிலர் ; ஐந்து இயமன்போலப் பஞ்ச பாணங்களைக் கொண்டு காமராசன் மேலிட்டுப் பொருதாமல் தேவதேவனே பயப்படாதிருங்கள் என்று அருளிச் செய்யாமலிருக்கின்றீர் என்று அயர்வார் சிலர் என்றவாறு. (23)

ஆடுவா ராடாத வபிநயங்கள் பலபுரிவார்
ஓடுவா ரோடாமோ வுண்கலனிங் குமக்கென்பார்
கூடுவார் கூடாத குழலலையக் குழன்மொழியால்
பாடுவார் பாடாக மேல்விழுவார் பலராகி.

இ-ள் : (விஷய ஆனந்தக்கடல் மேலிட்டு) ஆடுவார் சிலர்; உலகத்தில் நடவாத சேட்டாவிதங்களைப் பலவாகப் பண்ணுவார் சிலர் ; (பலமுறை திரும்பிப்பார்க்கின்றார் என்று விரைந்து) ஓடுவார் சிலர் ; தலையோடாமோ உமக்குப் பிக்ஷாபாத்திரம் என்பார் சிலர் ; பின்னும் சமீபத்தில் செல்வார்கள் வாரிமுடிக்கக் கூடாத மயிரலையக் குழலிசைபோன்ற மொழியாற்பாடுவார் சிலர் ; பலர்கூடித் தாங்கள் கொண்ட கோட்பாடு பொருந்தத் திருமேனியின்மேல் விழுவார்கள் என்றவாறு. (24)

பேதையர்கள் முதலாகப் பேரிளம்பெண் மையர்முடிவாம்
மாதரவ ரிருமருங்கு மறுகுமறு கிடைநெருங்கி
ஓதமெழுந் தெனநிலவு மொலியுயர்வா னுறநகைத்து
நாதனெழுந் தருளவய னானணைந்த படிநவில்வேன்.

இ-ள் : பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என எழுவகைப் பருவமுள்ள மாதர்கள் யாவரும் இரண்டு பக்கமும் மயங்குகிற நடுத்தெருவில் சத்த சமுத்திரமும் ஒன்றாய்க் கூடிச் சத்தித்து எழுந்தது போல ஒலிக்கும் ஓசை அண்டகோளகையைக் கடந்து அப்பாலும் செல்ல நகைத்தருளித் தம்பிரானார் மற்றொரு வீதியில் எழுந்தருள, அவ்விடத்து யான் சென்று பொருந்திச் செய்த பிரகாரம் சொல்லுவேன் என்றவாறு. (25)

கற்புடைய மடந்தையெனக் கருதரிதாய்க் கண்டவர்கள்
பொற்புடைய பொதுமகளாப் புகல்வரிதாம் பொலிவினதாய்
அற்புதமாய்ச் சிவந்துநிமிர்ந் தகன்றவயில் விழிக்கணைகள்
விற்புருவத் துடன்முனிவர் விழியிலக்கா விடுமளவில்.

இ-ள் : உடையினாலும் நடையினாலும் கையில் பிடித்த பூவினாலும் குலஸ்திரீ என்று கருதக்கூடாமையாய்ப் பார்த்தவர்களுக்கு நாயகன் பின்னே நிழல்போலப் புறவடி பார்த்து நடக்கையால் அழகிய வேசிகளாகச் சொல்லவொண்ணாத தன்மையுமாய் இருக்கின்ற கபடவேடத்தைத் தரிசித்து ஆச்சரியத்தை உடைத்தாய்ச் செவ்வரி பரந்து நீண்டு விசாலம் பொருந்திய கண்களாகிய கூர்மையுள்ள அம்பினைப் புருவமாகிய வில்லிலே தொடுத்து, என்னைப் பார்த் இருடிகள் கண்களே குறியாக விட்டமாத்திரத்திலே என்றவாறு. (26)

எண்ணரிய திறலினர்க ளிடுநூலே குறியாகத்
திண்ணியநெஞ் சவைகுலையச் சிகையவிழ வுடைநழுவப்
பண்ணலரு மபிநயங்கள் பலபுரிந்து பரவசராய்
அண்ணலெதி ரெனைநோக்கி யாதரித்தா ரருமுனிவர்.

இ-ள் : மட்டிட ஒண்ணாத ஞானவீரம் மிகுந்த முனிவர்கள் உபவீதம் ஒன்றுமே அடையாளமாகத் திடசித்தும் கலங்கக் குடுமிகுலைய உடுத்த மரவுரிகள் நழுவிவிழ வேறொருவர் பண்ணுதற்கரிய பல சிங்காரச்சேட்டைகளைப் பண்ணிக் காம மோகராய் என்னுடைய நாயகன் சன்னிதியில் என்னைக்கண்டு மகா இருடிகள் ஆசைப்பட்டார்கள் என்றவாறு. (27)

எவராலு மென்னாலு மெய்தரியா னேய்வுற்றுத்
தவராசி லிடங்கடொறுந் தாவில்பலி கொளநடந்தான்
சிவராக மடைவோரிற் சேயிழையா மெனநோக்கு
பவராகா வபராத பரம்பரையோ ராயினார்.

இ-ள் : பிரமாதிகளாலும் என்னாலும் சொப்பனத்திலும் காண்பதற்கரியான் சுவேச்சையினாலே இயக்க உருவத்தைக் கொண்டு மாக இருடிகளுடைய குற்றமற்ற பன்னசாலைகடோறும் சுத்தான பிச்சை கொள்வதற்கு நடந்தான்; அந்தச்சிவத்தின் உண்மையை அறிந்து அன்புவைப்பவர்கள் போல் என் சொரூபத்தை எண்ணி அறியமால் இவளொரு ஸ்தீரீ என்று கருதி விகாரங்கொண்ட முனிவர்கள் சேட்டைகள் அடைவே பண்ணி அபராதத்துக்குப் பழையோராயினார்கள் என்றாவறு. (28)

கோவமிகு முதுமுனிவ ரொன்றாகக் குழுமியெழுந் (து)
ஆவதெனா மிவனிந்த வாச்சிரமத் தஞ்சாதே
காவன்மிகுங் கற்பழித்த காபாலி யெனக்கனன்று
தாவமிகும் படிபரவாச் சாபங்கள் பலவிட்டார்.

இ-ள் : இப்படியே ஆசாரவீனம் வரக்கண்டு கோபம் மிகுத்த விருத்தரான இருடிகளெல்லாரும் கூடி வெட்கங் கொண்டு இப்படிவரலாமோ என்று எப்படிப்பட்ட அசுரர்கள் இராக்கதர் சித்தவித்தியாதரர்களாலும் அண்ட ஒண்ணாத சிவார்ச்சனை மிகுந்த நம்முடைய ஆச்சிரமத்தில் பயப்படாமல் இக்காபாலி வந்து பதிவிரதாபாவதைக் குலைத்தான் என்று குரோதனராய் அக்கணத்திலே கோபம்மிகும்படி பூலோகத்திலே நடவாத எண்ணிறந்த சாபங்கள் அதியுக்கிரமாக இட்டார்கள் என்றவாறு. (29)

**இட்டபல சாபங்க ளிறைவனயன் மேவாது**
**கெட்டபடி கண்டுசினங் கெடாதமனத் தினராகி**
**நட்டமளித் தருளென்று தகைவார்போ லெதிர்நண்ணிச்**
**சிட்டமலி தருகுண்டந் திருமுன்னே திகழ்வித்தார்.**

இ-ள் : தாங்கள் சபித்த வெகுவித சாபங்களும் தம்பிரானர் அருகே செல்லாமல் வியர்த்தமானது கண்டு, மனத்தில் ஆராத கோபத்தை உடையவர்களாகி,தேவரீர் எங்களுக்கு ஆனந்தநிருத்தம் தெரிசிப்பித்தருளும் என்று தகையுமவர் போலே எதிர்ப்பட்டு, சுவாமிக்குமுன்னே பெருமை மிகுந்த குண்டத்தைச் சமைத்தார்கள் என்றவாறு. (30)

**எஞ்சாத வழலிருத்தி யெடுத்துமனுக் கணித்தோதி**
**நஞ்சான திரவியங்கள் நாடியவை பலகோலி**
**நெஞ்சாலு நினைவரிய நிருமலனே யிலக்காக**
**அஞ்சாதே யவிசார மவிசாரத் தமைத்தார்கள்.**

இ-ள் : அந்தக் குண்டத்தில் குறைவுபடாத அக்கினியைத் தாபித்து, மந்திரம் உச்சரித்து, அந்த யாகத்துக்குரிய விஷத்திர வியங்களை விசாரித்து,அவை மிகுதியாகக் கொண்டு மனத்துக்கும் எட்டாத பரமசிவமே இலட்சியமாகப் பயப்படாமல் விசார ஈனத்தினாலே அவிசார ஓமத்தைப் பண்ணினார்கள் என்றவாறு.

விஷத்திரவியங்களாவன எட்டி முதலியனவாம். (31)

**கருத்தின்விழி சிவந்தமுனிக் கணங்கணத்தி லுதிப்பித்த**
**எரித்ததிரு முழுவையைநே ரேவுதலு மெந்தைபிரான்**
**சிரித்தருளி யதுபிடித்துத் திருக்கரத்தின் நகநுதியால்**
**உரித்தவுரி பசும்பட்டா வுடைதொடைமே லுறவுடுத்தான்.**

இ-ள் : தெளிவுள்ள மனத்தினும் மிகச் சிவந்த கண்களையுடைய தாருகாவனத்து இருடிகள், க்ஷணமாத்திரையில் அவிசார ஓமத்திற் பிறப்பித்த கோபித்துக் கெர்ச்சிக்கா நின்ற வியாக்கிரத்தைத் தம்பிரானார் முன்னே விடுதலும், எந்தைபிரானார் திருப்புன்முறுவல் செய்து எதிர்த்த அந்தப் புலியைப்பிடித்து, திருக்கரத்தின் நுனி நகத்தாலே உரித்து,தோலைச் செவ்விய பட்டுவத்திரம் போலத் தொடையளவும் பொருந்த உடுத்தருளினார் என்றவாறு. (32)

**ஏரடங்கு குண்டத்தி னெரிவயிற்றிற் பிறந்தெழுந்த**
**பாரிடங்க ளாரிடமாம் பரிசனமா யினபயிலச்**
**சீரடைந்த மணிமுச்சிச் செய்யவிழி வெள்ளெயிற்றுக்**
**கார்விடங்கொ ளொருபுயங்கம் கடிதுவரக் கைக்கொண்டான்.**

இ-ள் : அழகுசெறிந்த குண்டத்தில் இட்ட அவிசார ஓமத்தீயினிடத்தில் உற்பத்தியான அனந்த பூதங்கள், ஏகாங்கியாயிருக்கிற தம்பிரானார்க்கு முனிவர்கள் வரக்காட்டின ஊழியக்காரரைப்போலப் பணிவிடைசெய்ய,ஒளிமிகுந்த இரத்தினச்சூடிகையும் சிவந்த விழியுமுடைய வெள்ளெயிற்றிற் கறுத்தவிடம்பொருந்தின தொரு பாம்பும் விரைவுடன் வர அதனை இடக்கரத்திலே முன்கைக் கடகமாக அணிந்து கொண்டார் என்றவாறு. (33)

**மைவிஞ்சு நெடுந்தடித்தின் வார்குழல்வார் சடையாகத்**
**தெவ்வன்ப ரெதிரிரண்டு திருக்கரங்க ளுருத்தெழமுற்**
**கைவந்த நிலயமலர்க் கால்வந்து கலந்திசைப்பப்**
**பவ்வங்கொள் முழுநஞ்சு நுதல்விழியும் பாரித்தான்.**

இ-ள் : அந்தகாரத்தை நீக்கி மேலிட்ட நெடிய மின்னல்களைப்போலே முந்தி நீண்ட கரிய குழலானதே நீண்ட சடையாகவும் அஞ்ஞானத்தாலே மாற்றாரான பத்தர்களாகிய அந்த இருடிகள் முன்னே முந்தின திருக்கரங்களும் அன்றி இரண்டு திருக்கரங்கள் உண்டாகித் தோன்றவும் முன்னே திடமான தாண்டவம் செங்கமலம் போன்ற ஸ்ரீ பாதத்திற் கூடிப்பொருந்தவும் திருப்பாற்கடலிலே தோன்றின குறைவற்ற விஷத்தைக் கண்டத்திலும் நெற்றியிலே கண்ணையும் வெளிப்படக்காட்டினார் என்றவாறு. (34)

**ஏய்ந்தவனல் முன்னுகர்ந்த விருளுமிழ்வ தெனவெரிவாய்ப்**
**போந்ததிரு மெரிமுச்சிப் பொறிவிழிவெண் பற்குறளன்**
**சீந்தரவத் துடனரவந் திகழவர வரனெதிரே**
**பாய்ந்தருளி வெரிநெரியும் படியடிமேற் பயில்வித்தான்.**

இ-ள் : பொருந்தின அக்கினியானது இதற்குமுன் விழுங்கின இருளை இப்போது உமிழ்ந்தாற்போலக் குண்டத்தின் அக்கினியில் நின்றும் புறப்பட்டுப் பயங்கரமான ஆர்ப் பரவத்தையும் எரிகின்ற குஞ்சியையும் திப்பொறி சிந்தும் விழிகளையும் வெண்மையுடைய பற்களையும் வாமனரூபத்தையு முடைய முயலகன் சீந்தும் பாம்பைக் கையிலே கொண்டு கெர்ச்சித்து மிக அதிர்ந்துவரக்கண்டு தம்பிரானார் விரைவிலே எதிர்ப்பட்டருளி முயலகன் கிழ்ப்படப் பாய்ந்து அவன் முதுகு நெரியும்படி ஸ்ரீ பாதத்தாலே மிதித்தருளினார் என்றவாறு. (35)

**மலங்கவெரி தரவேந்தி மந்திரங்கள் வரக்கரத்தால்**
**அலம்புசிலம் பணியாகத் திருவடியி லமர்வித்துத்**
**துலங்குபல சடைதாழத் துணங்கைகணந் துதைவிப்ப**
**அலங்கலணி தடந்தோளா னருநடமா டுதல்புரிந்தான்.**

இ-ள் : அந்த முனிவர்கள் ஏவின யாவும் தளர்ந்தபின் அக்கினிதன்னை வரவிட அந்த அக்கினியைத் திருக்கரத்தில் ஏந்தியருளி, உச் சாடனமான மந்திரங்கள் ஆகர்ஷணகற்பனையால் வர அதை ஓசையுள்ள அழகிய திருச்சிலம்புக்குத் தரிசுமாக ஸ்ரீபாதத்தில் கரத்தாற்சாத்தி, மின்போலத் துலங்கும் பல சடை தாழ்ந்து அலையக் கணநாதர்கள் துணங்கைக் கூத்தை மிகச்செய்யக் கொன்றைமாலையை அணிந்த பெரிய தோளையுடையவர் அரிய நடனம் செய்ய விரும்பினார் என்றவாறு.

தரிசு என்பது சிலம்புக்குள் போடும் சிறு பரல். (36)

**தாகத்தா லலைந்துமிகத் தளர்ந்துதவ வலிசலித்த**
**மோகத்தா லிழந்தனலு மந்திரமும் விடமுடிந்த**
**சோகத்தா னிராயுதராய்த் துளங்குநட மிறைதொங்கும்**
**வேகத்தா லருமுனிவ ரொன்றாக விழ்ந்தார்கள்.**

இ-ள் : ஓமாக்கினி உட்டினத்தால் உண்டாகிய தாகத்தினால் வாடித் தபோபலம் குறைந்த மயக்கத்தினாலே மிகத் தளர்ந்து தங்கள் செயலற்று அக்கினியையும் மந்திரத்தையும் ஏவ, அவைகள் போன விதனத்தினாலே தங்களுக்கு உரிய

செயலற்று அக்கினியையும் மந்திரத்தையும் ஏவ, அவைகள் போன விதனத்தினாலே தங்களுக்கு உரிய கருவியின்றிப் பயங்கரமான நடனத்தைத் தம்பிரானார் செய்யத் தொடங்குகிற வேகத்தினாலே பெரிய முனிவர்களெல்லாரும் வியாமோகதராய் விழுந்தார்கள் எ-று.

வியாமோகம் என்பது ஆச்சரியத்தால் மோகித்தல். (37)

**நடமுயலும் பொழுதஞ்சி நடுநடுங்கி நானயரக்**
**கடகமென விடதரத்தைக் கட்டியவங் கைக்கவித்த**
**இடையில்விடை யுடனெடுவா னெய்தியடைத் தணைந்தகுல**
**மடவரலை மகிழ்ந்தவள்மேல் மலர்ந்தகடைக் கண்வைத்தான்.**

இ-ள் : அந்த நிருத்தவேகம் பொறுக்கமாட்டாமல் பயப்பட்டு நடுநடுங்கி யானும் மூர்ச்சிதனாகக் கண்டு, சர்ப்ப கடகதாரிதமான அழகிய திருக்கரத்திலே என்னை அஞ்சாதே என்று அமைத்தருளின அவதரத்தில், இடபவாகனத்துடன் ஆகாசமார்க்கத்தில் வந்து, இடப்பக்கத்திலே பொருந்தின பார்வதியார்மீது பிரியப்பட்டு, அவர்மேலே இடத்திருக்கடைக் கண் வைத்தருளினார் என்றவாறு. (38)

**வேறு**

**அரிவைய ணைந்தபி னெங்கணும்**
**அலர்மழை யண்டர்பொ ழிந்தனர்**
**பிரமபு ரந்தரர் வந்தனை**
**பெருகினர் முன்புற வின்புறும்**
**உருவமொ ழிந்திக ழென்பழ**
**வுடலது கொண்டுப ணிந்தெதிர்**
**மருவந டுங்கியொ டுங்குதல்**
**மலைமகள் கண்டும கிழ்ந்தனள்.**

இ-ள் : பரமேசுவரி எழுந்தருளின பின்பு தேவர்கள் எங்கும் புட்பவருஷம் வருஷித்தார்கள்; பிரமேந்திராதியர்கள் அட்டாங்க பஞ்சாங்கங்களினாலே சன்னிதியிலே வந்தனையை வெகுவிதமாகப் பண்ணினார்கள் ; இருடிகள் இன்புறும் மோகினி வேடத்தை நீங்கி அடியார் இகழும் என்னுடைய பழைய மாயாசரீரத்தைக் கொண்டு சர்வேசுவரனைப் பணிந்து முன்புபோல கூசாமல் எதிரேநிற்கப் பயப்பட்டு, (பிரமேந்தி ராதிகளுக்குப் பின்னே) ஒளித்து நிற்கிறதைக் கண்டு பரமேசுவரி மகிழ்ந்தருளினார் என்றவாறு. (39)

விரவிய வங்கண னெங்கணும்
விரிசடை மண்டிய லைந்திட
எரிவிரி செங்கைசு ழன்றிட
இடிதுடி கொண்டிட வெண்டிசை
பரிபுர புண்டரி கந்தகு
பதயுக ளம்பல ருந்தொழ
அருள்புரி யெந்தைம டந்தையும்
அதிரந டங்கடொ டங்கினன்.

இ-ள் : நிருத்தத்தொழில் பொருந்தின பரமேசுவரன் விரிந்த சடை திக்கெங்கும் அசையவும், சுவாலாக்கினியை ஏந்தின கரம் கொள்ளிவட்டம்போலே சுழன்றிடவும், எட்டுத்திக்கிலும் உள்ள இடியோசையைத் துடியோசைகொள்ளவும், சிலம்பு அணிந்தசெங்கலம் போன்ற இரண்டு திருவடிகளையும் யாவரும் தொழவும், கிருபாகரராயிருக்கிற தம்பிரானார் பரமேசுவரியும் நடுங்க வெகுவிதமான நிருத்தத்துள் பயங்கர நிருத்தத்தைத் தொடங்கினர் என்றவாறு. (40)

கரணம னந்தமு யன்றொலி
கலவுசி லம்பணி குஞ்சித
சரணமி லங்கவ லம்புரி
தருகர மும்பொலி வுந்தகு
திரணகின் மங்கைநெ டுங்கயல்
திருநய னங்கள்செ றிந்திடு
புரணமு மொன்றிய வென்றிகொள்
பொருவில்பு யங்கமு யங்கினன்.

இ-ள் : திருவிளையாட்டினால் அனந்தமான கரணங்களை நடித்து ஓசைபொருந்தின சிலம்பு அணிந்த குஞ்சிதபாதங்கள் விளங்க, சாமுத்திரிக இலக்கணத்தில் உத்தமமான வலம்புரிச் சங்கரேகை பொருந்திய செங்கையும் அழகும் இணையொத்துத்திரண்ட தனமுமுள்ள பார்வதிதேவியின் கயல்நெடுங்கண்ணும் எந்தை திருநயனங்கள் பொருந்தின பார்வையும் அதில் ஒருப்பட்ட மனமும் மனமொத்த பாவமும் பாவம் ஒத்த ரசமும் பொருந்தின பாசத்தைத் தள்ளின சுத்த நிருத்தமான ஒப்பு இல்லாத புயங்க கரணத்தைப் பொருந்தினார் என்றவாறு. (41)

புனிதபு யங்கமு யங்கிய
பொழுதவ னுந்தன டந்தரும்
இனிமைநு கர்ந்தம டந்தையும்
எழில்விடை யும்பெறு கென்றருள்
நனிமிக வென்கணு மங்கணன்
நகைதர வுய்ந்துவ ணங்கினன்
மனமுரு கும்படி யன்புடன்
வளர்விழி பின்புவ ழங்கினன்.

இ-ள் : சுத்தமாகிய நடனம் செய்யத் தொடங்கின பொழுது தம்பிரானாரும் தம்முடைய நிருத்தத்திலுண்டான இன்பத்தை அனுபவித்த பரமேசுவரியை அழகிய இடபவாகனம் மேற்கொள் என்று அருளி, அருளுடனே மிகுதியாகத் தம்பிரானார் என்னைப் பார்த்து நகைத்தருள, அப்பொழுது கிருதார்த்தனாகி நான் வந்தனை செய்தேன்; கல் ஒத்த நெஞ்சும் கரையும்படி பத்திமிகு ஞானப்பார்வையைப் பிராசதித்தருளினார் என்றவாறு. (42)

அயருமரு ருந்தவர் தம்பழி
அகலநி னைந்தரு ளங்கண
சயசய சங்கர வென்றெதிர்
தரையில்வி ழுந்துப ணிந்தனர்
நயநட னுந்தகு மங்கவர்
நவையெவை யுந்தொக வந்திருள்
முயலக னொன்றுக வென்றதன்
முதுகதி ரும்படி நின்றனன்.

இ-ள் : மோகித்துக்கிடக்கிற அரிய தவத்தையுடைய இருடிகள்,தம்பிரானார் ஞானக்கண்ணைக்கொடுத்தபின், கிருபா கரனே ! எங்கள் குற்றம் பொறுத்தருள்; சய சய சங்கரனே ! என்று சன்னிதியிலே ஏகாங்கமாகப் பூமியில்விழுந்து நமஸ்கரித்தார்கள்; அனுக்கிரக நிருத்தமூர்த்தியும் இரட்சிக்கத் தக்க அந்த இருடிகளை வியாபரித்த ஆணவசத்திகளெல்லாம் கூடிவந்து ஆணவமூலமாயிருக்கிற முயலகனைப் பொருந்துக என்று ஆக்ஞாபித்து அதனுடைய (சத்தி பொருந்தின) முதுகு நெரியும்படி மிதித்து நின்றருளினார் என்றவாறு. (43)

பண்டைய விருள்பறி யும்படி
பங்கய பதமுத வும்பொழு (து)
எண்டிக ழிருடிகள் கண்டனர்
இன்புறு திருநட மன்பொடு

கண்டனர் வெருவினர் நுண்டுளி
கண்டரு மருவிசொ ரிந்தனர்
குண்டிகை குசையிசை தண்டுகள்
கொண்டெதிர் குணலைம லிந்தனர்.

இ-ள் : அநாதியே தம்மை மறைத்த ஆணவம் நீங்கும்படி தம்பிரானார் திருவடித்தாமரையை அருளினபோது, நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும் கண்டார்கள் ; கண்டது ஏதென்னில் முன் நடனஞ்செய்த சவுக்கியநிருத்தத்தை அன்புடனே கூடிக் கண்டார்கள்; மிகுந்த பயங்கொண்டவர்களாகிக் கண்களிலிருந்தும் ஆனந்த பாஷ்பத்தைப் பொழிந்து கமண்டலம் தெர்ப்பைப்புல் பொருந்தின தண்டு இவைகளைக் கைக் கொண்டு சன்னிதியிலே குணலைக் கூத்தைச் செய்தார்கள் என்றவாறு. (44)

சூடினர் கரமல ரஞ்சலி
சூழ்வுற வமரர்து தைந்தனர்
நாடிய கருவிகொ டும்புரு
நாரத ரிசைபடி யும்படி
பாடிலர் தெளிவிலர் நின்றனர்
பாரிட நிலவுது ணங்கைகொ (டு)
ஆடின கரணமி டுந்தொழி
லாயினர் கணபர நாதர்கள்.

இ-ள் : சுற்றும் நெருங்கின தேவர்கள் அஞ்சலியத்தை ராய் நின்றார்கள்; தும்புரு நாரதர்கள் மனம் தெளிவிலராய் எண்ணப்பட்ட வீணைவாத்தியங் கொண்டு இசை பொருந்தும் படி பாடினார்களில்லை பூதகணங்கள் பொருந்தின துணங்கைக் கூத்தாடின் உறுதி காரணம் இடுந்தொழிலேயாயினர் எண்ணிறந்த கணநகாதர்கள் என்றவாறு.

காரணம் என்பது கூத்தின் விகற்பம் (45)

அங்கரி பிரமபு ரந்தரர்
அண்டர்கண் முனிவர கண்டமும்
இங்கெம தினியந டஞ்சிவ
லிங்கம் திசையறி னைந்தொளிர்
கொங்கலர் பலமல ரன்பொடு
கொண்டடி வழிபடு மென்றயர்
மங்கலி னிடைவிடை தங்கிய
மங்கையொ டிறைவன்ம றைந்தனன்.

இ-ள்: (இப்படியே நிகழும் அவ்விடத்து) அரி, பிரமன் இந்திரன், தேவர்கள், இருடிகள், பூதகணம் முதலானோர் யாவரும் எம்முடைய ஆனந்தநிருத்தத்தை இப்போது இவ்விடத்து உண்டாகிய இந்தச் சிவலிங்கத்தினிடமாகத் தியானித்து, விளங்கும் மணம் விரிந்த பல புட்பங்களாலே திரிசந்தியும் நாடோறும் பூசைபண்ணிப் போற்றுங்கள் என்று இடபத்திலே பொருந்தின பரமேசுவரியுடனே பரமேசுவரன் பரமாகாசத்திலே மறைந்தருளினார் என்றாவறு. (46)

இறைமறை தருதிசை முன்றொழு
தேவர்களு மகல்வழி வென்றிகொள்
அறிவுறு மொருமைய னந்தநின்
அமளியி னெருநல மர்ந்தொளிர்
கறைவளர் மிடறன டந்தொழு
கலவிய னலமொடு கண்படு
முறைதரு துயரமொ ழிந்தனன்
எனமுக மலரமொ ழிந்தனன்.

இ-ள்: பரமசிவம் மறைந்தருளின திசையை நோக்கி நமஸ்கரித்து யாவரும் அகன்றபின், ஞானவீரத்திலே பொருந்தும் ஒருப்பாடுடைய ஆதிசேடனே! நீயாகிய சயனத்தில் நேற்றுப்பொருந்தி நீலவொளி விளங்கின விடத்தைத் திருமிடற்றிலுடையவனது நிருத்தங்தொழ இன்பத்தோடே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் பஞ்சாவத்தையிற்படும் துக்கத்தை நீங்கி அருளால் அமிதமாக இருந்தனன் என்று முகாரவிந்தசேவை விளங்க மகாவிஷ்ணு அருளிச்செய்தார் என்றவாறு. (47)

அண்டன துயர்நட மென்றலும்
அஞ்சலி சிரமுற வன்பொடு
கண்டவ ரெனமிக நுண்டுளி
கண்டர வுருகுதல் கண்டரி
தொண்டின ரிவர்பணி யென்பணி
சுந்தர னடிபணி யென்பணி
பண்டென் தணையிவ ரென்றுகொள்
பண்மொழி வினியென நொந்தனன்.

இ-ள்: பகிரண்ட கர்த்தாவினுடைய ஆனந்தநிருத்தம் என்ற மாத்திரத்திலே பத்தி மிகுதியினால் அஞ்சலியானது

சிரமுற ஆனந்தநிருத்தம் கண்டு களிகூர்ந்தவரைப்போலே கண்ணானது மிகவும் நுண்துளித்தாரை கொள்ள மனது நீராளமாயுருகிப் புளகத்துடனே நின்ற பரவசத்தை மகாவிஷ்ணு கண்டு 'இவர் தம்பிரானார்க்கு உரிய தொண்டர்; இவர்க்குப் பணி ஏதென்னில் எலும்புமாலை அணிந்த பரமசிவத்தின் திருவடித்தொண்டாகும்; என் பணியோ எனில் இன்று முதல் இவர் எனக்குப் பாயல் என்னும் புத்தியை ஒழித்தல்' என்று சொன்னமாத்திரத்திலே சேடன் மிகவும் விதனப்பட்டான் என்றாவது. (48)

இனியணை யெனநனி துஞ்சுதல்
இசைவில் தெனதுள நின்பணி
தனயனை முயலமொ ழிந்துயர்
தவமுயல் வதுதகு மென்றலும்
மனமிக வுருகிய னந்தனும்
வரதன தினியந டந்தொழு
துனைவினி தெனினும கன்றிடு
தொழினினை வரிதென நொந்தனன்.

இ-ள் : நீ சயனமாயிருக்க நான் அந்தச் சயனத்தில் நித்திரை செய்ய என் மனதில் பொருத்தமில்லை; உன் பணியான பாயற்றொழில் செய்ய உன் பிள்ளையைக் கற்பித்து நீ மேலான தவங்களிலே முயலுகிறதே உனக்கு உறுதி என்று மகாவிஷ்ணு சொல்ல, சேடன் நெஞ்சம் கரைந்து நெக்குருகி அபீஷ்டவரதனுடைய இனிய நிருத்தம் சீக்கிரத்தில் தொழும் அருட்பாடே மிகவும் இனிது எனினும், தேவரீரை நீங்கும் வகை நினைக்கவும் போகாது என்று விதனப்பட்டான் எ-று. (49)

மாதவன் மிகவும் மகிழ்ந்தினற
வாழ்வட கயிலையம ருங்குற
நீதவ முயல்கயல் கொண்டகண்
நேரிழை யதிபனும் வந்துநின்
ஆதர வமரவ ரம்பல
ஆசற வருடரு மென்றபின்
ஏதமில் பொருவில னந்தனும்
ஏசறு மரியையி றைஞ்சினன்.

இ-ள்: சேடனுடைய அடிமைத்திறத்துக்குப் புருடோத்தமன் மிகவும் பிரியப்பட்டு ஸ்ரீ கண்டபரமேசுவரன் வாழ்ந்து

எழுந்தருளியிருக்கும் உத்தரகைலாய பாரிசத்திலே நீ போய்த் தவசு பண்ணு அங்கயற்கண் உமாபதியும் உன்னுடைய தவத்தலத்தில் எழுந்தருளி உன் ஆசைதீர வேண்டின வர மெல்லாம் தந்து மலத்திரயமும் நீக்கி அருள் உண்டாக்கும் என்று மகாவிஷ்ணு உபதேசித்த பின்பு குற்றமும் ஒப்பும் இல்லாத சேடனும் குற்றமற்ற மகாவிஷ்ணுவை நமஸ்கரித் தான் என்றவாறு.

குற்றம் இல்லாத மகாவிஷ்ணு என்றது தம்பிரானார் ஸ்ரீயத்தம் பற்றின பரிக்கிரக சத்தியாய் ஞானதிருட்டி பெற்ற தனால் எனக் கொள்க. (50)

விரவரி யருள்கொ டனந்தனும்
விரைவொடு தகவிடை கொண்டபின்
மருவரு தலைவன்ம கிழ்ந்துறை
வளர்வட கயிலைம ருங்குற
விரிபண மணிவெயில் சிந்திட
விரிவழி கதிரைவி ழுங்கிட
எரியெரி திசைதொறு மண்டிய
இகழ்வறு தவமதி சைந்தனன்.

இ-ள் : தன்னை நீங்காத மகாவிஷ்ணுவின் அனுமதியுடன் சேடனும் சடுதியிலே தவசு பொருந்த விடைகொண்ட பின் கனவிலும் தேவர்க்கும் கிட்டுதற்கரியவனாகிய அரிபிர மாதிகளுக்கும் தலைவன் வாழ்ந்தருளியிருக்கிற உயர்ந்த உத்தரகைலாய பாரிசத்திலே மகாவிஷ்ணு சொன்ன இடத்திலே வந்து, அக்கினி கற்பித்து அகன்ற படங்களில் இருக்கிற ஆயிரம் இரத்தினங்களும் ஆதித்தய கிரணங்களைத் தள்ளவும், பல்லாயிரம் விழிகள் ஆதித்தனைத் தன்னுடைய பிரகாசத்துள்ளே அடக்கவும், சுவாலிக்கிற பஞ்சாக்கினி எவ்விடத்தும் அன்னியமான திக்குகள்தோறும் போய் நிறையவும் பந்தபாசத்தை நீக்குகிற தவசைப் பண்ணினான் எ-று. (51)

வேறு

தவமிக முயலும் போது தன்னுயிர்ப் புமிழ்வ தன்றிப்
பவனெனு முணவுங் கொள்ளான் பலபக லகல்வும் பாரான்
சிவனடி காணுங் கண்கள் திப்பிய மாக்கு வான்போல்
உவமனில் கதிரோ னுட்புக் *குருகிநே ரோட வைத்தான்.

*குருகநே ரோட எனவும் பாடம்.

இ-ள்: தவசைப் பண்ணும் காலத்தில் தன்னுடைய சுவாசமும் இரேசகம் ஒழிந்து பூரக கும்பகங்களும் பண்ணான்; காற்றாகிய தனக்குரிய உணவையும் கொள்ளான்; நெடுங்காலம் செல்வதும் சிந்தியான்; தம்பிரானார் ஸ்ரீபாதங்களை இனிமேல் காணப்போகிற கண்களைச் சுத்தமாக்குவான்போல ஒப்பில்லாத ஆதித்திய மண்டலத்துக்குள்ளே சென்று உருகி இரண்டறப்பண்ணினான் என்றவாறு. (52)

**இன்னவா றருந்த வங்க ளிவனியற் றிடந டஞ்செய்**
**மன்னன்மா முனிவ ரைப்போல் வாய்மைக ளளப்பா னாகி**
**முன்னய னாகி யன்ன முதுகிட மாக வேறி**
**அன்னவ னெதிரே சென்றா னவனுமா தரங்கள் செய்தான்.**

இ-ள் : இப்படியே அதிக கடூரமான தவசை இவன் செய்ய நிருத்தகிருத்தியம் செய்கிற தேவதேவன், தேவதாருவனத்தில் இருடிகளுடைய சித்தசுத்தம் பரீட்சிக்கவந்தாற் போல முந்தப் பிரமாவாகி அன்னத்தின் மேற்கொண்டு சேடனுக்கு எதிரே சென்றான்; சேடனும் இந்தப் பிரமாவைக் கண்டு அங்கீகாரம் செய்தான் என்றவாறு. (53)

**செய்தவன் றன்னை நோக்கி சினவர வுருவோய் செல்லல்**
**மெய்திகழ் தவங்கள் போதும் விரவுபோ கங்கள் வீடு**
**பொய்தகா வித்தை சித்தி பொருந்துவ தொன்றெ மக்குக்**
**கொய்துரை தருது மென்று கூறினான் முனிவர் கோமான்.**

இ-ள் : பிரமதேவன் தவசைப் பண்ணுகிற சேடனைப் பார்த்துக் கடூரமான சர்ப்பவேடத்தை உடையவனே ! சரீரம் வருந்தப்பண்ணின தவசு இதுவரைக்கும் போதும்; பொருந்தப்பட்ட இந்திராதிபோகங்கள் நம்முடைய சாலோக சாமீப சாரூப சாயுச்சியாதி பதங்கள் அசத்தியம் பொருந்தாத வித்தை பதினாலு அட்டமாசித்தி என்னும் இவற்றில் வேண்டுவன ஒன்றைத் தெரிந்தே எம்முன் சொல்லுவாயாக; தருவோம் என்று பிரமா அருளிச் செய்தார் என்றவாறு. (54)

**வாசகங் கேட்ட னந்தன் மகிழ்ந்தியான் புகழ்ந்த தைத்த (து)**
**ஈசனை யென்ன வேண்டிற் றெவர்தரி னன்று னக்குப் [திங்(கு)**
**பேசுகென் றனைத்தும் வேண்டாப் பெற்றிகண் டயனி கழ்ந்**
**ஏசறு தவஞ்செய் வான்வே றென்பெற வியம்பு கென்ன.**

இ-ள் : இவ்வாறு சொன்ன பிரமாவின் வார்த்தையைக் கேட்ட சேடன், காண விரும்பித்துதித்து யான் அழைத்தது பரமேசுரனை; அங்ஙனமிருக்க, நீ வந்தது ஏதென்ன ; உனக்குவேண்டினதொன்றை யார் தந்தால் நன்று அதனைச் சொல்வாயாக என, வினவின யாவையும் அவனுக்கு வேண்டாத கருத்தறிந்து பிரமதேவன் அபேட்சித்து இவ்விடத்தில் குற்றமில்லாத தவசைச் செய்யுமது வேறு இனி என்ன பயனைப் பெறச் சொல் என்றார் என்றவாறு. (55)

**முந்திய முடிவி லாத போகமு நரலி ரண்டாம்**
**சித்தியும் வித்தை யாவுஞ் செய்வதென் றிகழ்வ னத்தில்**
**அத்தனன் றெவர்க்கு நல்கு மானந்த நிருத்தங் காணும்**
**பித்துமே லிட்ட தென்று பேசினா னேசி லாதான்.**

இ-ள்: உன்னுடைய பதமுத்தியும் ஒழியாத இந்திராதி போகமும் அட்டமாசித்தியும் வேதாதி சர்வகலையும் இவை கொண்டு செய்வது என்ன? விளங்கும் தேவதாரு வனத்தில் தம்பிரானார் அப்போது யாவர்க்கும் அருளின ஆனந்த நிருத்தம் எப்போது தரிசிப்போம் என்கிற மோகம் மிகுத்தது என்று சொன்னான் குற்றமில்லாத சேடன் என்றவாறு. (56)

**முந்தய னவனை நோக்கிய முடியநீ முடியா தொன்றைச்**
**சிந்தனை செய்த பித்துத் தீர்தரா தெனந கைத்தங்(கு)**
**அந்தமில் சுதந்திரத்தோ னார்சொல வனத்தி லன்று**
**வந்தருள் நடம்பு ரிந்தான் மதியிலா யெனவு ரைத்தான்.**

இ-ள் : தேவ இருடிகளுக்குப் பிரதானனான பிரமா, செடனைப்பார்த்து ஒருகாலும் முடியாததொன்றை முடிய வேண்டும் என்று கருதின உன்னுடைய பிராந்தி ஞானம் முடியப்போகிறதில்லை என்று நகைத்தருளி, அந்நாள் அந்தத் தேவதாருவனத்திலே முடிவில்லாத சுதந்திரச் சத்திமானாய் உள்ள பரமேசுவரனார் யார் வேண்டவந்து அருள்நடமாடினார்; புத்தி இல்லாதவனே! என்றான் எ.று. (57)

**ஆலவா யனந்த னென்று மாடுவா னவனே யன்றோ**
**சாலவா தரித்தால் தானே தருபவன் தாரா னென்றால்**
**ஏலுமிங் கென்ன வன்னத் திறையவ னந்தோ வந்தோ**
**காலமு மநேகஞ் சென்றுங் கழிந்தில தாசை யென்றான்.**

இ-ள்: விடம் ஊறும் வாயினையுடைய அனந்தன் அனவரதாண்டவம் செய்யும் அவன் சிவன் அன்றோ?

தானே நடன தரிசனம் தந்தருளும் அவன் அதனைத் தரிசிக்க வேண்டும் என்று மிகவும் விரும்பினால் தந்தருளான் என்று சொன்னால், அந்த வார்த்தை பொருந்துவதோ? என்று சொல்ல, அன்னவாகனனான இறைவர் விதனப்பட்டு ஐயோ! ஐயோ!! அனேகங்காலம் போயிருக்கையிலும் இவன் ஆசை ஒழியவில்லை என்றார் என்றவாறு. (58)

**நொந்தபங் கயனை நோக்கி நுடங்குட ளேவே யன்றோ**
**அந்தமில் காலஞ் சேய்த்தன் றதுவுமென் றயரக் கண்டும்**
**இந்தநீ யிறந்தாற் பேறிங் கென்னென வனந்த னின்றென்**
**சிந்தையிங் கிதுவாச் செத்துந் திருநடங் காண்பே னென்றான்.**

இ-ள்: இப்படி விதனப்பட்ட பிரமாவைப் பார்த்துச் சேடன் என்னுடைய சரீரம் உள்ளமட்டுமல்லவோ நீர் முடிவு இல்லாத காலம் என்றது: தூரம் அன்று அந்தச் சரீரமும் ஒழியக்கண்டு இப்படிக்கு ஒத்த நீ இறந்தால் எந்த உடலிலே இங்கே நிருத்தம் காண்பாய் என்ன, சேடனானவன் இப்போது என்னுடைய சித்தம் இந்த ஆனந்த நிருத்தத்திலே ஆதலால் அச்சரீரம் விட்டாலும் இந்தக் கருத்தே வித்தாக மற்றொரு சரீரம் எடுத்தும் காண்பேன் என்றான் எ-று. (59)

**ஆங்கவ னுறுதி கேளா வன்னமே யானா நல்கித்**
**தீங்கில்பங் கயனே முன்னைத் தேவர்கள் மலர்கள் சிந்த**
**ஓங்கிருங் கணங்கள் சூழ வொண்ணுதல் திலக வல்லிப்**
**பூங்குழ லுமையாள் பாகம் புரந்தர னாயி ருந்தான்.**

இ-ள்: சேடனுடைய அலைவற்ற திடவார்த்தையைக் கேட்டு, அன்னத்தை இடபமாக்கிப் பாசாதீதனாக உள்ள பிரமாவே அரிபிரமாதிகள் புட்பவருஷம் வருஷிக்கவும் தேவர்களுக்கு மேலான ஏகாதசவுருத்திரகணங்கள் சூழவும், நல்ல நெற்றித்திலகத்தையுடைய ஒப்பற்ற வல்லிசாதக் கொம்பு போன்று புட்பகேசி என்கிற திருநாமத்தையுடைய உமையவளை வாமபாகத்திலே வைத்தருளி ஸ்ரீ கண்ட பரமேசுவரனாகி எழுந்தருளியிருந்தார் என்றவாறு. (60)

**கண்டபோ தனந்த னஞ்சிக்**
**கரசர ணாதி கம்பித் (து)**
**அண்டனே போற்றி யாண்ட**
**அமலனே போற்றி திங்கள்**

**துண்டனே போற்றி நாயேன்**
**சொன்னவை பொறுப்பாய் போற்றி**
**கொண்டனோ் கண்டா போற்றி**
**கூத்தானே போற்றி போற்றி.**

இ-ள்: பிரம சொரூபத்தைச் சிவசொரூபமாகக்கண்ட போது சேடன்பயட்பட்டுக் கரசரணாதி அவயவங்கள் நடுங்கி நின்று, பகிரண்ட கர்த்தாவே! இரட்சி; பெத்த முத்திகளில் எனக்கு பிராணனாய் நின்று ஆண்டு கொண்ட நிமலனே! இரட்சி; அர்த்த சந்திரனைச் சடாமகுடத்திலே தரிசித்த சிவனே! இரட்சி; நாயேன் புத்திபூர்வமாகச் சொன்ன பிரதியுத்தங்களைப் பொறுத்தருள்வானே! இரட்சி; காளமேகத்துக்கு ஒத்த கண்டத்தை உடையவனே! இரட்சி; ஆடிய கூத்தனே! இரட்சி; இரட்சி என்றவாறு. (61)

**ஆண்டிட வேண்டி வந்த வமலனே போற்றி யென்று**
**மாண்டகு மனங்க ரைந்து மண்மிசை வீழ்ந்தி றைஞ்ச**
**நீண்டசெஞ் சடையா னானை நேர்செல வுலகத்த ணைத்துக்**
**காண்டகு கருணை நல்கிக் கைத்தலம் முடிமேல் வைத்து.**

இ-ள்: என்னை ஆட்கொண்டருள நினைத்தருளி இத்தனை தூரம் எழுந்தருளின சுத்தனே! இரட்சி என்று திடசித்தம் நீராளமாயுருகிப் பூமியில் விழுந்து இறைஞ்சின அளவில் நீளிய செஞ்சடையோன் இடபத்தைச் சேடனுக்கு எதிரே செல்ல உகைத்தருளி அதன்பின் அவனை அணைத்தருளிக் காணத்தக்க பாவனா தீட்சைபண்ணி அவனுடைய தலைமேலே ஸ்ரீயத்தம்வைத்து என்றவாறு.

'காண்டகு கருணை நல்கிக் கைத்தல முடிமேல் வைத்து' என்பது பாவனாதீட்சையும் பரிசதீட்சையும் எனக் கொள்க. (63)

**இப்படித் தவங்கள் செய்தா லன்றிநம் மினிய கூத்து**
**மெய்ப்படத் தெரியா தன்று விளங்கிடக் கடவ துன்றன்**
**எய்ப்புறு துயரந் தீர்க வெனவுரைத் தெம்மை யுண்மை**
**செப்புது முணர்க வென்று கூறினான் தேவ தேவன்.**

இ-ள்: இவ்வண்ணம் திடமான தவசுகள் செய்தால் ஒழிய நம்முடைய ஆனந்தநிருத்தம் சத்தியமாகத் தெரியாது; அந்த நாள் வெளிப்படத் தோன்றக்கடவது. தவசு செய்து இளைத்த உன்னுடைய விதனத்தைத் தீர்வாயாக என்று

அருளிச்செய்து, இனி நம்முடைய சத்தியத்தைச் சொல்லுவோம் அறிவாயாக என்று தேவர்கள்தேவர் அருளிச் செய்தார் என்றாவாறு.

இதில் 'அன்று' என்னும் சுட்டு வருங்காலச்சுட்டு. (63)

**வையக மாயை யின்கண் வினைவழி வருங்க டாதி**
**செய்பவ ரொழியத் தோன்றாச் சீலத்த வுயிர்கள் சேர்தற்(கு)**
**எவ்வகை யுணர்வுண் டென்னி லிலங்குமைந் தொழிலி யாவும்**
**உய்வகை யாலி யற்றற் கியாமுளோ மெனவு ரைத்து**

இ–ள்: நாதாதி பிருதிவி அந்தமான தத்துவமெல்லாம் சுத்தமாயை அசுத்தாமாயை எனும் இரண்டு காரணத்திலும் ஆன்மாவின் கன்மசீவனம் ஏதுவாகத் தோன்றும்; அஃது எங்ஙனம் எனில்? குடம் சால் கரகம் முதலானவை நிமித்த காரணமான குலாலனை ஒழிந்து உண்டாவன அல்ல என்கிற சீலத்தை ஒக்கும்; கிஞ்சிக்ஞனான ஆன்மா சடத்துவங்களைப் பொருந்திப்புசிக்க அறிவு எப்படி உண்டாம் எனில், விளங்கிய பஞ்சகிருத்திய பேதமெல்லாம் கன்மசாமியம் வரும்படி செய்தற்கு அநாதியே பிராணனாய் நின்று நாம் நடத்துவோம் என்று அருளிச்செய்து என்றவாறு. (64)

**சகள நிட் களமெ மக்குத் தஞ்சமா மேனி யாநீ**
**யுகளமு முணரிற் சத்தி யுபாதான மாகப் பாச**
**நிகளம தகற்ற வன்பர் நேர்நிக ழுருவ மொன்றென் (று)**
**அகளமாய் ஞான மேயா யகண்டமா யமர்ந்த தன்றே.**

இ–ள் : சகளமும் நிட்களமும் நமக்குப் பரிக்கிரக ரூபமும் சைவ தந்திர ரூபமுமாயிருக்கும்; இந்த இரண்டு ரூபங்களையும் நீ இன்று விசாரிக்கில் அசுத்தமாயை சுத்தமாயை என்னும் இவைகளை உபா தானமாகக்கொண்டு பாசவிலங்கை முறிக்கும் படிக்குச் சகலர் பிரளயாகலர் இவர்களுடைய கன்மசாமியத்திலே இவர்களைப்போலத் தூலசூக்குமமாய் வந்து சத்திநிபாதம் பண்ணிப் பாசச்சேதம் பண்ணிச் சுத்த கேவலத்திலே கூட்டுகிற கிரியாசத்தி அதிட்டானமான ரூபம் ஒன்று ; மற்றொன்று விஞ்ஞானகலரில் பக்குவரில் பரமுத்திற்கு நிரதிகாரமாய் இரட்சிக்குமிடத்தில் கலாதீதமுமாய் ஞானமுமாய்க் கண்டிக்கப்படாத ஞானக்கிரியையாயிருக்கும்; அபர முத்தற்கு ரட்சிக்குமிடத்துச் சாதி கரணரூப நாதம் விந்து சுவரூபமாயிருக்கும் என்றவாறு.

இதற்குப் பிரமாணம் "சிவம் சத்தி நாதம் விந்து" என்கிற பிரமாணத்தைக் கண்டுகொள்க. 'சகள நிட்களம் எமக்குத் தஞ்சமாமேனி' என்பதற்குச் சிவ சத்தி என்பாருமுளர் கிருத்தியத்துக்குச் சுத்தமாயை அசுத்தமாயையை அதிட்டிக்குமது ஒழியத் தான் செய்யாது ஆதலான் மறுக்கப் பட்டது. (65)

**இருவகை யிவை கடந்த வியல்புநம் மொளியா ஞான**
**உருவமான னந்த மான வுயிரியாம் பெயரெ மக்குப்**
**பரபதம் பரம ஞானம் பராற்பர மிஃது காத்தல்**
**1 நிருமிதி யிச்சை செய்தி 2 நிழனட மாகு மன்றே.**

இ-ள் : முன்சொல்லப்பட்ட சகளம் நாலுக்கும் நிட்களம் நாலுக்கும் அப்பாலாகிய நம்முடைய பிரகாசமான சுவபாவ சத்தியே நமக்கு வடிவு; இதற்கு ஞேயமான பிராணன் நாம், எமக்குப் பரபதம் பரமஞானம் பராற்பரம் என்று பெயர்; சங்காரம் இரட்சை சிருட்டி திரோபவம் அனுக்கிரகம் என்கிற பஞ்சகிருத்தியம் நம்முடைய கூத்து என்றவாறு. (66)

**ஆரண மனைத்தும் நாம்நின் றாடுது மென்று போற்றும்**
**காரணங் காலந் திக்குக் கருத்திடங் காண மாட்டா**
**சீரணி தேவ தாரு வனத்திடைத் தெரிய நின்று**
**நாரணன் முதலோர் காண நாடகம் நடித்த ஞான்று.**

இ-ள்: அனந்தமான வேதங்களும் அனவரத தாண்டவம் நாம் பண்ணுவோம் என்று துதியாநிற்கும்; இன்ன காரணத்தினாலே என்றும் இன்ன காலத்திலே என்றும் இன்னதிக்கிலே என்றும் இன்ன இடத்திலே என்றும் அறிய மாட்டா; அழகு விளங்கின தேவதாருவனத்தின் நடுவே தெரிய நின்று நாரணன் முதலோர் காண நிருத்தம் செய்த நாள் என்றவாறு. (67)

**அன்றரு வனம்பொ றாமை யலைந்தமை யறிந்து நாமும்**
**வென்றிகொ ணடங்க ணொய்தின் விட்டன முனக்கு மின்று**
**நின்றிட மிதுவாக் காட்டு நிலயமன் றதுபொ றுக்கும்**
**மன்றுள தென்றா னிந்த வையகம் வாழ்வ தாக.**

1.'திருமலி' 2 'திகழ் நட' எனவும் பாடம்

இ-ள்: அந்நாள் பெரிய தேவதாருவனம் பூமிக்கு மத்திய மல்லாதபடியினாலே அசைந்தபடியைக் கண்டு நாமும் வெற்றியுடைத்தான நடனங்கள் சிறிதுபொழுதில் தீர்ந்துவிட்டோம். உனக்கும் இப்போது இவ்விடத்திலே நின்று தெரிசிப்பிக்கும் கூத்தன்று; சத்தியமான ஆனந்தநிருத்தத்துக்கு அதிட்டான மான ஞானசபை ஒன்று உண்டு உன்றருளிச்செய்தார்; இந்த வையகம் வாழ்வதாக என்றவாறு. (68)

**அனந்தனுத் தொழுது போற்றி யடியனே னுய்யத் தேவர்**
**இனந்தரு மறைகள் காணா திலகுமன் றுலகி லுண்டாய்**
**நினந்தமி லருளாற் காட்டு நினைவுமுண் டாகி நீயே**
**வனந்தனில் வந்தா யென்றால் வாழ்ந்தன னன்றோ**
**வென்றான்.**

இ-ள்: சேடனும் வணங்கித் துதித்து, யான் பிறவித் கடலிலே ஆழாமல் கரையேறிப் பிழைக்க, அரி பிரமாதிகள் வேதங்கள் காண்பரிதாய்ப் பிரத்தியட்சம் அநுமானம் ஆகமம் என்கிற பிரமாணங்களுக்கும் அப்பாலாய் எப்போதும் எல்லாப் பதார்த்தங்களினும் விளங்காநிற்கும் ஞானசபை இவ்வுலகத்திலே ஓரிடத்திலே உண்டாய் தேவரீருடைய ஆதியந்தமில்லாத பூரண, ஞானத்தினாலே காட்டவேண்டும் என்கிற சுட்டறிவு இச்சர்வ வியாபியாயிருக்கிற உண்டாம், தேவரீரே ஏகதேசருமாய்ப் போக்கு வரவுமுடையருமாய் அத்தில்லைவனத்தில் வந்தீராகில் கிருதார்த்தனானேன் அன்றோ என்றான் என்றவாறு. (69)

**வலங்கைமான் மழுவோன் போற்றும் வாளர வரசை நோக்கி**
**அலைந்திடும் பிண்ட மண்ட மவைசம மாத லாலே**
**இலங்கைநே ரிடைபோ மற்றை யிலங்குபிங் கலையா நாடி**
**நலங்கிள ரிமய நேர்போ நடுவுபோஞ் சுழுனை நாடி.**

இ-ள்: வெற்றி பொருந்தின ஸ்ரீயத்தங்களிலே மானும் மழுவும் தரித்த பரமேசுவரர், புகழ்ந்து வினவும் சேடனைப் பார்த்து, தாபரமாயிருக்கிற அண்டசிருட்டியும் சங்கமமான சரீர சிருட்டியும் ஒக்கும்; ஆதலாலே, சரீரத்தில் இடைநாடி இடத்திலும் பிங்கலைநாடி வலத்திலும் சுழுமுனைநாடி நடுவிலும் போமாறுபோல இந்தப் பரத கண்டத்தில் இடைநாடி இலங்கைக்கு நேரேபோம்; பிங்கலைநாடி நன்றாக உயர்ந்த இமயபருவதத்துக்கு நேரேபோம்; இந்த இரண்டு நாடிக்கும் நடுவேபோம் சுழுமுனைநாடி என்றவாறு. (70)

**நாடரு நடுவி னாடி நலங்கிளர் தில்லை நேர்போய்க்**
**கூடும் கதனின் மூலக் குறியுள ததற்குத் தென்னர்**
**மாடுறு மறைகள் காணா மன்னுமம் பலமொன் றுண்டங்(கு)**
**ஆடுது மென்று மென்றா னென்னையா ளுடைய வையன்.**

இ-ள்: தாரணாதிகள் ஆசை கூடாதவர்கக்கு நாடுதற் கரிய சுழுமுனைநாடி நன்மைமிகுந்த தில்லைவனத்தில் செவ்வையேபோய்க்கூடும்; அந்தப் பதியில் ஸ்ரீ மூலத்தானமுடைய தம்பிரானார் சுயம்புவான குறி உண்டு; அச்சிவலிங்கத்துக்குத் தெற்காக நாலுதிக்கிலும் சூழ்ந்து பொருந்தின வேதங்களுக்கு எட்டாத நிலைபெற்ற அம்பலம் ஒன்று உண்டு; அவ்விடத்திலே அனவரத தாண்டவம் செய்வோம் என்றார் என்னை ஆளுடைய ஐயர் என்றவாறு. (71)

**மற்றது சிதம்ப ரத்த வாய்மையான் மாயா நீர்மைப்**
**பற்றுட னழியா தென்றும் பயின்றுள துயிர்க ளெண்ணில்**
**நற்றவஞ் செய்தா னீடு நாடரு ஞான நாட்டம்**
**பெற்றவர் காண்பர் காணப் பெறாதவர் பிறப்ப ரன்றே.**

இ-ள்: முன்சொன்ன அம்பலம் சத்தியமான ஞானகாசம் ஆதலால் நிவிர்த்தியாதி பஞ்சகலா சூனியம் பிறந்த மகா சங்காரகாலத்தினும் அழியாது; ஆதியந்த சூனியமாய் எக்காலமும் பொருந்தியுள்ளது; சுத்ததான்மாக்கள் எண்ணிறந்த சிவபுண்ணியத்தைச் செய்தால் முன்செய்த சிவபுண்ணியத்தினாலே கன்ம சாமியம் பிறந்த அளவில் ஆசாரியனாலே சத்திநிபாதமும் மலபாகமும் உண்டாகிப் பாசச்சேதம் பண்ணி ஒழியாத ஞானக்கண்ணைப் பெற்றவரே அரிபிரமாதிகள் நாடுதற்கரிதான சிதம்பரத்தைக் காண்பார்கள்; இப்படிக் காணஞான திருட்டிபெறாதவர் எண்பத்துநான்கு நூறாயிரம் அச்சிலும் பிறந்து உழல்வர் என்றாவறு.'மாயாநீர்மைப்பற்று' என்றது மந்திர பத வன்ன புவன தத்துவ கலைகள். (72)

**நீயினிக் காள வாயு நிலவெரி கதிரார் கண்ணும்**
**ஆயிரஞ் சிரமுங் கண்டா லஞ்சிடு மகில முன்னே**
**தூயவத் திரியுந் தாரந் துலங்கன சூயை தானும்**
**சேயென நின்னைவேண்டித் திருந்தருந் தவம்பு ரிந்தார்.**

இ-ள்: நீ இனி ஓர் உபாயம் சொல்லக்கேள்; நஞ்சு நிறைந்த பேழ்வாய்களும், சோம சூரிய அக்கினிப் பிரகாசங்களிலும் மிகுந்த பிரகாசத்தையுடைய கண்களும், ஆயிரம் பணா மவுலிகளுமாயிருக்கக் கண்டால் உலகப் பிராணிகள் மிகப் பயப்படுவார்கள்; நெடு நாளைக்கு முன்னே ஒரு இதியாசம் உண்டு; அஃது எங்ஙனம் எனில், பரிசுத்தனான அத்திரி என்கிற ஓர் இருடியும் அநுசூயை என்கிற பத்தினியும் பெறவேண்டும் என்று விஷ்ணுவை நோக்கித் தவசு செய்தார்கள் என்றவாறு. (73)

அரியவர்க் குன்னை யீந்தா னன்று நீ பிறத்த லஞ்சி
இருதுவாய்ப் புனிதை யாய்வந் தேற்றவஞ் சலிப்பா லெய்தி
மருவுமைந் தலையோர் பால மாசுண மாகக் கண்டு
பரிவினாற் பயத்தா னீப்பப் பதஞ்சலி யான பண்பால்.

இ-ள்: விஷ்ணு உன்னை அவர்களுக்குப் புத்திரனாகக் கொடுத்தான்; அப்போது நீ சனனமாகப் பயப்பட்டு ருதுவாய் ஸ்நானஞ்செய்து பரிசுத்தையாய்க் கரையிலே வந்து ஏற்ற கையிலே வந்து நீ ஐந்து தலை பொருந்தின சிறுபாம்பாகக்கண்டு பரிவினாலும் பயனத்தினாலும் கைவிடப் பாதத்திலே விழுகையாலே பதஞ்சலி என்று பண்புபற்றிய பெயர் உனக்கு உண்டு ஆதலால் என்றாவறு. (74)

ஆங்கது வாகி யிந்த வனந்தனா நிறைவி னோடும்
பாங்கினா னீங்க லாகாப் பதஞ்சலி யென்னு நாமம்
தாங்கி நீ நாக லோகந் தகுவழி சார்க நாப்பண்
ஓங்கலொன் றுளது தென்பா லுயர்பில் வழியு முண்டால்

இ-ள் : அந்த உடலாகி இந்தச் சேடபுத்தியுடனே சற்குணம் விடப்படாத பதஞ்சலி என்கிற நாமத்தைத் தரித்து நீ நாகலோகத்துக்குப் பொருந்தின வழியே போகக்கடவை நாகலோகத்துக்கு நடுவே ஒரு மலை உண்டு. அதற்குத் தென்புறமாக உயர்ந்த பிலத்துவாரம் உண்டு எ-று (75)

திடமதன் முடிவு தில்லைத் திகழ்வன மாகும் வாய்தல்
விடவட பாலி லால மென்னிழ றன்னி லந்தத்
தடவரை கொழுந்து மூலத் தானமாங் குறியா யிந்தப்
புடவியி லமரர் போற்றும் பொற்பம ரற்பு தத்து.

இ-ள்: சத்தியமாக அந்தப் பிலத்துவராத்தின் முடிவு விளங்கும் தில்லைக்காடாய் இருக்கும்; அப்பிலத்துவாரத்தை நீங்கின அளவில் வடக்காக ஆலமரத்தின் குளிர்ந்த நிழலில் நாம் உனக்கு முன்னே சொன்ன பெரிய மலையின் கொழுந்து மூலத்தான இலிங்கமூர்த்தியாய் இந்தப் பூமியில் தேவர்கள் தொழும்படியான பொலிவுள்ள அற்புதத்தை உடையது என்றவாறு. (76)

**பூசையங் கியற்றிக் கூத்தம் புந்திசெய் தரும்பு லிக்கால்**
**ஆசிலா முனியி ருந்தா னவனுட னமர்க நாமும்**
**ஓசைகொள் பூசம் பொன்னோ டுறுதினம் பொருந்து முச்சி**
**தேசுறு நடநீர் காணச் செய்துமென் றருளிச் செய்தான்.**

இ-ள் : அவ்விடத்திலே நம்முடைய நிருத்தம் காண வேண்டும் என்று மனதார வேண்டிக்கொண்டு பூசைசெய்து அரிய வியாக்கிரபாதன் என்கிற சுத்த இருடி இருக்கிறான்; அவனுடைனே நீயும்போய்க் கூடுவாயாக; நாம் பிரசித்தமான தைப்பூசத்தில் வியாழக்கிழமையுடனே கூடின சித்தயோகத்தில் மத்தியானகாலத்தில் அவ்விடத்திலே பிரகாசமான ஆனந்தநிருத்தத்தை நீங்கள் காணப் பண்ணுவோம் என்று அருளிச்செய்தார் என்றாவறு. (77)

**திருவருள் பெற்று மற்றத் திகழனந் தனும்வி முந்து**
**பரிவொடு பணிந்தெ ழுந்து பரவச னாகி நிற்பப்**
**புரிகுழ லுமையா ளோடும் பூதமுங் கணமும் போற்ற**
**இருவிசும் பதனில் விண்ணோ ரிறையவ னுறம றைந்தான்.**

இ-ள்: அநுக்கிரகம் பெற்றதனாலே விளங்கின சேடனும் பூமியிலே விழுந்து பத்தியுடன் நமஸ்கரித்து எழுந்து பரவசனாகி நிற்ப, நெறித்த கூந்தலினை உடைய பார்வதி யாரோடு பூதங்களும் கணநாதர்களும் போற்ற பெரிய ஆகாயத்துக்கு நடுவே தேவதேவர் அந்தர்தானம் பண்ணினார் என்றவாறு.

இதில் பெரிய விசும்பு என்றது நாலு பூதங்களுக்கும் இடங்கொடுத்து நிற்கையால் எனக் கொள்க. (78)

**அண்ணலார் மறைந்த போதங் காசைநே ராசை யோடு**
**மண்ணிலே வீழ்ந்தி றைஞ்சி வானவ னருளா லந்தத்**
**துண்ணெனு முருவ நீங்கித் தொழுபதஞ் சலியா மேனித்**
**திண்ணமா ரிலங்க மாகச் சிலபகல் சிந்தை செய்தான்.**

இ-ள் : அவ்விடத்தில் பரமேசுவரர் மறைந்த அளவில் அத்திக்கைநோக்கி அன்புடன் பூதலத்திலேவிழுந்து பணிந்து தம்பிரானார் திருவருளினாலே, கண்டார் பயப்படுகிற சேடனுருபவம் போய். கண்டவர்கள் நமஸ்கரிக்கும் பதஞ்சலி ரூபம் பெற்றுச் சிலகாலம் பரமேசுவனைத் தியானம் செய்தான் என்றவாறு. (79)

**வேட்டுவற் குறித்த பச்சை மென்புழுப் போல நாதன்**
**காட்டிய மேனி கொண்டு கண்டது தொழுது பண்டை**
**நாட்டெதி ரணைய வண்ண னயந்தவா கேட்டு நாகர்**
**ஈட்டமுந் தலைவரானா ரியாவரு மெதிர்கொண் டார்கள்.**

இ-ள்: வேட்டுவனாகிய குளவியைக்குறித்திருந்த பச்சைப் புழுவானது குளவியின் மேனிகொண்டாற்போலப் பதஞ்சலி வேடத்தை நினைத்திருந்து தம்பிரானார் திருவுள்ளத்தினாலே கற்பித்த அந்த வேடத்தைக்கொண்டு தனக்குப் பதஞ்சலி வேடமாகக்கண்டு, இந்தச் சரீரத்தைச் கூட்டின அருளைத் தொழுது பழைய நாகலோகத்துக்குச் சமீபமாகச் சென்று பொருந்த நம்முடை இராசா வந்தார் என்ற பிரிய வார்த்தையைக்கேட்டு வாசுகி, தக்கன், கார்க்கோடன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன், அநந்தன் முதலான நாகராசாக்களும் எதிர்கொண்டார்கள் என்றவாறு. (80)

**மண்டிவந் தெதிர்கொண்ட டார்க்கு மாசுண வரசர் சூழ**
**அண்டர்தம் பெருமா னல்கு மருவரை யமலன் மேனி**
**கண்டுவந் திறைஞ்ச நின்ற கார்க்கோடன் முதலோர் போற்றி**
**விண்டு நீ பணிவா னென்கொல் வேண்டிய தென்றுரைத்தார்.**

இ-ள்: நெருங்கி வந்து எதிர்கொண்டு முழங்கப் பெரிய வார்த்தைகள் சொல்லும் சர்ப்ப ராசாக்கள் சூழவந்து தேவதேவன் அருளிச்செய்த பெரிய மலையாக மூலத்தானமுடைய தம்பிரானார் திருமேனியைக் கண்டு பிரியத்துடனே நமஸ்கரிக்கச் சூழநின்ற சர்ப்பராசாக்களில் கார்க்கோடன் முதலான இராசாக்கள் இந்த மலையை ஒரு பொருளாக எண்ணி, நீர் விரும்பவேண்டிய காரணம் என்ன என்றார்கள் எ-று. (81)

**காதலி னோக்கியுள்ள கைப்பொருள் கண்டோர் யார்க்கும்**
**பாதிடு முரவோர் போலிப் பருப்பதம் பாத லக்கீழ்ப்**
**போதமார் தான மெல்லை தில்லையாய்ப் பொருந்தி வாழும்**
**நாதனார் காணு மென்று கூறினா னாக ராசன்.**

இ-ள்: தங்களிடத்துள்ள பொருள்களை எல்லாம் மிகுந்த ஆசையுடனே கண்டவர் எல்லார்க்கும் வரையாமல் பகுந்து கொடுக்கும் பெரியோரைப்போல இந்தப் பர்வதம் பாதாளம் ஏழுக்கும் கீழாகச் சொல்லப்பட்ட சொற்பொருள் முடிந்த இடம் அதிட்டானம்முடிவுக்கு எல்லை சிதம்பரமாகப் பொருந்தி விளங்கும் நம்முடைய சுவாமிதான் காணும் என்று நாகராசன் சொன்னான் என்றவாறு.

இந்த பாதாளக்கீழ் என்பதற்குப் "பாதாளம் எழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்" என்கிற பிரமாணத்தையும் கண்டுகொள்க. (82)

**அலைபணத் தலைவ யாமு னறிந்தவா கேட்டி யாயின்**
**தலைவனே மலையென் றெண்ணிச் சங்கித்து மிருந்து மிந்தப்**
**பிலவழி கீழுற் றெல்லை பெற்றில மேலுஞ் சாலச்**
**செலவரி தென்று மீண்டுத் தெளிவில மென்று செப்பி.**

இ-ள்: அசைகின்ற படத்தையுடைய அரசனே! யாங்கள் அறிந்த முறைமையை நீ கேட்பாயாகில் இந்தச் சுவாமியே இந்த மலை என்று எண்ணிச் சந்தேகித்திருப்போம்; பின்னையும் இது இன்னது என்று அறிய என்று இந்தப் பிலத்துவாரத்தில் கீழ்நோக்கிப்போகிற வளைவழியே சென்றும் முடிந்திடம் காணப்பெற்றோம் இல்லை ; இந்த வளைவழியே மேல்நோக்கிப் போகியும் போகப்படாமல் மீண்டும் வருவோம். ஆதலால் இது எங்களுக்குத் தெரியப்போகாது என்று சொல்லி என்றவாறு. (83)

**அத்தகு வாய்மையாலே யவர்களா தரித்துப் போற்றிப்**
**பத்தியா லிறைஞ்சக் கண்டு பதஞ்சலி யவரை நீங்கிச்**
**சுத்தமார் பிலம்வ ணங்கித் துணைவனே துணையா வுன்னி**
**இத்தலத் துயரம் நீங்க வேறுவா னேற லுற்றான்.**

இ-ள்: அவர்கள் அப்படிச் சொன்னதினாலே இந்த மலையைப் பெரிய சத்தியமான சிவரூபம் என்று அறிந்து சர்ப்ப ராசாக்கள் எல்லாரும் ஆசையும் பத்தியும் பொருந்தி நமஸ்கரிக்கக் கற்பித்துப் பதஞ்சலி மகாஇருடி சர்ப்ப ராசாக்களை நீங்கிச் சுத்தமான பிலத்துவாரத்தை நமஸ்கரித்து உயிர்த் துணைவனைவழித்துணைவ னாகத் தியானித்து இந்த உலகத்தில் ஆன்மாக்கள் துக்கமான நரகலோகத்தினின்று

சிவலோகத்துக்கு ஏறும்படி நாகலோகத்தினின்று பூலோகத்தில் வர, பிலத்துவாரவழியாய் ஏறினான் எ-று. (84)

**அரவரை யாட வாடு மண்ணலஞ் செழுத்துங் கண்ணாக்**
**கரவிலா வழியா லெண்ணின் காலங்கள் கழிய வேறிக்**
**குரைகடன் மணியு முத்தும் பவளமுங் கலமுங் கொண்டு**
**திரைநிரை வணங்குந் தில்லைத் திருவெல்லை சேர வந்தான்.**

இ-ள்: திருவரையில் பாம்பு ஆடும்படி நிருத்தஞ்செய்யும் பரமேசுவரன் பஞ்சாக்கரமே கண்ணாக வெளியான வழியால் எண்ணிறந்த காலங்கழிய ஏறி, ஆரவாரம் செய்யும் கடலானது மாணிக்கமும் முத்தும் பவளமும் மரக்கலங்களும் கொண்டுவந்து காணிக்கையிட்டுத் திரை நிரையாலே வணங்கும் தில்லைத் திருவெல்லைக்குச் சமீபமாக வந்தார் எ-று. (85)

**உருகிட வுள்ளங் கண்ணீ ரோவாம லொழுக வுச்சிக்**
**கரகம லங்கள் கூம்பக் கணபண மணிவி ளங்கத்**
**திருவருள் வளர ஞாலஞ் சிவமய மாக மாயா**
**இருள்கெட ஞான பானு வெனநில மேலே முந்தான்.**

இ-ள்: பூபாரம் தாங்குகிறோம் என்கிற அகங்காரத்தாலும், பதினாலு லோகங்களையும் சிருட்டித்த பிரமாவையும் திருவுந்தியில் தோற்றுவித்த விஷ்ணுவைத் தாங்குகிறோம் என்கிற அகங்காரத்தாலும் சிக்கென்று வச்சிராகாரம்போன்றிருக்கின்ற அந்தக்கரணம் தேவதாருவனத்தில் நிருத்தம் விஷ்ணுவின் பக்கலிலே கேட்டு மெத்தென்று பின் கைலாயபாரிசத்தில் ஸ்ரீகண்டபரமேசுவரன் தீட்சையினாலே நெகிழ்ந்து உடைந்து, பின்பு நாகலோகத்தில் சுயம்புலிங்க தரிசனகாரணத்தினாலும், பிலத்துவாரத்தில் உண்மையினாலும், சத்திநிபாதம் உதித்தமையாலும், இதற்குமுன் காணாத ஆச்சரியத்தைக் காண்கையினாலும் நீராளமாய் உருக, சிற்றூற்றில் பிரமப்பிரளயம்போலக் கரையுரண்டு கண்களாலே ஒழியாத தாரை கொள்ள, உச்சியில் குவிந்த கராம்புயங்கள் இந்தத் தலத்தில் தாபராசங்கமாதிகள் சேரச் சிவமாகத் தோன்றுதலால் அனவரதமும் குவிந்துசெல்ல, நெருங்கின பணாரத்தினங்கள் ஞானப்பிரகாசத்தினாலே விளங்க, அநாதியே ஆணவ சத்தியைப் பிரேரித்திடும் தமோடயமாகிய திரோதானம் அருளாய்ப் பிரகாசிப்பிக்க, இப்பூலோகத்தில் ஆன்மாக்கள் சிவபத்தி பெற, ஒழியாத ஆணவம் ஒழிய, இப்படி எழும்

ஞானசூரியனைப்போல அந்தப் பிலத்துவாரத்திலே நின்று பூமியில் எழுந்தார் என்றவாறு. (86)

**எழுந்தருள் வனமி றைஞ்சி யிருந்தவா கண்டு காணச்**
**செழுந்தவ வுருவை நோக்கித் திருமுனி திகைப்பத் திங்கள்**
**கொழுந்தணி வேணி யண்ண லருளினாற் கொழும்பு லிக்கால்**
**அழுந்துமா தவனை நேர்சென் றாதர வதனாற் கண்டான்.**

இ-ள்: எழுந்திருந்தமாத்திரத்தில் நிட்களமான தில்லை வனத்தை நமஸ்கரித்து இருந்தபடியைக் கண்டு, இதற்கு முன் கண்டறியாத திவ்வியமான தபோவேடத்தைப் பார்த்து, வியாக்கிரபாதர் இவர் யாரோ என்று திகைப்ப இளம்பிறையை வேணியிலே பொருந்தின சுவாமி அருளிச் செய்தபடியே கொழுவிய புலிக்கால் பொருந்தின முனியின் எதிரே சென்று மிகுந்த ஆதரத்தினாலே பதஞ்சலி கண்டார் என்றவாறு. (87)

**மங்கல வுருவா மேனி மாமுனி யதிச யித்துச்**
**செங்கைக ளேந்தி மேனித் திகழ்வுகண் டுவந்து செல்வா**
**எங்குறை வாய் நீ போவ தெவ்வள வேது நாமம்**
**சங்கைகளகல வெல்லாஞ் சாற்றுக வென்று செப்ப.**

இ-ள்: திவ்விய சரீரத்தையுடைய வியாக்கிரபாதமுனி மிகவும் ஆச்சரியப்பட்டு, பதஞ்சலியினுடைய தேசசுமிகுந்த சரீரத்தைக் கண்டு, இருகையும் ஏந்தி உபசாரம் சொல்லி,'அருட்செல்வனே ! நீ எங்கே இருப்பாய்? நீ எவ்விடங்குறித்துப்போகின்றாய்? உனது பெயர் எது? என்னுடைய சந்தேகம் கெட இவைகளெல்லாம் வகுத்துச் சொல்லுவாயாக' என்று கேட்கச் சொல்லுவார் என்றவாறு. (88)

**அடுபுலித் தாளோய் கேள்யா னனந்தனா னந்தமான**
**நடநெடு வனத்து ளண்ண னயந்தவா நல்கி யென்னை**
**நெடியவ னமிளி கொள்ளா நீர்மையா னிப்ப நீங்கித்**
**தடவரை மருங்கே யானுந் தவம்பல காலஞ் சார.**

இ-ள்: பாசச்சேதம் பண்ணியுள்ள வியாக்கிரபாதரே! கேட்பீராக; நான் ஆதிசேடன்; உயர்ந்த தேவதாருவனத்திலே தம்பிரான் ஆனந்தநிருத்தம்பண்ணின பிரகாசத்தை விஷ்ணு எனக்கு அநுக்கிரகித்து என் ஆதரத்தைக்கண்டு, என்மேலே விஷ்ணு பள்ளிகொள்ளாமல் தவசு பண்ணக் கற்பிக்க, யானும் போய் பெரிய கைலாயபாரிசத்திலே நெடுங்காலம் தவசுபண்ண என்றவாறு. (89)

**வாசமா மலரோ னாகி வாய்மைக ளளந்து தானாம்**
**தேசினி லணைந்து வந்தேன் சிரமிசைக் கரமி ருத்திப்**
**பாசம தகல நாயேன் பதஞ்சலி யாக நல்கி**
**ஆசிலா வுபதே சங்க ளளவிலா வகைய ளித்து.**

இ-ள்: வாசனை பொருந்திய தாமரைப் பொகுட்டில் வீற்றிருக்கும் பிராமனாகி வந்து, என்னுடைய சித்தசுத்தி அறிந்து, பின்னர்த் தம்முடைய திருமேனியைப் பொருந்தி எனக்கு நேரே இடபத்தை உகைத்தருளி, பஞ்சபாசம் நீங்க என் தலையில் சிவாஸ்தம் வைத்தருளி, அடியேன் பதஞ்சலி ரூபம் கொள்ளும்படி திருவுள்ளம் செய்தருளி, குற்றம்மில்லாத உபதேசங்களினாலே ஒன்றினாலும் அளவிடப்படாத தம்முடைய உண்மையும் உணர்த்தி, மேலும் ஒன்று அருளிச்செய்ததும் கேட்பாயாக என்றார் என்றவாறு. (90)

**வேண்டிநங் கூத்துக் காண வியாக்கிர பாத னென்னும்**
**மாண்டகு முனியுந் தில்லை வனத்தின னவனு நீயும்**
**தாண்டவங் காண்டிர் நாகத் தலத்துயர் பிலத்தா லேறி**
**ஆண்டிரு வென்றா னென்றா னருமுனி யயர்ந்து வீழ்ந்தான்.**

இ-ள்: நம்முடைய ஆனந்தநிருத்தம் காணவேண்டி வியாக்கிரபாதன் என்னும் பேரையுடைய பெரிய முனியும் தில்லைவனத்திலே இருக்கிறான்; அந்த முனியும் நீயுமாக்கூடி நம்முடைய தாண்டவத்தைக் காணக்கடவீர்; நாகலோக வழியாகச் சென்று பிலவழியாலே ஏறி அவ்விடத்தில் இரு என்று திருவுள்ளம்பற்றினார் என்ற மாத்திரத்திலே வியாக்கிரபாதமுனி பரவசராய் வீழ்ந்தார் எ-று. (91)

**அருள்புரி கருணை வெள்ளத் தமுத்தினா னென்னை யண்ணல்**
**திருவிளம் பற்ற யாமுன் செய்தவ மென்னோ வென்றென்(று)**
**உருகினான் கண்ணீர் வார வுயர்பதஞ் சலி நீ தந்த**
**கரவிலா வருளா மென்று கைகளாற் கட்டிக் கொண்டான்.**

இ-ள்: தம்பிரானார் ஒளிபொருந்தின கருணைசாகரத்தில் என்னை ஆழ்வித்தார் ; இவ்வாறு திருவுள்ளம்பற்ற நான் முன்னேசெய்த சிவபுண்ணியம் ஏதோ என்று பலகாலும்உரைத்து அருள்மேலிட்டுக் கண்ணீர் தாரைக்கொள்ள நின்று உருகினார் ; உருகி, பெரிய பதஞ்சலியே நீ கொண்டுவந்து தந்த பிரிய வார்த்தைகள் மறைப்பில்லாத அருள்தானே என்று உவந்து கைகளினாலே கட்டிக்கொண்டார் எ-று. (92)

திண்ணமார் சிறியோன் பெற்ற செல்வமா மென்ன ஞானக்
கண்ணினா னமலன் கூத்துக் கண்டுளங் களித்தான் போன்றங்
கெண்ணிலா வின்பமுற்றங் கிலங்குபொற் கயந்து மூழ்கப்
பண்ணிநான் மலரான் மூலப் பரமர்தாள் பணிய வுய்த்தான்.

இ-ள்: வலிமை பொருந்திய வறுமை அடைந்தவன் செல்வம் பெற்ற தன்னைப்போலவும், ஞானதிருட்டியினாலே சிவபெருமானுடைய ஆனந்தநிருத்தம்கண்டு சித்தம் களித்தார் போலவும், எண்ணிலாத பரமானந்தம் பொருந்தி அவ்விடத்தில் விளங்கும் புண்டரீகப்பொய்கையில் மூழ்கப்பண்ணி நாட்பூவினாலே திருமூலத்தானமுடைய தம்பிரானார் ஸ்ரீபாதத்தில் நமஸ்கரிப்பித்தார் என்றவாறு. (93)

வலங்கொண்டு குடபால் தெய்வ வாவியின் மூழ்கு வித்து
நலங்கிளர் தன்னை யாண்ட நாதனை வணங்க நல்கித்
தலம்புணர் பன்ன சாலை தகுவித்துச் சாக மூல
பலங்களு மிலங்கப் பின்னாட் பரிந்தரு விருந்த ளித்தான்.

இ-ள்: பிரதட்சணமாக வந்து சென்று மேற்புறத்தில் திவ்விய பொய்கையில் மூழ்குவித்து, கிருபையின் மிகுதியினால் தம்மை ஆண்ட திருப்புலிச்சுரமுடைய தம்பிரானாரையும் வணங்குவித்து, அவ்விடத்தில் பொருந்தின பன்னசாலையில் கொண்டுபோய் அன்றுகழித்து மறுநாள் மிகுந்த பரிவுடனே சாகமூல பலாதிகளினாலே விருத்திட்டார் எ-று. (94)

மனக்களி கூரு நாளில் வனமதன் குடபால் தெய்வப்
புனற்றடங் கண்டு மூழ்கிப் புணர்குண கரைமேல் போற்றத்
தனக்குமோர் நாய னாரைத் தாபித்து வணங்கித் தங்க
அனித்தமில் சாலை வாவி யதன்வட பால மைத்தான்.

இ-ள்: இருவரும் அன்பினாலே களிகூர்ந்திருக்கும் நாளில் ஒருநாள் அந்தப் புலீசுரத்துக்கு மேற்புறத்தில் போய்த் திவ்வியமாக இருக்கிற ஒரு பொய்கையைக் கண்டு ஸ்நானம்செய்து அக்குளத்துக்குக் கீழ்கரையில் தாம் வழிபட, தமக்கும் ஒரு சிவலிங்கபெருமானைத் தாபித்துப் பூசித்திருக்க நித்தியமான சலிப்பில்லாத பன்னசாலையைக் குளத்துக்கு வடக்கே கட்டினார் பதஞ்சலிமாமுனி என்றவாறு. (95)

ஆங்கிட மாக நாளு மமர்ந்தனந் தீச்சு ரத்தும்
தீங்கில்வண் புலீச்சு ரத்துந் திகழ்சீர்மூ லத்தா னத்தும்
ஓங்கிய நாதன் பாத முறவுற வணங்கி யாடல்
ஈங்களித் தருளு கென்றங் கிருவரு மிருந்தா ரன்றே.

இ-ள்: அந்தப் பன்னசாலையே இருப்பிடமாகபொருந்தி நாள்தோறும் திருவனந்தேச்சுரத்திலும் குற்றம் இல்லாத வளப்பம் பொருந்திய திருப்புலிச்சுரத்திலும் விளங்கும் ஸ்ரீமூலத்தானத்தும் விளங்கிய தம்பிரானார் திருவடிகளைப்பற்றிப் பொருந்த அருச்சித்து வணங்கி ஆனந்ததிருத்தம் இவ்விடத்திலே தந்தருளும் என்று பூசாந்தத்திலே வேண்டிக்கொண்டு அந்தத் தலத்திலே இருவரும் தவசு பண்ணிக்கொண்டு இருந்தார்கள் என்றவாறு. (96)

**வெண்டிரை யொலியார் தில்லை மிகுவன விலங்கி யாவும்**
**பண்டைநம் புலிய னன்றிப் பாம்பனும் வந்தா னென்று**
**திண்டிறற் களநி மிர்த்துச் செவிளுஞ் சிலிர்த்தி யேங்கி**
**மண்டிய காலஞ் செல்ல மருங்குற வணைந்த வன்றே.**

இ-ள் : வெண்மையாகிய அலைகளையுடைய கடலோசை முழங்கும் தில்லைவனத்தில் நெருங்கின மிருகாதிகளெல்லாம், முன் நம்முடனே கூடித்திரிகிற புலியனுமன்றி இப்போது ஒரு பாம்பனும் வந்து இவனைக் கூடினான்; அஃது ஏதோ என்று பயப்பட்டுத் திண்ணிய திறலையுடைய கழுத்து உயர வெறித்துப்பார்த்துச் செவிகளும் சிலிர்த்துப் பார்த்துப் பயப்பட்டு அகலநின்று நெடுங்காலம் சென்று பழகினபின் முன்போலே கூடச் சஞ்சரித்தன என்றவாறு. (97)

**நாடொறு மமையந் தோறு நவநவ மாக வந்து**
**கூடின ரநேக ராகிக் குழகனை வழிபட் டேத்தித்**
**தாடலை யுறப்ப ணிந்தோர் தழைநிழற் சார்ந்தி ருந்தென் (பு)**
**ஊடுரு கிடுமா றண்ண லுரைத்தவா விரித்த வாயில்.**

இ-ள் : இருவினையொப்பும் சத்திநிபாதமும் உடைய ஆன்மாகள் நாள்தோறும் காலங்கள்தோறும் புதுமை புதுமையாக வந்து அனேகம்பேர் கூட்டமாகித் தம்பிரானாரை அருச்சித்துத் தோத்திரம் செய்து ஸ்ரீபாதம் சென்னியில் பொருந்த வணங்கி ஒரு குளிர்ந்த மரநிழலைப் பொருந்திருக்க என்பும் தசையும் நீராளமாம்படி தம்பிரானார் அருளிச்செய்த பிரகாரத்தைப் பதஞ்சலிமுனிவர் சொல்லிப் பாராட்டிக் கொண்டிருந்த அவதாரத்திலே என்றவாறு. (98)

**வந்தவர் சொல்லக் கேட்ட மன்றுள தென்ன வெல்லை**
**சிந்தையா லிறைஞ்சித் சென்று சிரமுறப் பணிந்து கூத்துப்**
**புந்தியால் வணங்கி மேனி புளகமும் பொலியப் போந்தங்(கு)**
**இந்தவா றெண்ணில் கால மிருவரு மேரு வித்தார்.**

இ-ள்: வந்த முனிவர்கள் ஒரு ஞானசபை இவ்விடத்தில் உண்டென்று சொல்லக் கேட்டு அந்த எல்லையைச் சித்தத்தினாலே நமஸ்கரித்து அவ்விடத்திலே போய்த் தலையால வணங்கி ஆனந்த திருத்தத்தையும் புந்தியினாலே வணங்கிப் பாவனாதரிசனத்தி னாலே தேகம் புளகத்துடனே பொலிய மீண்டும் இப்படியே அவ்விரண்டு பேருடனும் இருந்து எண்ணிறந்த காலத்தைப் போக்கினார்கள் என்றவாறு. (99)

## பதஞ்சலிச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 158.

நான்காவது

## நடராசச்சருக்கம்

**காலமு மநேகஞ் சென்று கழிந்தபின் கடவுள் கூறும்**
***சீ*லமார் சித்த யோகந் தெளிவுற நாடிச் சிந்தை**
**சாலவு மகிழ்ச்சி பொங்கத் தருக்குமிக் கிருக்கு மிக்குப்**
**பாலமு தனைய நாமம் பயில்வுமாய் முயலு நாளில்.**

இ-ள் : இப்படி அனேக காலம் சென்றபின் கடவுள் அருளிச்செய்த பரிசுத்தம் நிறைந்த சித்தயோகம் விளங்கக் கண்டு சித்தம் மிகவும் களிகூர, வளப்பம் மிகுந்திருக்கிற கரும்புரசம் பால் அமிர்தம் இவைகளை ஒத்த ஐந்தெழுத்தருள் நிலையிலே பொருந்தித் தவம் முயலுநாளில் என்றவாறு. (1)

**இங்கிவர் தம்பா லன்பா லிறைநடக் கருத்த ராய்முன்**
**தங்கிய வாறைஞ் ஞூறு தாபத ரணைய நீரிம்**
**மங்கல தினத்து வாழ வம்மினென் றுரைத்துத் தாமும்**
**பங்கமி லதுக ணத்திற் பன்முறை யெண்ணி யெண்ணி.**

இ-ள் : இவ்விடத்திருந்த இருடிகளெதிரே, அன்பினால் கடவுள்நிருத்தம் காணும் கருத்தினராய் முன்னே வந்திருந்த மூவாயிரம் பிரம இருடிகள் வந்து அணைய, நீங்களும் இந்த மங்கலமான சித்தயோகநாளில் இப்பெருவாழ்வுபெற வாருங்கள் என்று சொல்லி, தாமும் குறைவற்ற சித்தயோகத்தை ஒரு கணப்போதில் பலகால் அலகிட்டு எண்ணி எண்ணிப் பார்த்துப் பார்த்தது இருந்தார்கள் என்றவாறு. (2)

**கறவையான் வரவு பார்க்குங் கற்றின மெனவுங் கார்சேர்**
**உறையுண வுணர்ந்து நோக்கி யோய்ந்தபுள் ளெனவுமோங்**
**செறிமுகின் முழவு கேட்குந் திகழ்மயிற் றிரளும் போல [ கல்**
**இறையவ னடமே சிந்தித் திடைத்தினங் கடத்தி னார்கள்.**

இ-ள் : தாய்பசு எப்போது வருமோ என்று பார்த்து நிற்கும் கன்றுக்கூட்டம் போலவும், மேகத்தைப் பொருந்தும் மழைதுளியுணவைப் பார்த்து எப்போது மழை பெய்யும் என்று வாடியிருக்கும் சாதகப்புள்ளும் போலவும், முழவின் ஒலியை ஒத்த மலைத்தலையில் செறிந்த மேகத்தின் முழக்கம் கேட்க விரும்பும் விளங்கும் மயிற்கூட்டம் போலவும், தம்பிரானார் நடனத்தைச் சிந்தித்து நடுவுள்ள நாட்களைக் கழித்தார்கள் என்றவாறு. (3)

**வென்றிகொ ளந்நாள் முன்னாள் வெய்யவன் விரைந்து வெள்**
**குன்றினை நண்ணி யண்ணல் கூத்தயர் தரவ கன்றான் [ளிக்**
**என்றமை யறிந்தான் போலங் கிராவழி போந்து தில்லை**
**ஒன்றிய கடற்பாற் றோன்றி யெழுந்துவந் துச்சி யுற்றான்.**

இ-ள் : வெற்றிபொருந்திய எல்லா யோகங்களுக்கும் மேலான அந்த வியாழக்கிழமை பூசமான சித்த யோகத்துக்கு முன்னாள் ஆதித்தன் விரைந்து சென்று கைலாயத்தைப் பொருந்தித் தம்பிரானார் சிதம்பரத்திலே நிருத்தஞ்செய்ய எழுந்தருளுகிறார் என்கிற செய்தியை அறிந்தவனைப் போல, அங்குநின்றும் கடுக இராவழிபோந்து, தில்லைவனம் பொருந்தின கீழ்கடற்பால் தோன்றி ஆகாச மார்க்கமாக வந்து நடுப்பட்டான் என்றவாறு. (4)

**இரவியு முச்சி யெய்த விருகர முச்சி யெய்த**
**வருபவ ரெதிரோம் வந்தான் தேவர்கள் தேவன் வந்தான்**
**அரியயர் பெருமான் வந்தா னென்றெழு வதற்குப் பின்னே**
**பரவிய வொலியுங் கேளாப் பார்மிசைப் பதறி வீழ்ந்தார்.**

இ-ள் : ஆதித்தனும் ஆகாயத்தின் மத்தியில் வர இரண்டு கைகளும் உச்சியில் பொருந்தக் குவித்துவைத்துக் கொண்டு தற்காலத்திலே நிருத்ததரிசனம் பண்ணவரும் இருடிகளெதிரே ஓம் வந்தான், தேவர்கள்தேவன் வந்தான், இருவர் தேடுதற்காரியான் வந்தான் என்று தற்காலத்திலே சங்காதி வாத்தியங்கள் தொழிற்படுவதற்குப் பின்பாக * வீசீதரங்க நியாயமாகப் பரந்துவரும் ஒலி கேட்டு மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தார்கள் என்றவாறு. (5)

**ஆயிர மதியு தித்த வருவரை போல வேதம்**
**ஆயிரம் வகையா லோது மதுதகப் பானு கம்பர்**
**ஆயிர முகத்தி ரண்டா யிரங்கரத் தால ணைத்த**
**ஆயிரஞ் சங்கு மோமென் றறைந்தன தழங்க வங்கண்.**

---

* வீசீ தரங்க நியாயம் : ஒரு பெரிய அலைக்குப்பின் மறு அலைசிறிதாக வருதலாகிய நியாயம்.

இ-ள் ; ஆயிரம் சந்திரர்கள் உதித்த பெரிய மலைபோலவும், வேதம் ஆயிரம் முகமாகக் கோஷிக்கிறது போலவும், பானுகம்பர்என்கிற கணேசுவரர் ஆயிரமுகத்திலும் இரண்டாயிரம் கரங்களிலும் பொருந்தவைத்த ஆயிரம் சங்கும் எல்லாம் கேட்பப் பிரணவோச்சாரணம் பண்ணின அவ்விடத்து என்றவாறு.

மலை = பானுகம்பர் சரீரம் ; மதி = சங்கு ; வேதம் = ஓசை எனக் கொள்க. (6)

நடமுயல் விரகுந் தாள கதியுநல் லருளாற் பெற்ற
வடகுவ டனைய தோள்க ளாயிர முடைய வாணன்
சுடர்விடு கடகக் கையால் தொம்மெனப் பன்மு கத்த
குடமுழ வெழுமு ழக்கங் குரைகடன் முழக்கங் கொள்ள.

இ-ள் ; தாண்டவாதி பேதங்களும் நடனத்திலுண்டான விசாரங்களும் அனந்தமான தாள பேதங்களும் தாளத்தில் உண்டான வழிகளும் தம்பிரானாருடைய நல்ல அருளினாலே பெற்ற மேருவை ஒத்த தோள்கள் ஆயிரமுடைய வாணாசுரன் ஒளிவிடப்பட்ட கடகம் பொருந்தின கைகளினாலே முழக்க, தொம் என்கிற அனுகரண ஓசையோ டேகூடின பல முகத்தினையும் உடைய குடமுழாவிலே எழாநின்ற ஓசை ஆரவாரம் பொருந்தின எழுகடலின் முழக்கத்தையும் கவுளீகரித்துக் கொள்ள என்றவாறு.

தாண்டவாதி பேதங்கள், பரதநூலும் அந்த நூல் முற்றுணர்ந்தவர்களும் இன்மையின் விவரித்து எழுதாதுவிடப்பட்டன. (7)

ஐந்துதுந் துபியு மாசி லருமறை யொலியும் நீடு
* கந்தரு வங்கள் கூடுங் கானமுங் கடவுள் பாதத் (து)
அந்தமில் திருச்சி லம்பி னரவமுங் கேட்டா ரும்பர்
சிந்திய மந்தா ரத்தின் செழுமலர் தெரியக் கண்டார்.

இ-ள் ; தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, கண்டக்கருவி என்கிற பஞ்ச வாத்தியங்களும் குற்றமில்லாத வேதகோஷமும் பெரிய யாழிற்கூடம் கானமும் தம்பிரானார் ஸ்ரீபாதத்திலே ஒழிவில்லாத திருச்சிலம்பினது ஓசையும் கேட்டார்கள்; தேவர்களாலே வருஷிக்கப்பட்ட வளவிய மந்தாரத்தின் மலரைப் பூமயிலே தெரியக்கண்டார்கள் என்றவாறு. (8)

* 'கந்தரு வத்தர் கூடும்' எனவும் பாடம்.

**தாகத்திற் றண்ணீ ரோசை தகவொலி செவிம டுத்து**
**மோகித்தா ரெழுந்தா ராற்றார் முகமெலாங் கண்ணீர் வாரச்**
**சோகித்தார் தொழுதார் போற்றி துணைவனே போற்றிதோன்றா**
**ஆகத்தா யருளா யென்றென் றலறினார் வாய்க ளார.**

இ-ள் ; பாலைநிலத்தில் நடப்போர் தண்ணீர்த் தாகம் மேலிட்டு அருவியோசை கேட்டு அருந்தியும் தாகந்தணியாமல் வருந்துமவர் விடாய்த்து விழுந்ததுபோலத் தம்பிரானார் எழுந்தருளுகிற ஆர்ப்பரவம் கேட்டும் கட்புலன்பட நிருத்தங்காணாமல் மோகித்து விழுந்தார்கள்; பரவசமாக எழுந்திருந்தார்கள் ;பொறையாற்றார்கள்; முகமெலாம் கண்ணீர்வாரப் பொருமினார்கள்; உயிர்த்துணைவனே ! இரட்சி, தோன்றாத் திருமேனியுடையவனே ! அருள்வாயாக என்றென்று வாய்விட்டு அலறினர்கள் என்றவாறு. (9)

**எண்ணருங் காதல் கூரு மிருவருங் காண ஞானக்**
**கண்ணினை நல்க முன்னைக் காரிருள் கழிவுற் றின்ன**
**வண்ணமென் றறிய வாரா வளரொளி மன்றுள் மாதோ (ரு)**
**அண்ணனின் றாடுகின்ற வானந்த நிருத்தங் கண்டார்.**

இ-ள் ; எண்ணிறந்த பத்தி பொருந்தின வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் காண இவர்களுடைய பரமகுருவாய் ஸ்ரீகண்ட பரமேஸ்வரர் ஞானதிருட்டியை அனுக்கிரகிக்க அநாதியே சகசமான ஆணவத்தை நீக்கி இத்தன்மையது என்று அறியக்கூடாத மிகுந்த ஞானப்பிரகாசமான மன்றில் ஞானசத்தியை அதிட்டித்துத் தம்பிரானார் நிருத்தம் செய்யக் கண்டார்கள் என்றவாறு. (10)

**திருவடி நிலையும் வீசுஞ் செய்யகா லுஞ்சி லம்பும்**
**உருவள ரொளியும் வாய்ந்த வூருவு முடுத்த தோலும்**
**அரைதரு புரிவுங் கச்சி னணிகளு மழகா ருந்தி**
**மருவிய வுதர பந்தக் கோப்புநூல் வாய்ப்பு மார்பும்.**

இ-ள் : நின்றருளிய ஸ்ரீபாதமும், தூக்கியருளிய சிவந்த பாதமும், திருவடிகளில் சாத்தியருளிய திருச்சிலம்பும், திருமேனியில் மிகுந்த பிரகாசமும், அழகிய திருத்தொடையும், சாத்தியருளிய புலித்தோலாடையும், அது தரித்த அரையும், அவ்வரையில் சாத்தியருளிய கச்சினழகும், அழகு நிறைந்த திருவுந்தியிலே பொருந்தின உதரபந்தனச் சேவையும், திருயக்ஞோபவீதம் பொருந்தின திருமார்பும் என்றவாறு. (11)

**வீசிய செய்ய கையும் விடதரக் கரங்க வித்த**
**தேசும்வண் டுடியு மங்கிச் செறிவுமுன் திரண்ட தோளும்**
**காசுகொள் மிடறுந் தோடார் காதும்வெண் குழையுங் காண**
**மாசிலா மணிவாய் விட்டு வழங்கிடா நகைம யக்கும்.**

இ-ள் : வீசியருளிய சிவந்த கரமும், புயங்கம் பொருந்தின ஸ்ரீ யத்ததைக் கவித்தருளிய பிரகாசரும், பரநாதம் பொருந்தின வளவிய தமருகமும், தீயகலும்,முன்னை திரண்ட தோளும், நீல ஒளிபொருந்தின திருமிடறும், திருத்தோடும் வெள்ளிய சங்கக் குழையும் பொருந்தின திருச்செவியும், வெளிப்படக் குற்றமற்ற திருவாய்ப் பவளமும், நீக்கமறச்சிரித்தருளிய மோகனமும் என்றவாறு. (12)

**ஓங்கிய கமலச் செவ்வி யொளிமுக மலருங் கண்கள்**
**பூங்குழ லுமையை நோக்கும் புரணமும் புருவப் பொற்பும்**
**பாங்கமர் நுதலும் பின்தாழ் படர்சடைப் பரப்பும் பாம்பும்**
**நீங்கருத் தாரு நீரு நிலவுமே னிலவு நீறும்.**

இ-ள்: மேலான தாமரை மலரின் அழகு போன்ற திருமுகப்பிர சன்னமும், மலர் அணிந்த குழலியார் என்கிற உமையைப் பார்த்தருளு கிற திருநயனங்களின் கடாட்ச விளக்கமும், திருப்புருவத்தின் அழகும், அழகிய திருநெற்றியும், பின் தாழ்ந்து விரிந்த கற்றைச்சடையும், சர்ப்பமும், நீங்காத கொன்றை மாலையும், கங்கையும், சந்திரனும், திருமேனியில் பரம உத்தூளனமும் என்றவாறு. (13)

***கடிமல ரணைய வாரிக் காரிரு ளளகஞ் சேர்த்த**
**முடியுநன் னுதலும் பொட்டு முயங்கிரு புருவ வில்லும் (டைப்**
**வடிகொள்வேல் விழியுங் காதும் வளர்குமிழ் மலருந் தொண்**
**படிவா யிதழு முத்த நகையுமெய்ப் பசுமை வாய்ப்பும்.**

இ-ள்: இருண்ட மேகத்தை ஒத்த திருக்குழலிலே மணம் பொருந்திய மலர்கள் சேர்ந்துச் சொருகின திருமுடியும், நல்ல திருநெற்றியும், திலதமும், பொருந்தின இரண்டு வில்லை ஒத்த திருப்புருவமும், வடித்த வேல் போன்ற விழியும் திருக்காதும், விளங்கும் குமிழமலர்போன்ற திருமூக்கும், ஆதொண்டைக்கனி போலும் திருவாயிதழும், முத்துப்போலும் நகையும், பச்சென்ற திருமேனி அழகும் என்றவாறு. (14)

* 'கடிமல ரலைய' என்று பாடமாயின் கடிமலர் சரிய வாரி முடித்த என்றுரைக்க.

பூங்கமு கமர்க முத்திற் பொலிந்தமங் கலநாண் பொற்பும்
பாங்கம ரமையார் தோளும் பங்கயச் செங்கை தாங்கும்
ஓங்குசெய் கழுநீர்ச் செவ்வி யொளிதரு மலருத் தாரும்
கோங்கரும் பவைப ழித்த கொங்கையுங் குலவு பூணும்.

இ-ள்: கன்னிக்கமுகு போன்ற திருக்கழுத்தில் நித்தியமான பொலிவினையுடைய திருமங்கலநாண் அழகும், பக்கம் பொருந்தின மூங்கிலைப்பார்க்கிலும் அழகிய தோளும், கைத்தாமரையிலே ஏந்தும் மேலான அழகு விளங்கின செங்கழு நீர்ப்பூவும், கோங்கின் அரும்புகளை நிந்தித்த திருமுலைத் தளமும், ஒளி பொருந்தின திருவாபரணமும் எ-று. (15)

துடியம ரிடையும் பாந்தள் தொகுபணந் தகுதி தம்ப
உடையமர் துகிலு மல்க வொல்கிய நிலையுஞ் செய்ய
அடிமலர் மிசைய ணிந்த வாடகப் பாட கக்கீழ்
விடுசுடர்ச் சிலம்பும் வாய்ந்த மெல்லியல் வியந்து காண.

இ-ள்: துடியை ஒத்த திருமருங்கும், பெரும் பாம்புகளின் விரிந்த படம்கூடியது ஒத்த நிதம்பத்தலத்தில் சாத்தியருளிய பரிவட்டமும், மிகவும் அசைந்த நிலையும், சிவந்த ஸ்ரீபாதத்தில் சாத்தின பொற்பாடகத்தின் கீழ் ஒளிவிளங்கும் திருச்சிலம்பும் பொருந்தின பரமேசுவரி மிக அதிசயித்துக் கண்டருள என்றவாறு. (16)

ஆடிய பெருமான் வெய்யோ னலர்கதி ராயி ரத்துக்
கூடிய மண்ட லம்போல் குறைவிலா வகைநி றைந்து
நாடரு ஞான மன்றுள் நாமுய்ய வயன்மால் முன்பு
தேடரு மேனி கொண்டு திருநடஞ் செய்யக் கண்டார்.

இ-ள்: சத்தியே திருமேனியாக்கொண்டு சத்தி காண ஆடிய தம்பிரானார் ஆயிரம் ஆதித்தப் பிரகாசம் ஒன்றாகக் கூடின மண்டலம்போலக் குறைவற நிறைந்து நாடுதற்கரிய ஞானசபையில் நம்போல்வாரை இரட்சிக்கவேண்டி முன்பு பிரம விஷ்ணுக்கள் தேடக் காணாத சோதிசொருபத்தை அதிட்டித்து நிருத்தம்செய்தருளக் கண்டார்கள் எ-று. (17)

## வேறு

பொருவில் புயங்கப் புனித னடங்கட் புலன்மேவத்
தெரிபொழு தங்கத் தொருசெய லின்றிச் சிரமேவக்
கரமலர் நுந்தப் புனல்விழி கம்பித் துரைகாணா
இருவரு மின்பக் கடலு ளலைந்தா ரென்செய்தார்.

இ-ள்: ஒப்பு இல்லாத அலைவற்ற தாண்டவத்தைப் பொருந்தும் சுத்தனது நிருத்தம் கண்ணுக்குப் புலப்படத் தெரிந்த அளவில் அவயவத்தில் யாதொரு சேட்டையுமற்றுச் சிரத்திலே கைம்மலர் பொருந்த விழி நீர்த்தாரை கொள்ள நடுக்கமுற்று உரை குழறி வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் இன்பசாகரத்திலே மிதந்தனர்; இனி வேறே என்செய்வார் என்றவாறு. (18)

தற்பர மாகுத் தலைவன துண்மைத் தன்மைப்பொற்
சிற்பர மாமம் பரவொளி யுந்தன் திருமேனிப்
பொற்புட னாடும் பொலிவும் விழிக்குட் புணராதால்
அற்புத னேயிங் கார்கில மென்றென் றயர்கின்றார்.

இ-ள்: சுட்டுணர்வுக்கு அப்பாற்பட்ட முதல்வனது சத்தியமான சுபாவம் விளங்கின ஞானத்துக்கு மேலான சிதம்பரபிரகாசமும் தேவரீருடைய திருமேனியின் பிரகாசத்துடனே ஆடும் அந்தப் பிரகாசமும் பார்வைக்கு அடங்காத படியாலே ஆச்சரியமான திருமேனியை உடையவரே! சத்திநிபாதக் குறைவினாலே எங்கள் நினைவு முடிக்கப் பெறுகின்றோமில்லை என்றென்று வருந்துகின்றார்கள் எ-று.

'தன் திருமேனிப் பொற்பு' என்பதற்குத் தன்னுடைய திருமேனியிலே பொருந்தின பரமேசுவரி எனினும் அமையும். (19)

காரண னேமுன் காமனை வேவக் கண்வைத்த
பூரண னேநின் புகழ்நடம் யாரும் புணர்வெய்தப்
பாரிருள் மோகத் தீரருள் ஞானம் பணியென்றென்(று)
ஆரண மோதுஞ் சாகைக ளோரா யிரமாக.

இ-ள்: சர்வகாரணனே! முன்னாள் மதனன் வெந்து வீழத் தீக்கண்ணால் பார்த்தருளிய பரிபூரணனே! தேவரீருடைய புகழ்பொருந்திய நிருத்தம் எல்லாரும் காணக் கடாட்சிப்பீராக ; இருளையும் மயக்கத்தையும் நீக்கும்படியான உமது கிருபை பொருந்தின திருவடிஞானம் பணித்தருள்வீராக என்று வெகுவிதமாகச் சாகைகளகினாலே விண்ணப்பம் செய்தன *வேதங்கள் எ-று. (20)

---

* வேதங்கள் என்பது வேதபுருடர்களை.

ஒருவனை நேரே யிருவரு முன்னான் மறையஞ்சா(து)
இரவுறு மாறே லையமினி யெட்டும் படியின்பம்
தரைமுத லாறா றெனவரு நாதா தியின்மீதே
பரதப ராவா பரிபுர பாதா பணியென்றார்.

இ-ள்: ஒப்பில்லாத முதல்வனைச் சன்னிதிப்பட்டுநின்று விஷ்ணுவும் பிரமாவும் முன் நான்குவேதங்களும் தேசோருபத்துக்கு அஞ்சாமல் வேண்டிக்கொள்ளுகிற வழியை ஒன்றும் அறியாத யாங்களும் இன்பம் பெறும்படி பிருதிவி முதல் முப்பத்தாறு என்று சொல்லப்பட்டுவரும் பரநாதத்தின் மேலே நிருத்தம் செய்பவரே! பராபரப் பொருளானவரே! திருச்சிலம்பு அணிந்த ஸ்ரீபாதத்தை உடையவரே! பணித்தருள் வீராக என்றார் இந்திராதிகள் என்றவாறு. (21)

கரணம னைத்தும் புலனிவை காணா கைவிட்டான்
மரணமெ மக்கிங் கிதுதமி யோம்வாழ் வருள்மாறின்
திரணமு மெய்ச்சஞ் சலமில தென்றா லொன்றாநின்
புரணமே னக்கொண் டருளுக வென்றார் நின்றார்கள்.

இ-ள்: தத்துவங்களெல்லாம் கூடினாலும் விஷயங்களை அறியமாட்டா ; தத்துவங்கள் கூடாதபொழுது எங்களுக்குக் கேவலம் பொருந்தும்; இவ்விடத்து அருள் நீங்கித் தனித்த இடத்து எங்கள் வாழ்வு இது; தேவரீ அருளில்லா இடத்துத் துரும்பும் அசையாது என்று உண்மையாக வேதாமங்கள் ஒன்றாகச் சொல்லுதலாலே அவ்விடம் உம்முடைய பூரணம் ஒழியவில்லை. ஆதலால், எங்கள் சுதந்திரமான கேவலக் காணியையும் பூரணமான தேவரீருடைய சுதந்திர சத்தியையும் திருவுள்ளத்தில் கொண்டருளி எங்களையும் பிரேரிப்பித் தருள்வீராக என்றார்கள் அவ்விடத்து நின்ற இருடிகள் முதலானோர் எ-று. (22)

இவ்வகை யேநான் மறைமுத லேனோ ரிரவெய்தப்
பைவிர வாரப் பணியணி நாதன் பரிவாலிப்
பொய்விர வாமெய்ப் பொலிவினர் யாரும் புணர்வெய்தத்
திவ்விய மாமம் பரபத ஞானந் தெரிவித்தான்.

இ-ள்:இவ்வாறு வேதம் முதலான தேவர்களும் இருடிகள் முதலானோர் யாவரும் வேண்டிக்கொள்ள, படம் பொருந்திய சர்ப்பாபரணம் அணிந்த சிதம்பரநாதர், அநுக்கிரகத்தினாலே இப்படிச் சத்தியம் பொருந்தின திருமேனிப் பொலிவினையுடைய பக்குவராகிய வேத இருடிகள் முதலான யாவரும் பொருந்து தலுறத் திவ்வியமாயிருக்கிற பரமாகாசப் பத்தி ஞானத்தைத் தெரிவித்தார் என்றவாறு. (23)

**நாரணன் வேதா வாசவன் வானோர் நவைசேரா**
**ஆரண மேலோர் தாபதர் மூவா யிரவோர்நல்**
**சாரணர் தாவா நாரதர் பூதா திகளாசைக்**
**காரண ரேனோ ராடலை நேரே கண்டார்கள்.**

இ-ள்: அரி பிரம இந்திராதி தேவர்கள், குற்றமில்லாத வேதங்கள் முதலாக உயர்ந்தோராகச் சொல்லப்பட்ட பெரியோர்கள், மூவாயிரம் பிரம இருடிகள், நல்ல சாரணர், குற்றமில்லாத நாரதர், பூதகணமுதலானோர், திக்குப்பாலகர்கள், மற்றுமுண்டான இருடிகள் யாவரும் தம்பிரானார் நிருத்தத்தைப் பிரத்தியட்சமாகக் கண்டார்கள் என்றவாறு.

எண்ணரும் காதல்கூரும் என்கிற 10ஆவது திருவிருத்தம் துவக்கி நாரணன் வேதா என்கிற இத்திருவிருத்தம் அளவாகச் சொல்லியது ஏதென்னில் வியாக்கிரபாதர் பதஞ்சலிகளுக்குத் திரோதானத்தைநீக்கி ஆனந்த சுபாவநிருத்தத்தைத் தரிசிப்பித்ததும் அரி பிரம இந்திராதி தேவர்களுக்கும் வேதங்களுக்கும் ஆணவ அளவை விந்து அவத்தை நீக்கித் திரோதானத்தில் அருளானந்த நிருத்தம் தரிசிப்பித்ததும் மூவாயிரம் இருடியாதியானவர்களுக்குக் கலாபந்தம் நீக்கி வயிந்தவா னந்தம் தெரிசிப்பித்ததும் கண்டுகொள்க என்பதாம். (24)

**கண்டனர் கண்ணுக் கின்புற முன்னே கரமுச்சிக்**
**கொண்டன குள்ளக் கொள்கைத தும்பக் குளியாரப்**
**பண்டரு வேதப் பாடலொ டாடிப் பரபோகத்(து)**
**அண்டன தாமெய் கருணையி னூடுற் றலைகின்றார்.**

இ-ள்: கண்களுக்குச் சுகம்வரப் பிரத்தியட்சமாகக் கண்டனர்; கரங்கள் உச்சியிலே பொருந்தக் கொண்டார்கள் ; தங்கள் நினைவு நிரம்பிவழிகிறது போலக் கண்ணீரும் புளகமுமாகிய குறிகள் நிறைய, இசை பொருந்திய வேதகீதத்தோடு ஆனந்தக் கூத்தாடி, பரபோகம் தந்தருளும் தம்பிரானாருடைய காருண்ணியசாகரத்திலே மிதந்தார்கள் என்றவாறு. (25)

பரபத கங்கா தரவர விந்தா சனனுச்சிச்
சிரமரி கண்டா விருடரு கண்டா மிகுதெவ்வர்
புரமெரி கண்டா பவமிரி கண்டா வெனவோதிக்
கரமலர் சிந்தா வரகர வென்றார் கணநாதர்.

இ-ள்: மேலான பதமுள்ளவனே! கங்காதரனே! கமலாசனுடைய உச்சித்தலையை அரிந்து துண்டப்படுத்தினவனே! கறுப்பு நிறத்தைக் காட்டின கண்டத்தையுடையவனே! மிகுந்து மாறுபட்டோர் புரங்களை எரித்த வீரனே! சனனத்தைக் கொடுக்கிற ஞானக்கண்ணை எங்களுக்குத் தந்தருள்க என்று விண்ணப்பம்செய்து புட்பாஞ்சாலி பண்ணி அரகர என்றார் கணநாதர்கள் என்றவாறு. (26)

ஆடினரெந்தா யாகம சிந்தா மணியேயென்(று)
ஓடினர் நின்ற ரோகைம விந்தா ரொளிர்கண்ணீர்
வீடினர் குன்றமூடிய வெந்தீ வினைதீரத்
தேடும ருந்தே தாவரு ளென்றார் சிலதேவர்.

இ-ள்: பரவசராய் நின்று கூத்தாடினர்; எந்தையே! ஆகமத்துச் சிந்தாமணியே! என்று ஓடினர்; பரவசராய் நின்றனர்; அதிப்பிரியப்பட்டார் கள்; வெளிப்பட்ட ஒளிபொருந்தின கண்ணீர்த்தாரை கொண்டனர்; மலைபோன்று எங்களை மேலிட்ட கொடிய தீவினை தீர யாவரும் தேடும் மருந்தே! அருளைத் தருவாயாக என்றனர் சில தேவர்கள் எ-று. (27)

மாலயன் மேலா வாசவ னேசா மதியேசெங்
கோலநி லாவா பாலன நீறா கோவேதிண்
காலனி லாவா காதிய காலா கதியேவண்
பாலநி லாவா காவென நேரே பணிவுற்றார்.

இ-ள்: அரி பிரமர்களுக்கும் மேலானவனே! இந்திரனுக்கு சினேகிதனே! சர்வான்மாக்களுக்கும் அறிவே! செவ்வண்ண விளக்கம் உடையவனே! பாலொத்த வெண்ணீற்றனே! கோவே! திண்ணிய காலன் இல்லையாகும் படி காய்த்தருளிய ஸ்ரீபாதனே! சமயிகளெல்லாரும் அறுதியிட்டுச் சொல்லும் வழியே! வளவிய பாலசந்திரசேகரனே! சமுசார பந்தத்தில் நாங்களழுந்தாமல் இரட்சி என்று சன்னிதியிலே பணிந்தார் கள் என்றவாறு. (28)

திகழ்தரு செம்புன் தலைதிரி முண்டஞ் சேர்சங்கத்
தகுகுழை நுண்கண் சிறுநகை தந்தந் தாழ்பண்டி
பகுசக னந்தின் தொகுசர ணந்தண் பார்தங்கப்
புகழ்கர ணங்கொண் டயர்வவ னந்தம் பூதங்கள்.

இ-ள்: விளங்குகின்ற செங்குஞ்சித்தலை, நெற்றியிலே திரிபுண்டரம், சங்கக்குழை பொருந்தின காதுகள், சிறிய கண்கள், புன்னகையுடைய பற்கள், தாழ்ந்த வயிறு, இரண்டு பிரிவாகிய பிருஷ் பாகம் என்னும் இவைகளையுடைய பூதங்கள்; பலம்பொருந்திய கால்கள் பூமியில்பொருந்த *உற்புலித கரணங்கொண்டு ஆடுவன என்றவாறு. (29)

மலரெரி முச்சிக் குழிவிழி யொட்டற் கவுள்வாய்விட்(டு)
இலகெயி றொட்டைக் களமிருநெட்டைக் கரமீரல்
உலருத ரஞ்சிற் றரையுயர் தெற்றற் பதமோடும்
பலவல கைக்கொத் திடுகுண லைக்கொத் தினபாணி.

இ-ள்: எரிபோல் விரிந்த மயிரையுடைய பெருந்தலையும், குழிந்த கண்களும், ஒட்டிய கன்னமும், வாய்க்கு வெளியில் புறப்பட்ட பற்களும், ஒட்டையின் கழுத்துப்போன்ற கழுத்தும், நீண்ட இரண்டுகைக ளும், ஈரலுலர்ந்த வயிறும், சிறிய அரையும் உடையவனாய் உயர்ந்த தெற்றுதல் பொருந்திய முட்டிக்காலுடனே பலபேய்கள் குனித்திடும் குணலைக் கூத்துக்குச் சரியாகக் கைகளைக் கொட்டின எ-று. (30)

தோடிறை யேவாய் வீடல ரூடார் சுரிகூழைப்
பாடளி யாழோ டேழிசை கோடா வகைபாடத்
தாடகு மாடார் நூபுரம் வீடா வொலிசார்வித்(து)
ஆடினர் பாடா வாடினர் பீடா ரரமாதர்.

இ-ள்:இதழ் சற்றே நீங்கின புட்பங்கள் நிறைய உள்ளே வைத்துச் சொருகின கொண்டைப்புறத்திலே வண்டுகள் யாழோடுகூடச் சத்தசுரமும் மயங்காமல் பாட, தாளுக்குத் தகுதியாகக் கால்வடிம்பிற் பொருந்தின பொற்சிலம்போசையைக் கூட்டி ஆடினார் ; பாடாமல் மயங்கினார் பெருமையுடைய தேவஸ்திரீகள் என்றவாறு. (31)

அண்டர்கள் மிண்டப் பண்டேழு நஞ்சுண் டமுதீயும்
கண்டன கண்டப் பண்டைந டங்கண் குளிர்வித்துக்
குண்டிகை கொண்டைத் தண்டொடு மண்டிக் குலைவேணி
முண்டமி லங்கக் கொண்டயர் கின்றார் முதுவோர்கள்.

* உத்புலிதம் என்பது கூத்தின் விகற்பம்.

இ-ள் : தேவர்கள் விஷவேகத்தைச் சகிக்கமாட்டாமல் திரண்டுவந்து விண்ணப்பம் செய்ய, பண்டு சமுத்திரத்திலே தோன்றிய நஞ்சை அமுதுசெய்து அவர்களுக்கு அமிர்தத்தை ஈந்தருளும் நீலகண்டனது அகண்ட பரிபூரணமான அநாதி நிருத்தத்தாலே கண்களைக் குளிர்வித்து, கமண்டலம் சோமன் கட்டின தண்டுகள் ஒன்றுக்கு ஒன்று நெருங்கிச் சடையவிழத் திரிபுண்டரம் விளங்க வெகுவிதமாக ஆடினார் பழைய மூவாயிர முனிவர்கள் என்றவாறு. (32)

**வீரத ராவான் மேருக ராகான் விரிகொன்றைத்**
**தாரவ ராவா காவென நேரே தகவாரா**
**நாரத ரேரார் சாரண ரேனோர் நசையாழின்**
**பாரக ராரா வார்வமொ டாடும் பணியுற்றர்.**

இ-ள் : வெற்றியை உடையவனே ! பெரிய மகாமேருவை வில்லாகக் கைக்கொண்டவனே ! வாசனை மிகுந்த கொன்றைமலை அணிந்த பரமசிவமே ! நாகத்தை ஆபரணமாக உடையவனே ! எங்களை இரட்சி என்று சன்னிதியிலே முறைப்படி வந்து தும்புரு நாரதர்களும் அழகு பொருந்திய தேவதூதர்களும் மற்றைத் தேவர்களும் காந்தர்வ வேதபாரகராகிய வித்தியாதரர் முதலானவர்களும் நீங்காத ஆசையோடு ஆடுந் தொழிலைப் பொருந்தினர்கள் என்றவாறு. (33)

**குடமுழ வங்கொக் கரைபொரு தாளங் குழல்வீணை**
**படகநெ டுங்கத் திரிகைத டாரி பணிலங்கள்**
**முடிகர டஞ்சச் சரிபல கொண்டோர் தொகவாரா**
**நெடுமுகி லஞ்சக் கடலொலி யெஞ்ச நிகழ்வித்தார்.**

இ-ள் : பிரதான வாத்தியமான குடமுழாக்கள் கொக்கரை என்கிற வாத்தியங்களுக்கும் சுருதியான தாளம் வேய்ங்குழல்கள் வீணைகள் தம்பட்டம் பெரிய கத்திரிகை பம்பை தவளச்சங்கங்கள் தமருகம் கரடிகை சச்சரி முதலான வாத்தியங்களைக் கைகொண்ட மேளத்தோர்கள் கூடிவந்து மேகங்கள் திடுக்கிடவும் சமுத்திர ஒலி குறையவும் முழக்குவித்தார்கள் என்றவாறு. (34)

**பரிவுட னாடுந் தொழிலின ராய்முன் பலர்வாழத்**
**தெரிவுற நீடும் புலிமுனி யோனுந் திகழ்வெய்தும்**
**அரவர சோனும் பரவச ராய்நின் றழநேரே**
**வரமெனவ கூறுந் தரவென நாதன் மகிழ்வுற்றான்.**

இ-ள் : அன்புடன் கூத்தாடும் தொழிலையுடையராய்ச் சன்னிதியிலே பொருந்தினோர் யாவரும் பெருவாழ்வு பெற்று வாழ உண்மையைத் தரிசித்துச் சுபாவகுணத்தில் அழுந்தின வியாக்கிரபாதரும் அந்த நிலையைப் பொருந்தின பதஞ்சலியும் பரவசராய் நின்று அழ, அங்ஙனம் சன்னிதியிலே நின்று அழும் வியாக்கிரபாதரையும் பதஞ்சலியையும் பார்த்தருளி நாம் கொடுக்க உங்களுக்கு வேண்டிய வரங்களைக் கேளுங்கள் என்று மகிழ்ந்து திருவாய்மலர்ந்தருளினார் எ-று. (35)

**அண்டர்பி ரான்முன் புண்டரி கத்தாள் முனியன்பில்**
**கண்துளி சோரக் கைதொழு துள்ளங் கசிவெய்திப்**
*** பண்டுனை நாளுங் கண்டிடு மாறென் பயில்பூசை**
**கொண்டருள் வேறிங் குண்டில வேதுங் கொளவென்றான்.**

இ-ள் : தேவதேவன் திருமுன்பு வியாக்கிரபாதர் அன்பினலே ஆனந்தபாஷ்பம்பெருக நின்று கைகூப்பித் தொழுது மனமுருகி, முன்போலத் தேவரீரை நாள்தோறும் கிரியா விதிப்படி யான் பண்ணுகிற பூசையை உண்மையாகக் கைக் கொண்டருள வேண்டும் ; இதுவே அன்றிப் பெறவேண்டிய குறை வேறெறும் இல்லை என்றர் என்றவாறு. (36)

**ஆடுக வென்றங் காடும ரன்சீ ரருள்செய்யக்**
**கூடும னந்தன் கூடும னந்தங் கொடுவெம்மை**
**நீடுக னந்தங் கேத நினைந்தோ நிலன்மேவும்**
**சேடர்கள் துன்பந் தீரநி னைந்தோ தெரியாது.**

இ-ள் : வேண்டும் வரத்தை உரையாடுங்கள் என்று அவ்விடத்தில் நிருத்தஞ்செய்யும் பரமேசுரர் அருளிச்செய்ய, அன்பு பொருந்திய பதஞ்சலி தன்னைக் கூடும் முடிவில்லாத கொடிய தீவினையில் நீட்டிக்கும் மனதில் தங்கும் எதுக்களாகிய துக்க வாதனையாலே இன்னம் மனத்தை வந்து பொருந்துமோ என்று எண்ணியோ தெரியாது;பூலோகத்தைப் பொருந்தும் சேஷமாயுள்ள ஆன்மாக்கள் பிறவித்துன்பந்தீர என்று எண்ணியோ தெரியாது என்றவாறு. (37)

---

* 'பண்டுடனளும்' எனவும் பாடம்.

தெற்குக்கைலாச பாரிசத்தில் தவம் முயலும்பொழுது பரமசிவம் சாநித்தியஞ்செய்து பிரமாவாக வெளிப்பட்டு இவர் வாய்மைகளைச் சோதித்துப் பின்பு தற்சொரூபமானபொழுது 'வேண்டியது என்ன' என, தாருகாவனத்தில் செய்த நிருத்தத்தைத் தரிசிக்கவேண்டும் என்று சொல்ல, 'இது இடம் அன்று; அங்கு சிதம்பரத்தில் காணக்காட்டுதும்' என்றருளிச் செய்ய, அவ்வண்ணம் அந்த அனந்தர் தன்னைப் பொருந்தும் அந்தமில்லாத கொடுமையுடைய தீவினையில் தங்கும் மனதுக்குத் தம்மிடத்தில் தங்கும் ஏதுக்களாகிய சுக துக்க வாதனையிற்பட்டு மறைப்பு வருமென நினைந்தோ எனினும் அமையும். பூமியிற்பொருந்தும் புண்ணிய பாவ சேஷமாயுள்ளவர் சேஷர்களென வடமொழித்திரிபு. இது என் சொல்லியவாறோ எனின், தனது சஞ்சித பிராரத்துவ ஆகாமியத்தால் பிறவிவருமென நினைந்தோ பூலோகத்துப் பொருந்தும் சேஷமாயுள்ள புண்ணிய பாவமுடைய ஆன்மாக்கள் பிறவித்துன்பம் தீர நினைந்தோ இப்படி நிருத்தம் அனவரதம் செய்ய என்றது தெரியாது. எனவே இரண்டும் வேண்டி என்பது பொருந்தும்.

**சென்றுவ ணங்கித் திகழும னந்தத் திறலோனும்**
**மின்திகழ் வாழ்வோர் விழிபுணர் காலந் தொறுமன்றம்**
**துன்றிய ஞானச் சோதியுள் நேசத் துணையோடும்**
**என்றுந டந்தந் தருளவி ரங்கா யினியென்றான்.**

இ-ள் : வந்து வணங்கி விளங்கும் அனந்தனாகிய வெற்றி உடையோனும், மின்போல விளங்கப்பட்ட உடம்பில் வாழும் ஆன்மாக்கள் வெளியாரக் காணும் அக்காலந்தோறும் அம்பலத்தில் பூரணமாய் நிறைந்த ஞானப்பிரகாசத்துள் காதலையுடைய துணையாகிய பராசத்தியுடனே கூட இனி இன்று முதல் என்றும் நிருத்தத்தைப் புலப்படுத்தி அருள்வீராக என்றான் என்றவாறு. (38)

**தேவர்கள் தேவன் திருவரு ளங்கப் படிசெய்ய**
**மேவிய போதங் கிருவரு மிக்கா டினர்மிக்கோர்**
*** ஆவென் வேழெண் கடலொலி போல்வைத் தலைவுற்றார்**
**பூவல யம்பூ மலைதக வானோர் பொழிவுற்றார்.**

---

* ஆ : அதிசய இரக்கச்சொல்.

இ-ள் : தேவர்களுக்குத் தேவன் அவ்விடத்து அப்படித் திருவருள் செய்யப் பொருந்தினபோது வியாக்கிரபாதரும் பதஞ்சலியுமாக இருவரும் ஆனந்தக்களிப்பு மேலிட்டு ஆடினர்; மற்றுமுள்ள தேவர்கள் இருடிகள் முதலாயினோர் ஏழென்று எண்ணப்பட்ட கடலோசைபோல ஆரவாரித்துச் சிரசின்மேல் கைவைத்துச் சுழலலுற்றனர்; பூமிவட்டத்தில் புஷ்பங்கள் மலைக்கு ஒப்பாக நிறையும்படி தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தனர் என்றவாறு. (39)

**எங்குமு ழங்கத் துந்துபி சங்கத் தொலிநீடச்**
**சங்கையி லின்புற் றும்பர்க ளேனோர் தாம்வாழப்**
**பங்கமி லின்பத் தோருப தேசம் பரிவான்மிக் (கு)**
**அங்கவர் தங்கட் கெங்கள் பிரானா ரருள்செய்வார்.**

இ-ள் : திக்குகளெங்கும் துந்துபி முழங்கச் சங்கங்களின் ஓசை பெருக, மயக்கமின்றிப் பேரின்பத்தமுந்தித் தேவர்கள் இருடிகள் முதலானோர் வாழ பங்கமில்லாத இன்பம் மிகுந்த ஒப்பற்ற உபதேசம் அன்புடையார் தங்களுக்கு எம்மை. அடிமையாக உடைய தம்பிரானார் அருளிச்செய்வார் எ-று. (40)

**ஞானந மக்குத் திகழ்விட நம்மில் பிறிவின்றென் (று)**
**ஆனது சித்துச் சத்தமர் ஞாலத் தகலாது**
**தானுட லுட்பட் டிடுமுயி ரிற்றங் குதல்போல்வோம்**
**வானவர் சுற்றிக் கோலுமி னென்றன் மன்றாடி.**

இ-ள் : நமக்கு ஞானமானது விளங்கப்பட்ட அதிட்டானம், நம்மிடத்தில் பிரிவின்றி ஒன்றனது சித்தாகிய ஞேயம் சத்தாகியஞானம், அமரப்பட்ட இப்பூமியைவிட்டு அகலாதது எப்படி என்னில், உடலில் உட்பட்டிருக்கும் உயிரினைப்போல அந்த ஞானத்திற்கு ஞேயமாகிய உயிராய்த் தங்குதல் செய்வோம்; ஆகையால் தேவர்களே! இந்த இடத்தைச் சுற்றி அம்பலமாகக் கோலுமின் என்றார் அம்பலத்தாடினர் எ-று.

**தொன்மைய ஞானம் பெற்றது சுற்றும் பொருளாய்வான்**
**முன்மலர் தூவித் தொழுநட ராசன் முதுநூலில்**
**சின்மய மாமன் றிரண்மய மொன்றுண் டதுசேரப்**
**பொன்மய மாகும் புவியினர் காணும் பொழுதென்றான்.**

இ-ள் : பழமையுடைய ஞானமாகிய சிதம்பரத்தில் அத்தன்மையைத் தம்பிரானார் அருளினாலே சுட்டி அறிவு பெற்ற தலத்தை யாவருக்கும் திரவியம் ஏதாம் என்று ஆராய்வான் காணமாகித் தேவர்களெல்லாம் சன்னிதிமுன் புஷ்பாஞ்சலி பண்ணி நமஸ்காரம் செய்ய நடேசர் சொல்வார் : வேதத்தில் ஞானமயமாய் இம்மன்றினுக்கு இரண்மயகோசம் என்று ஒரு பெயர் உண்டு ; அது விசுவத்தில் உள்ளவர் கண்டித்துக் காணும்பொழுது அடங்கப் பொன்னின் சொரூபமாகும் என்றார் என்றவாறு. (42)

**என்றரு ளுஞ்சீ ரருடலை மேல்கொண் டிமையோர்பொன்**
**சென்றழல் தங்கித் தேசுட னோடிச் செலவற்று**
**நின்றுது கொண்டங் கருள்படி மாவா நிகழ்வித்தார்**
**மன்றகு மென்றங் கதுபடி மாவா மலிவித்தார்.**

இ-ள்: என்றருளிச் செய்யும் திருவருளைத் தேவர்கள் தலைமேற்கொண்டு கனகம் அழலிற்சென்றுதங்கிக் களங்கமற்றுத் தன்னுடைய ஒளியுடன் கூடி ஓட்டற்றுகின்ற பொன் கொண்டு தம்பிரானார் அவ்விடத்து அருளியபடியே பெரிதாக அம்பலத்தைச் செய்வித்தார்கள்; அதற்கு நம் மன்னராகிய சிதம்பரேசுரர் பொன்னம்பலமாகத் தகும் என்று அவ்விடத்துச் சொன்னபடி மறைவாக நாமம் பொன்னம்பலம் என்று எல்லோரையும் சொல்வித்தார் என்றவாறு. (43)

**பொன்னச லஞ்சேர் பொருளள முய்க்கும் புற்போல்முன்**
**பன்னரு ஞேயப் பரபத ஞானத் தருபான்மைச்**
**சின்னிலை மன்றந் தேவர்கள் செய்யுந் திருமன்றம்**
**தன்னையு மன்றே செய்தது ஞானந் தானாக.**

இ-ள் : பொன்னாகிய மகாமேரு பருவதத்தைச் சேர்ந்த பொருள் பொன்னானாற்போலவும், அளத்தில் போடும் புல் உப்பனாற்போலவும் முன் சொல்லுதற்கு அருமையுடைய ஞேயாதிட்டமான பரபதம் என்னும் ஞானநிட்டையைத் தரும் முறைமையையுடைய ஞானநிலையாகிய மன்றம் தேவர்களால் செய்யப்படும் அழகிய கனகசபையையும் அப்போதே ஞானத்தானாகச் செய்தது என்றவாறு. (44)

**அன்றுதொ டங்கித் தேவர்க ளுஞ்சீ ரவோனும்**
**துன்றுபு லிக்கால் முனிமுத லாகுந் தூயோரும்**
**சென்றுவ ணங்கித் திசைதொறும் வாழத் திருவாளன்**
**மன்றின டந்தந் தென்றும கிழ்ந்தான் மாதோடும்.**

இ-ள்: அன்று தொட்டு அரிபிரம இந்திராதி தேவர்களும் சிறப்புடைய பதஞ்சலிபகவானும் திடசித்தமுடைய புலிக்கால்முனிவர் முதலாகும் சுத்த இருடிகளும் திசைகளில் உள்ளவர்களும் வந்து வணங்கி முத்தியில் வாழ்வதாக மகதைசுவரியமுடைய பரமேசுவரன் பொன்னம்பலத்தில் எப்போதும் நடனம் செய்து பராசத்தியோடு மகிழ்ந்தருளினார் என்றாவறு. (45)

**கரவி னிருத்தம் புரியவி ருத்தங் கழிகானின்**
**மிருகம னைத்தும் பறவைகள் முற்று மிகுநாதப்**
**பரிபுர சத்தம் பருகிம தித்தம் பிகைபாதம்**
**மருவி நிரக்கம் பெருகி யிரக்க மலிவுற்ற.**

இ-ள்: மறைப்பில்லாத நிருத்தத்தை ஈசுவரன் செய்ய மாறுபாடு நீங்கிய காட்டில் வாழும் மிருங்கள் அனைத்தும் பறவைகள் அனைத்தும் நாதம் மிகுந்த திருச்சிலம்பினது சத்தத்தைச் செவியாரப் பருகிச் சத்திநிபாதம் பொருந்தி அருளைக் குறித்துக் கண்ணீர் பெருகிச் சிவஞானத்தில் பொருந்தி வாழ்ந்தன என்றாவறு.

நீரக்கம் எனற்பாலது விகாரவகையால் 'நிரக்கம்' எனக் குறுகிநின்றது (46)

**அரவர சன்சொல் தகவர முன்பெற் றனனாகக்**
**கரவில்க ணங்கட் புனன்மிக நுந்தக் கரநாலும்**
**திரிநய னம்பொற் சுரிகை பி ரம்பொப் பருசெம்மை**
**மருவிய நந்தித் தலைவனை வந்தித் தெதிர்நின்றார்.**

இ-ள்: பணிக்கரசனாகிய பதஞ்சலி முன்பு வேண்டிக் கொண்ட சொற்படியே திருவுள்ளம் வாழ்ந்தருளி அனவரத தாண்டவஞ்செய்ய வரங்கொடுத்தருளப் பெற்றனனாகக்கண்டு அசத்தியம் இல்லாத கணநாதர்கள் கண்ணீர் மிகத்ததும்ப நான்கு திருக்கரங்களும் திரிநயனமும் பொற்சுரிகையும் பிரம்பும் ஒப்பில்லாத செம்மையாகிய சாரூபமும் பொருந்திய நந்திகேசுராரகிய தலைவரை வணங்கி எதிர்நின்றார்கள் என்றவாறு. (47)

**பன்னுக ணத்தோர் தலைவன் வருத்தம் பாராதே**
**நின்னில யத்திந் நிலைதக நாளுந் நில்லென்றாற்(கு)**
**என்னையு மைக்கோ மிதுபிணி கைக்கு மெனிலெய்த்தோர்**
**தன்னைந ருக்கிச் சாறுகொள் வானுந் தகுமென்றார்.**

இ-ள்: இப்படிச் சொல்லப்படாநின்ற கணங்கள் நாயகனுடைய திருமேனிவருத்தத்தை விசாரியாதே நின்னுடைய ஆனந்தநிருத்தமாகிய புயங்கத்தின் நிலைபொருந்த அனவரதமும் நில் என்று வரம் பெற்றுக்கொண்டவர்களைக் குறித்து நாம் என்ன சொல்வோம் ; இந்த மருந்து பிணியை ஓட்டும் எனில், நோயினால் இளைத்தோர் அந்த மருந்தினை வேருடன் பிடுங்கி நறுக்கி அதன் சாற்றைப் பிழிந்துகொள்ளுதல்போல் என்றார்கள் என்றவாறு. (48)

**தாணுவை முன்னர்ச் சாருநர் கண்ணிற் றகநட்டம்**
**பேணுவ தாகப் பெருகு வரம்பெற் றனரென்றால்**
**ஆணையெ னாமென் றாரறி வார்நா மினியன்பிற்**
**காணுநர் காணுங் காலம் வகுத்தல் கடனென்று.**

இ-ள் : சிதம்பரேசுரர் சன்னிதிமுன் வந்தவர் கட்புலனுக்குக் காண அனவரத நிருத்தத்தைத் தொழுவதாகப் பெருத்த வரம் பதஞ்சலிமுனிவர் பெற்றனரென்றால், திவ்விய ஆக்கினை ஏதாம் என்று யாவர் அறிவார்; அன்பினால் தரிசிப் பார்க்குத் தரிசிக்குங்காலம் கற்பித்தல் நமக்கு இனிக் கடன் என்று குறித்து என்றவாறு. (49)

**அங்கக முற்றுந் தங்கிளர் காவ லயற்காவல்**
**எங்கணு மொய்க்கும் பாரிட மும்பரி டைக்காவல்**
**பொங்குசி னத்திண் கூளிகள் காளிபு றக்காவல்**
**தங்கிவ ருக்கந் தம்மினெ ருக்கந் தகுவித்து.**

இ-ள் : காலம் வகுக்கில் காவல் முதல்வேண்டுமா தலின் அவ்விடத்தில் கர்ப்பக்கிருகம் முழுவதும் அனந்தாதிகளாகிய தாங்களே காவலாகவும், அதற்கு அயலான இரண்டாம் இடம் எங்கணும் நிறையும் பூதாதிகள் காவலாகவும், அதற்கு மூன்றாவதாகிய இடையில் இந்திராதிகளாகிய தேவர்கள் காவலாகவும், அதற்கு நாலாவதாகிய புறத்தில் மிகுந்த சினத்தினையுடைய வலியபேய்களும் காளிகளும் காவலாகவும் இப்படி இருக்கும் தங்கள் வருக்கத்தில் நெருக்கமாக இருக்கக் கற்பித்து என்றவாறு. (50)

காலையு முச்சிக் காலமும் வானோ ரேனோர்சீர்
மாலையின் மைக்கட் பூவையர் தாமே வளர்கங்குல்
ஞாலந ரர்க்கெக் காலமும் யாரு நணுகாத
வேலைக ளத்தற் கிச்சையி ருப்பா மிகுவித்தார்.

இ-ள் : விடியற்காலமும் மத்தியானகாலமும் தேவர்களும் இருடிகளும், சிறப்புடைய சாயங்காலத்தில் மைக்கண்ணுடைய தேவமாதரும், இருள் வளராநின்ற இராத்திரி காலம் கணநாதரும், பூலோகத்து மானிடருக்கு முன் சொன்ன நான்கு காலமும் தரிசிக்கவும், எவரும் வாராத காலங்கள் தம்பிரானார்க்கு இச்சையில் இருப்பாகவும் கற்பித்தார் என்றவாறு. (51)

நிலையமி தற்கிங் கிதுநிலை யென்றான் மன்றேறி
அலைவற நிற்கும் படியுமு வந்தா னென்றான்முன்
கலைஞரு ரைக்கும் பொருளள வன்றோ வந்தோவித்
தலைவன்மு யக்கஞ் சகலம யக்கந் தானாமால்.

இ-ள் : தமது நிருத்தத்திற்குச் சுழுமுனா ஸ்தானமான சிதம்பரமே இடம் என்றார்; அன்றியும் பொன்னம்பலத்தில் அனவரதமும் அசைவற நிற்கும்படி மகிழ்ந்தார் என்றால் அநாதியே வேதாகமங்களின்வழியே யாகாதிகள் முதலானவற்றில் வல்ல கலைஞானிகள் உரைக்கும் பொருள் அதற்கு அளவன்று ஆதலால் இந்தத் தம்பிரானார் திருவுள்ளப்பாங்கு சகலர்க்கும் மயக்கமாம் என்றவாறு. (52)

பூவமர் வோனும் பொருகட லோனும் புத்தேளும்
தேவர்கள் கோனுந் திருமுனி தானுந் திகழ்நாகர்
காவல னேயிக் கருணை நடங்காண் வரவைத்தாய்க்(கு)
ஏவல்செய் வோமற் றென்செய வல்லோ மென்றார்கள்.

இ-ள்: பூவிலிருப்போனாகிய பிரமனும் அலைபொருதும் கடலுலையோனாகிய விஷ்ணுவும் தேவர்களும் தேவர்கட்கு அரசனாகிய இந்திரனும் அழகிய முனியாகிய வியாக்கிரபாதரும், விளங்கப்பட்ட நாகராசனாகிய பதஞ்சலிபகவானே! இந்தக் காருண்ணியநிருத்தம் சர்வான்மாக்களுக்கும் காட்சி பெறக் கற்பித்தாய்; உமக்கு நாங்கள் ஏவல் செய்வோம் அல்லது வேறு என் செயக்கடவோம் என்றார்கள் எ-று. (53)

இப்பரி சாமிங் கிவரொடு பூதம் பேய்காளி
முப்புரி நூலோர் பூமகள் விண்ணோர் முதலாகத்
தப்பரு மெல்லைக் குட்சிவ லிங்கந் தாபித்துத்
துப்புறழ் மேனிச் சோதியை நாளுந் தொழுநாளில்.

இ-ள்: இப்பரிசாகிய வியாக்கிரபாதமாமுனி, பதஞ்சலி முனி, அரி பிரமேந்திராதிகளுடனே பூதம்,பேய், காளி, தில்லைமூவாயிரவர், இலக்குமி,தேவர் முதலானோர் முத்திவழுவாத சிதம்பரத் தலத்தின் எல்லைக்குள்ளே சிவலிங்க ஸ்தாபனம் செய்து செம்பவளக்குன்றை ஒத்த திருமேனியையுடைய தம்பிரானாரை நாள்தோறும் பூசித்துத் தோத்திரஞ் செய்துக் கொண்டிருக்குங்காலத்தில் என்றவாறு. (54)

வீசிய கங்கைக் கங்கைவி டாவந் தரவேதித்
தேசமி லங்கத் திசைமுகன் யாகஞ் செய்தற்குப்
பூசைவ ழங்கிப் புவியுழு தப்புப் பூரித்துற்(று)
ஆசறு துங்கச் சாலைக ளின்பந் தமைவித்து.

இ-ள்: திரை வீசிய கங்கைக்கரை நீங்காத அந்தர் வேதிப் பிரதேசம் விளங்கப் பிரமா யாகஞ்செய்யக்கருதி அந்த இடத்தில் இந்திரன் முதலாயுள்ள தேவதைகளுக்குப் பூசை பண்ணி, பூமியை உழுது தண்ணீர் நிறையக் கட்டி ஒருப்பட்டு வீதிமுறையில் குற்றமற்ற பெரிய யாகசாலைகளை மனோகரமாகச் செய்வித்து என்றவாறு. (55)

திருமலி வித்துப் பறவைப டுத்துச் சிலகுண்டம்
கருதிநி றுத்திப் பசு நிரை கட்டப் பெறுகம்பம்
சருநெய்கு சைப்புல் சமிதைசு ருக்குச் சுருவந்தண்
பருதிபொ ரிப்பொற் குவைபழ வெற்புப் பலகொண்டு.

இ-ள்: இலக்குமி முதலானோரை ஸ்தாபனம் பண்ணி, பருந்து படுத்து விதிப்படியில் உண்டான குண்டங்களைக் கருடன்மேல் அந்தந்தத் தானங்களில் விதிப்படி அமைத்து, பசுக்கள் கட்டக் கம்பங்கள் சரு, நெய், குசைப்புல், பழம் முதலான எல்லாப் பதார்த்தங்களையும் பல மலைபோலக் குவித்துக்கொண்டு என்றவாறு. (56)

சிந்தைம கிழ்ந்தும் பறைவர வேள்விச் செயல்செய்வோர்
மந்திர மோதிப் சோமா பாவக சோமா வருணவா
முந்துமு ராரி வாதிமி ராரி வாமூவா
இந்திரன் வாவா சங்கரன் வாவா வென்றார்கள்.

இ-ள்: சித்தம் களிகூர்ந்து யாகத்தொழில் செய்வோர் தேவர்களை வரும்படிக்கு மந்திரம் ஓதிப் பின்னும் அவரவர் மந்திரங்களைச் சொல்லி அக்கினிதேவனே! சந்திரனே! வருணனே! வா ; யக்ஞத்துக்கு முதலான விஷ்ணுவே! வா ; அந்தகார சத்துருவாகிய ஆதித்தனே! வா ; மூப்பு இளமை இல்லாத இந்திரனே! வா வா ; சங்கரனே! வா வா என்று ஆவாகனம் பண்ணினார்கள் என்றவாறு. (57)

யாருமணைந்தா ரின்றினி யென்னா மிதுவென்றென்(று)
ஓருமு னன்பார் யாவரு மின்பா றொளிர்தில்லைச்
சேரவி ருந்தார் போதுமி னென்றே சென்றேயும்
நாரத கொண்டே மீளுக வென்றான் மறைநாவான்.

இ.-ள்: ஆவாகனம் பண்ணின தேவர்கள் யாவரும் இங்குவந்து பொருந்தினார்கள் இல்லை ; இனி யான் துடங்கின யாகம் ஏதாய் முடியும் என்றென்று பலகாலும் விசாரித்து உணருமுன் இங்கு வரவேண்டின அன்பையுடைய யாவரும் பிரியத்துடனே விளங்கிய சிதம்பத்திலேகூடி இருக்கக் கண்டோம் ; யாகத்துக்கு வாரும் என்று நீர் போயாகிலும் நாரதரே அழைத்துக்கொண்டு மீள்வீராக என்று சொன்னார் பிரமதேவர் என்றவாறு. (58)

நயமுனி யும்போய் நடவதி பன்றாள் தொழுதொல்லைச்
சயமலி தில்லைத் தாபதர் விண்ணோர் தமைநீர்காள்
பயன்மலி யாகத் தனைவரு மெய்தப் பணி நீயென்(று)
அயனுரை செய்தா னென்றுரை செய்தா னனைவர்க்கும்.

இ-ள்: நாரதமுனிவரும் சிதம்பரத்திற்சென்று நடராசன் ஸ்ரீபாதம் தரிசனம்பண்ணிச் சடுதியிலே வந்து, ஞானவீரம் மிகுந்த தில்லைவாழ் அந்தணரையும் தேவர்களையும் கண்டு, நீங்கள் புத்தி முத்தி பயன் மிகுந்த யாகத்துக்கு எல்லாரும் வரத்தக்தாக நீ கற்பி என்று பிரமா சொல்லி என்னை வர விட்டார் என்று அனைவர்க்கும் சென்னார் என்றவாறு. (59)

நாரத னார்சொல் தேவர்கள் கேளா நகைசெய்தெம்
பேரவி தீயில் தூவுக யாமே பெறுவோமிப்
பாரினி னாளும் பேரரு ளாளன் பரதத்தேன்
ஆரமு துண்போ மினியவி யுண்போ மன்றென்றார்.

இ-ள்: நாரதமுனிவர் வார்த்தையைக் கேட்டுத் தேவர்கள் நகைத்து எங்களுடைய அவிர்ப்பாகயத்தை எங்கள் முகமாகிய அக்கினியிலே ஓமம்பண்ணக்கடவர் ; அதை நாங்கள் பெற்றுக் கொள்ளுவோம்; இந்தப் பூமியிலே நாள்தோறும் தம்பிரானாருடைய நிருத்தானந்தத்தேன் பருகுகின்றேம்; அதை ஒழித்து இனி உங்கள் அவிர்ப்பாகம் கொள்ளோம் என்றார்கள் என்றவாறு.

உங்கள் அவியை நெருப்பிலே போடும்; எங்களுக்கு வேண்டாம் அதப்பதம் என்ற ஒரு பொருள் நிகழ்ந்தமை கண்டுகொள்க. (60)

**மற்றவர் தஞ்சொல் பெற்றவ னும்போய் மலரோன்முன்**
**சொற்றன னந்தக் கொற்றவன் யாமுஞ் சொன்னால்வந் (து)**
**இற்றைம கங்கைப் பற்றுவ ரென்றே யிறைவாழும்**
**பொற்றிகழ் தொல்லைத் தில்லையி னெல்லைபு குந்துற்றான்.**

இ-ள் : அந்தத் தேவர்கள் வார்த்தையைக் கேட்ட நாதமுனிவரும் மீளப்போய்ப் பிரமாவின் முன்பை அவர்கள் சொன்னபடியே சொன்னார்; அந்த வார்த்தையைக் கேட்ட பிரமாவானவர் நாரதர் போய் மீண்டதும் ஒழிய இரண்டாவது நாமும் சென்றால், இங்கு வந்து இன்று நடத்துகிற யாகத்தைக் கைக்கொண்டு முடிப்பர் என்று யோசித்து அநாதியே தம்பிரானார் திருநடம் செய்யும் பொலிவு விளங்கும் பழைய தில்லைவனத்தின் எல்லையைச் சென்று கிட்டினார் எ-று. (61)

**மலரவ னுந்தா பதரெதிர் கொண்டா ரெனவாழ்வுற் (று)**
**அலைபுனல் சென்றா டியபி னெழுந்தா ரழலாடும்**
**நிலையம்வ ணங்கா நிகழ்சிவ கங்கா தர நீறார்**
**தலைவபு யங்கா பரணவி ரங்காய் தகவென்றான்.**

இ-ள் : பிரமாவைப் பிரம இருடிகள் யாவரும் எதிர் கொண்டார்கள்; எதிர் கெண்ட மாத்திரத்திலே நம்முடைய எண்ணம் முடியும் எனப் பிரமா மிகவும் பிரியமுற்றுப் பொற்றாமரைப் பொய்கையிலே ஸநானம்செய்து நியமம் முடித்து எழுந்து சென்று தீயாடும் கூத்தனை நமஸ்கரித்து, விளங்கா நின்ற சுத்தனே ! கங்காதரனே ! நீறுசார்ந்த திருமேனித் தலைவனே ! நாகாபரணனே ! என்னையும் அடியாருடன் கூட இரங்கி அருள் என்று விண்ணப்பம் செய்தார் என்றவாறு.

'இரங்காய் சரண்' என்று பாடமாகில், தேவரீர்பாதத்திலே சரண்புக இரங்கி அருள்வீர் என்று பொருளுரைக்க. (62)

**வேதனும் வேள்விக் கேதிகழ் வானாய் விடைகொண்டே**
**தீதற மூலத் தானமி றைஞ்சிச் சிவலிங்கச்**
**சோதியை மேவச் செய்யிட மெங்குந் தொழுதன்பின்**
**போதுக வென்றப் புலிமுனி சாலைக் குள்புக்கான்.**

இ-ள் : பிரமாவும் யாகம்பண்ணி முடிக்கக் கருத்தராய் நடேசமூர்த்தியை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு, யாகத்திற்கு விக்கினம் வராமல் ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானாரையும் நமஸ்கரித்து வேண்டிக்கொண்டு திருப்புரீச்சுரம் முதலான எங்குமுள்ள சிவலிங்கத்தானமெல்லாம் தொழுது, அன்பினாலே வாரும் என்று அழைத்து, வியாக்கிரபாதர் கைப்பற்றிக்கொண்டு அவர்பன்னசாலைக்குள் புகுந்தார் எ-று. (63)

**இந்திரன் விண்ணோர் புலிமுனி நாகர்க் கிறையோன்மெய்ச்**
**சிந்தைய ரேனோர் சூழவி ருப்பத் திகழ்போதன்**
**அந்தமி லாதீர் மகமுயல் வேனா னனைவீரும்**
**வந்தணை வானீர் தந்திடு வீரோ வரமென்றான்.**

இ-ள் : இந்திரன் தேவர்கள் வியாக்கிரபாதர் பதஞ்சலி கேவலசகலம்நீங்கின சுத்த இருடிகள் மற்றுமுண்டானவர்கள் சூழ்ந்து இருப்ப, நடுவே தேஜசுடனே விளங்கின பிரமாவானவர் எல்லாரையும் பார்த்து முடிவில்லாத சிவபத்தியுடைய நீங்கள் யாவரும் யான் பண்ணுகிற யாகத்துக்கு வந்து அனுக்கிரகம்பண்ணும்படி வரம்தருவீர் என்றுகேட்டார் எ-று. (64)

**பூமக னெண்ணம் புகரு போதுட் பொருளுன்னி**
**ஓமென வோதா தவனத ரானா ரயனும்பர்**
**கோமக னீயுட் கொண்டதெ னென்னக் குளிர்கஞ்சத்**
**தேமலி தாரோய் செப்பிய தன்றோ செயலென்றான்.**

இ-ள் : பிரமதேவர் தாம் நினைத்துவந்த காரியம் சொன்ன அளவில் அதில் பிரயோசனம் பொசிப்புமாத்திரமே ஆதலால் அதில் அபேட்சையற்றுப் பொருந்தாமல் தலைகவிழ்ந்திருந்தார்கள்; பிரமா இந்திரனைப் பார்த்து உனது அபிப்பிராயம் என்னை என்று கேட்க, குளிர்ந்த பரிமளம் வீசிய தாமரை மாலையை உடையவரே ! நீர் அனுக்கிரகித்ததன்றோ எனக்கும் பொருத்தம் என்றான் என்றவாறு. (65)

அங்கவ னின்சொல் கொண்டுது வண்டுள் ளயன்வேள்
எங்களு மின்பத் தாபத ருண்டா யினுமெந்தைக் (கு) [விக் (கு)
உங்கட மன்புக் கொப்பவ ரின்றென் றன்றோயான்
இங்குவ ருந்திற் றின்றென நின்றங் கிரவுற்று.

இ-ள் : அவ்விடத்துத் தேவேந்திரன் அனுமதி பண்ணின பிரிய வார்த்தையை உட்கொண்டு தில்லைவாழந்தணர் அனுமதி பண்ணாத இதற்குச்சித்தம் கலங்கிப் பிரமாயாகத்துக்கு நன்றாக உபதரிசனம் பண்ண எவ்விடத்தும் நல்ல பிராமணர் உண்டாயினும் எம்முடைய தம்பிரானிடத்தில் உங்களைப்போலப் பத்தியை உடையவர்கள் வேறு இல்லை என்பதினாலல்லவோ யான் இங்கு வந்து வருந்தி உங்களை வேண்டிக் கொள்கிறேன் என்று பலகாலும் இரந்து சொல்லி எ-று. (66)

பூவமர் வோனப் புலிமுனி கைப்பொன் முகிழ்பற்றி
யாகதே னானே தூதனு மான் லமர்தில்லைத்
தாபத ரானார் யாரையு மாவாழ் தரும்வேள்விக் (கு)
ஏவுத னீயே மேவுத லன்றோ வியல்பென்றான்.

இ-ள் : கமலாசனர் அந்த வியாக்கிரபாதருடைய முகிழ் போன்ற ஸ்ரீஅத்தத்தைப் பற்றிக்கொண்டு சொல்லுகிறர்; நீரே பராமுக மாயிருந்தால் எந்தக்காரியம் நிறைவேறும்; யானே தூதனுமாய் வந்து என் காரியம் சொல்லினமையால் தில்லை வனத்தில் பொருந்தின பிரம இருடிகள் எல்லாரையும் பெரிய இலட்சுமிகரமான யாகத்துக்கு என்னுடனே கூட வரவிடுதலை நீரேற்றுக்கொண்டு செய்வதன்றெ கிரமம் என்றார் என்றவாறு. (67)

கோகன தன்சொல் கொண்டுபு லிக்கால் முனிகோபம்
மோகமி லின்பத் தாபதர் மூவா யிரவோரும்
மாகரு மன்றத் தேகனை யாமிங் கினிநுங்கட்
காகவ ணங்கப் போய்வரு வீரென் றறிவித்து.

இ-ள் : பிரமா சொன்ன வார்த்தையை வியாக்கிரபாதர் உட்கொண்டு குரோத மோகாதிகளை நீங்கின சத்திய ஞானத்துடனே கூடியிருக்கிற பிரம இருடிகள் மூவாயிரவரும் இந்திராதி தேவர்களும் கேட்ப , யாம் இன்று முதலாக உங்களுக்காக நீங்கள் போய்வருமளவும் ஒப்பில்லாத சிதம்பர மூர்த்தியைத் திரிசந்தியும் நமஸ்கரிப்போம் நமக்காகப் போய்வாருங்கள் என்று அறிவித்து எ-று. (68)

**போதுக வென்றப் புலிமுனி போதன் பொதுமேவும்**
**சோதியை வந்தித் தருள்விர வெய்தத் தொழுதொல்லோர்**
**நாதனொ டன்புற் றகலறி னைப்போர் நமனோடு**
**மேதகு மெய்யும் போமினி யென்றே விடைகொண்டார்.**

இ-ள் : வருக என்று வியாக்கிரபாதர் பிரமா இவர்கள் சிதம்பரமூத்தியை நமஸ்கரித்து நிகழ்ந்தகாரியம் விண்ணப்பஞ் செய்து திருவருள் பெறத் தொழுகின்ற பழைய பிரம இருடி தேவர்கள் ஆகிய இவர்கள் ஆன்ம நாயகனுடனே இரண்டற அன்புறக்கலந்து போகத் துணிவோர் யமனுடன் தூலசரீரமும் போதுபோல் போனர்கள் என்றவாறு. (69)

**சென்றபி னந்தத் திருமுனி யுஞ்சீ ரரவோனும்**
**பின்றிகழ் வேணிப் பிஞ்ஞகன் மன்றம் பிரியாத**
**ஒன்றிய சிந்தைத் தாபதர் மீள்வுற் றுடன்வாழ்வ(து)**
**என்றுகொ லோவந் திடுநெறி யேதோ வெனநொந்து.**

இ-ள் : மூவாயிரம் பிரமஇருடிகளும் பிரமாவுடனே சென்றபின், வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் பின் தாழ்ந்து விளங்குகின்ற சடைக்கற்றையை உடைய பிஞ்ஞகன் ஆடும் சிதம்பரத்திலே ஒன்றியிருக்கிற சித்தபாகத்தையுடைய பிரம இருடிகள் மூவாயிரவரும் மீண்டும் எம்முடனே களிகூர்ந்து வாழும் நாள் என்று உண்டாமோ? அவர்களை அழைக்கும் உபாயம் ஏதோ? என்று விதனப்பட்டுக்கொண்டு என்றவாறு. (70)

**அந்தமி லின்பத் தெந்தைபி ரானா ரமர்நாளில்**
**சிந்தைவி ளங்கத் தில்லைவி ளங்கத் தேனாரும்**
**கந்தவ லங்கற் சுந்தர சிங்கக் கவுடேசன்**
**வந்தமை சந்தச் செந்தொடை யான்மேல் வருவிப்பாம்.**

இ-ள் : முடிவில்லாத பேரின்பத்தையுடைய எந்தை பிரானாராகிய வியாக்கிரபாதரும் பதஞ்சலியும் இவ்வாறு இருக்கும்நாளில் தனக்குச் சித்தசுத்தி உண்டாகவும் தில்லைத் தலம் விளங்கவும் தேன் நிறைந்த வாசனையையுடைய மாலையணிந்த சுந்தரனாகிய சிங்கவன்மன் என்னும் கவுடதேசத்து அரசன் சிதம்பரத்திற்கு வந்தமையை அழகு பொருந்திய செம்மையாகிய செய்யுட்களினாலே மேற்சொல்லுவாம் எ-று.

**நடராசச்சருக்கம் முற்றிற்று.**

ஆகத் திருவிருத்தம்-229.

ஐந்தாவது

## இரணியவன்மச் சருக்கம்

**முற்காலத் திமையவர்கள் முன்பணிந்து தொழமுதல்வன்**
**நற்காலத் துடனவில்வா னால்வகைமா யையுநடத்திச்**
**சொற்காரும் பொருளெவையுந் தொல்லூழி *யுறத்தொடுத்த**
**அற்கால நிலைவிடிவ தாமளவா மமையத்து.**

இ-ள்: பிரமகற்பத்தில் பிரதமமான சிருட்டிகாலத்திலே தேவர்கள் எல்லோரும் வந்து நமஸ்கரித்துச் சிருட்டி அவதாரிகையை அருளிச்செய்யவேண்டும் என்று பிரச்னம் பண்ண, முதல்வானாகிய பரமேசுரர் தனக்கு நல்ல துணைக் காரணமான காலதத்துவத்தை அதிட்டித்து அருளிச்செய்வார்; தனுகரண புவன போகமாகிய நால்வகைப்பட்ட மாயைகளையும் நடத்திச் சொல்லின்கள் பொருந்தும் பொருள் எவையுமாகிய மந்திர பத வன்ன புவன தத்துவங்களும் தொன்மையையுடைய ஊழியல் முடியத்தொடங்கிச் சங்காரகாலத்து நிலை முடிவதாகிய எல்லையாம் பருவத்தில் என்றவாறு. (1)

**சத்திகளிற் கருத்திருத்தித் தாவிலரு மாமாயை**
**உய்த்ததனி னாதாதி யைவகையு முதிப்பித்து**
**வைத்தெழுத்து மொழிமறை நூன் மந்திரமே முதலாய**
**சுத்தவழி விரித்தசுத்த தத்துவங்கள் தொகுமுதலில்.**

இ-ள்: சிருட்டிக்கவேண்டும் என்கிற இச்சையினாலே ஞானசத்தி முதலியசத்திகளில் கிருபையைப் பொருத்தி, குற்றமற்ற நிஷ்களமான மாமாயையைச் சேர்ப்பித்து, அதில் நாதம், விந்து, சதாசிவம்,மகேசுரம், சுத்தவித்தை என்னும் பஞ்ச தத்துவங்களையும் உண்டாக்கி, ஒடுக்கின வன்னம் பதம் வேதாகம சாத்திரங்கள் மந்திரகலை சூக்குமாதி வாக்குகள் புவனங்கள் மற்றுமுண்டான சுத்தாத்துவாவைத் தோற்று வித்து, அசுத்தத்துவமாகிய பிருதிவியாதி கலாந்தமாக ஒடுங்கின அதோமாயையில் என்றாவறு. (2)

**கலைமுதலா நிலன்முடிவாக் கண்டுணர்வங் கதிர்கருதிப்**
**பலவுயிர்க ளிருவினையாற் பயனுலகம் பெறப்பயிற்றி**
**மலரயன்மால் வரநல்கி மற்றிவை நீர் பற்றிவிரித் (து)**
**அலைகடலும் வடவரையும் மாள்வீரென றளித்தருளி.**

---

* 'யுற்த்தொகுத்த' எனவும்பாடம்.

இ-ள்: காலதத்துவம் முதல் பிருதிவிதத்துவம் ஈறாகச் சிருட்டித்து, ஞானக்கிரியை அந்தமான சுத்தவித்தையாதிகள் கலாதிகள் அந்தக்கரணாதிகளுக்கு உணர்வாகவும் உணர்வாகவும் கலாதிகள் அந்தக்கரணங்கள் புறங்கரணங்களுக்கு உணர்வாகவும் இந்தவகையிலே தம்முடைய சத்திகள் நின்று பிரேரிக்கும்படி கற்பித்து, சர்வான்மாக்களுக்கும் புண்ணிய பாவத்துக்கு ஈடாகத் தத்துவங்களைக் கூட்டிப் புசிப்பிக்கத் தக்கதாக அனுக்கிரக சத்தியையும் கற்பித்து, பிரமாண்ட சிருட்டி திதிகளுக்குக் காரணராகப் பிரம விஷ்ணுக்களை உண்டாக்கி, இந்த பூலோகத்தில் சிருட்டி திதிகளுக்கு அதிகாரிகளாய்த் திருப்பாற்கடலும் மனோவதியாகிய வடவரையும் ஆண்டுகொண்டு இருங்கள் என்று திருவுள்ளம்பற்றியருளி என்றவாறு. (3)

அந்தணர்க ளுளரானா ராகுதிக்கா மாதாக்கள்
தந்தனமந் திரமுன்னே சாற்றினமித் தன்மையினான்
முந்துமவி பெறதிங்கள் மும்மாரி யிமையவர்கள்
சிந்துமுண வுளவாகி யகிலமெலாந் துயர்தீர.

இ-ள்: முன்பு பிராமணரைச் சிருட்டித்தோம், வேள்விக்காகப் பஞ்ச கோமாதாக்களைச் சிருட்டித்தோம், மந்திரங்களை ஆதியிலே அருளிச்செய்தோம், இத்தன்மையால் தேவர்கள் முந்தும் அவிர்ப்பாகம் பெறவும், மாதம் மும்மாரி பெய்யவும் அதனால் பயிர்கள் விளையவும் உயிர்களுக்கெல்லாம் ஆகாரம் உண்டாகிப் பூலோகம் எங்கும் துயரந்தீரவும் என்றவாறு. (4)

சுருதிவழி யொழுகினர்கள் சுவர்க்கத்தா ராகமநூல்
சரியைகிரி யாயோகர் சாலோக சாமீப
உருவுவமை யினராக வுதவுதுமெம் முடனாகும்
பெருகியஞா னிகளெம்மைப் பெற்றார்போக் கற்றாரே.

இ-ள்: இப்படி உண்டான உலகத்திலே வேத விதிப் படி நின்றவர்கள் சுவர்க்க பதவியைப் பெறுவார்கள்; ஆகமத்திற்கூறிய சரியை கிரியா யோகத்தை அநுட்டித்தவர்கள் சலோக சாமீப சாரூப பதம்பெற அருள்வோம்; எம்முடனே ஒருப்பட்ட பூரண ஞானமே தங்களுக்கு அறிவான ஞானிகள். எம்மைப் பெற்றவர்களும் எம்முடன் நீக்க மற்றவர் களுமாவார் என்றவாறு. (5)

மண்ணுலகின் முறைபுரியா மடவரை நால் வகைத்தண்டம்
பண்ணிநெறி நடத்திடவும் பலரறியா வகைபுரிந்த
எண்ணில்வினை விதிவழியே நுகர்விக்கு மியல்பிற்கும்
திண்ணியரா மிருதரும ருளராகச் செய்துமென.

இ-ள்: தேவதேவர் தேவர்களுக்கு அருளிச்செய்து ஆதித்தன் புத்திரர்களில் ஒருவனுக்கு ஆன்மகர்மார்ச்சிதம் தெரிய ஞானதிருட்டி கொடுத்து, பின்பு எமனுடைய பூமி அதிகாரமும் கொடுத்தனுப்பி, சர்வ லக்ஷணமுமுள்ள மற்றொருவனுக்குச் சன்னிதியிலே விளங்கும் மணிமுடி சூட்டி, வண்டு பொருந்தி மகிழும் ஆத்திமாலையும் அணிவித்து, இவனைக்கொண்டு இராச்சியம் பண்ணிக்கொள்ளுங்கள் என்று தேவர்கள் கையிலே காட்டிக்கொடுத்தார் என்றவாறு. (7)

**மற்றவருங் கொடுபோந்து வடவரைப்பால் வருவிக்கும்**
**பெற்றியினா லணைந்துநாற் பெருங்கட்லுட் படும்புவிக்குக்**
**கொற்றவனாய் மனுநாமங் கொண்டுநடத் தினனடைவே**
**முற்றிகழ வருமனுக்க ளொருநால்வர் முடிந்தற்பின்.**

இ-ள்: அத்தேவர்களும் கைப்பிடித்துவந்து மகாமேரு பாரிசத்திலே சேர்த்த முறைமையினாலே கௌடதேசத்தில் சென்று நாலு கடலுக்கு உட்பட்ட பெரிய பூமிக்கு இராசாவாய் மனு என்கிற பேரைக்கொண்டு வேதாகம மார்க்கத்தில் நீதி நடத்தினன்; அந்த அடைவே அவனைப்போல முன்னடந்த மார்க்கத்திலும் நன்றாக எழுபத்திரண்டு யுகத்துக்கு மேல் வரப்பட்ட மனுக்கள் நாலுபேர்கள் வந்து ஒவ்வொருவராக இராச்சியம் பண்ணி எழுபத்திரண்டு சதுர்யுகமும் முடிய ஒவ்வொருவராக முடிந்த அளவில் என்றவாறு. (8)

**அன்னவர்கள் பின்னவனு மனுவாகி யவனுக்கு**
**மன்னுமனை வியரிருவ ருளராகி மற்றவரின்**
**முன்னவள்பா லுடன்மடங்கன் முழுநிறமா மகவுதிப்பப்**
**பின்னவள்பா லெழிலினரா யிருதனயர் பிறந்தார்கள்.**

இ-ள் : அப்படிப்பட்ட நாலு மனுக்களுக்குப் பின் கௌடேசன் என்னும் மனுவும் உளனாகி நீதிசெலுத்துங் காலத்தில் அவனுக்கு நிலைபெறு மனைவியர் இருவர் உண்டாகி அந்த இருவரில் பிரதானமான ஸ்திரீயினிடத்தில் சரீரமுழுதும் சிங்கவர்ணமான ஒரு குமாரன் உண்டாக, அந்த இளைய ஸ்திரீயினிடத்தில் இராச லட்சணம் பொருந்தின இரண்டு குமாரர்கள் பிறந்தார்கள் என்றவாறு. (9)

**விரவுசிங்க வருமன்பின் வேதவன்மன் சுமதியென**
**வருதனயர் மூவர்களு மறைமுறையின் மலிசடங்கு**
**பெருகியபின் படைபயின்று பிறங்குமத கரிபரிதேர்**
**கருதியுகைத் திடுமாறு மொன்றாகக் கற்றார்கள்.**

இ-ள்: பொருந்தின சிங்கவன்மன், அவன்பின் வேதவன்மன், அவன்பின் சுமதிவன்மன் என முறையே தோன்றின மூன்று குமாரர்களும் வேதமார்க்கத்தில் க்ஷத்திரியாசங்கமான கிரியைப்பண்ணி முடித்தபின் ஆயுதசிரமம்பண்ணி முடித்துப்புகர்விளக்கு மத்தகசம், குதிரை, தேர் முதலானவை ஏறி ஓட்டும் உபாயங்களும் குறைவற முழுதும் கற்றார்கள் எ-று. (10)

**கற்றதற்பின் முன்னவன்மெய்க் களங்கத்தா லரசாள்கை**
**குற்றமுள தினியுலகிற் குலமைந்த ரிருவரினும்**
**பெற்றவர்கள் பெறுகின்றார் மனுவிசைவாற் பொருந்தவங்கள்**
**உற்றொடுங்கு மிதுசலா வுறுதிநமக் கெனவுணர்ந்து.**

இ-ள்: பலகலையுங்கற்ற அதன்பின், முந்தின குமாரனானவன் தன்னுடைய சரீரத்தின் குற்றத்தினாலே நமக்கு இராச்சியம் பண்ணுகைக்குத் தோஷம் உண்டு, இந்தப் பூமியில் தம்பிமார் இருவரினும் மனுவின் இசைவு பெற்றவர்கள் மனுவுக்குப் பின் நம்முடைய இராச்சியம் பண்ணப் பெறுகின்றார், மேலான தவசுகளைப் பொருந்திச் சித்தத்தை ஒடுக்குவதே மிகவும் ஆன்மலாபம் நமக்கு என்று திடமாக விசாரித்து என்றவாறு. (11)

**மனுவின்மல ரடிவணங்கி மன்னவனே யடியேனற்**
**புனிதமிகு தீர்த்தங்க ளெங்குளவும் புகுந்தாடிப்**
**பனிமதியம் வளர்சடையோன் பதிகளுநின் திருமேனி**
**இனிதமரும் படிதொழுதிங் கெய்தவரு ளெனவிசைத்தான்.**

இ-ள்: மனுவின் பாதமலர்களை வணங்கி மகாராசனே! அடியேன் அட்டதிக்கிலுமுள்ள நல்ல புனிதமான தீர்த்தங்களிலெல்லாம் சென்று ஸ்நானம்பண்ணிக் குளிர்ந்த சந்திரன் தவழ்ந்து வளருகின்ற சடையையுடைய பரமசிவத்தின் திருப்படைவீடுகளில் வீற்றிருக்கும் சிவமே உன் திருமேனியாகப் பாவித்துத் தொழுதுவரும்படி விடை தா என்று விண்ணப்பம் செய்தான் என்றவாறு. (12)

**மன்னவனு மிகநொந்து மைந்தர்மழ விதுமுதிர்ந்த**
**என்னுடைய தளர்விது நீ யிசைந்ததவ மினியாமோ**
**பொன்னணியும் பொருகரியும் புரவிகளும் புணர்தேரும்**
**கொன்னவிலும் படைநெடுங் குவலயமுங் கைக்கொண்டு.**

இ-ள்: இதைக் கேட்ட மனுவும் மிக விதனப்பட்டுப்பிள்ளைகள் எனிலோ இளமை உடையவர்கள்; நானுமோ முதிர்ந்த தளர்ச்சியை அடைந்தேன்; நீ பொருந்தின தவசுகளில் முயல்வது இராசநீதிகளுக்குப்

பொருந்தாது; பொருந்தினது கேள்; அபிடேகம் முதலான கனக இரத்தி னாபரணங்களும் இரத கஜ துரக பதாதிகளும் பெரிய இராச்சியமும் உன் வசப்படுத்திக்கொண்டு என்றவாறு. (13)

திருத்த நடத் திடுமதுகாண் தவமென்று செப்புதலும்
பரந்தபணா மணிப்பாந்தட் பாரந்தா ரெனப்பரித்த
பெருந்தடந்தோ ளிவையின்னும் பேருழி பொறுத்தற்கென்
அருந்தவமே தருமென்றா னரசனவ னதானான்.

இ-ள்: நீதிமார்க்கத்தினாலே நடத்துவது நமக்குத் தவசு என்று அருளிச்செய்தலும்; விரிந்த படமும் இரத்தினங்களும் பொருந்தின சேடனால் சுமக்க ஒண்ணாத பூமியை ஆத்திமாலையாகத் தரித்த உன்னுடைய உயர்ந்த பெரியத்தோள்கள் நீ இப்பொழுது சொல்லப்பட்ட சதுரங்கம் முதலான இராச்சியமும் இன்னமும் கற்பாந்தமளவாகத் தாங்குதற்கு நான் பண்ணுகின்ற தவசுதானே உண்டாக்கும் என்றான்; கௌடதேசனும் அதைக் கேட்டு யாதொரு பிரதி உத்திரமும் சொல்லாமல் தலைகவிழ்ந்து பூமியைப் பார்த்திருந்தான் எ-று. (14)

**வேறு**

அங்கதிசை வாகவிர வேதனிய கன்று
கங்கைக் கடல் கூடுதுறை காதலுட னாடிச்
சிங்கவரு மாவருள் திருந்தவரு மாமுன்
தங்கிமிகு வங்கமுயர் சாவகம டைந்தான்.

இ-ள்: இவ்வாறு மூர்ச்சிதனாய்ப் பிரதியுத்தரம் சொல்லாமல் இருந்ததுவே அநுமதியாகக் கைக்கொண்டு அன்று இரவே தனியே புறப்பட்டு ஊரெல்லை நீங்கிப்போய்க் கங்கை முகத்துவாரத்திலே விருப்பத்துடனே தீர்த்தமாடிச் சிங்கவருமானவன் அருள் திருந்தவரும் வண்ணம் காசி க்ஷேத்திரத்திலே முந்த வசித்து அங்கதேசம் பெரிய சாவகநாடு வந்து பொருந்தினான் என்றவாறு. (15)

மற்றதுக டந்துவள ரொட்டியவ ரைப்பில்
பெற்றமுயர் பீமமிகு நாதனடி பேணி
எற்றபுன லார்பதிக ளெங்கணுமி றைஞ்சித்
தெற்றடவி யூடுயர்தெ லுங்கமத ணைந்தான்.

இ-ள்: அந்தச் சாவகநாடு நீங்கி உயர்ந்த ஒட்டிய தேசத்திலே *வசவபூசிதமான பீமேச்சுவரன் பாத சேவைபண்ணி, அவ்விடத்து எங்குமுள்ள தீர்த்தம் திருப்படைவீடு எல்லாம் சேவித்து, ஒன்றுக்கொன்று பின்னி நெருங்கும் பெருமரக்காடு சூழும்

---

* வசவபூசிதம் என்பது நந்தியால் பூசிக்கப்பட்டது.

தெலுங்க பூமியை அடைந்தான் எ-று.

எற்ற புனல் - திரைமோதும் தீர்த்தம். (16)

**பருப்பதமி றைஞ்சிவிழி சோதிபயில் வித்துத்**
**திருத்தகு நதிப்பொருவில் தீர்த்தமவை யாடி**
**அருத்திமிகு காளனுட னத்திபணி நித்தன்**
**பொருப்புற வுடன்றொழுது போதலுறு நாளில்.**

இ-ள்: ஸ்ரீசைலத்தைக் கண்டு வணங்கி, சோதிமயமான சிவலிங்கத்தை விழியில் நீங்காது பொருந்துவித்து, வைபவமிகுந்த புண்ணியநதி பலவும் ஸ்நானஞ்செய்து மோட்சார்த்தத்தில் விருப்பமுள்ள காளன் என்னும் நாகமும் யானையும் பணிந்த பரமசிவத் தையும் காளத்தி மலையினையும் சாட்டாங்கமாகத் தொழுது தெற்கு நோக்கி வருநாளில் எ-று. (17)

**காடதனி னூடுசிலை யொடுதனி யோடும்**
**வேடனை யழைத்து நிழன் மேவியிரு வென்றிக்**
**கோடுமலி கானிலுயர் குன்றுகளின் வென்றிச்**
**சேடுள வியப்புநனி செப்பெனவு ரைத்தான்.**

இ.-ள்: வழியில் காட்டின் நடுவே வில்லும் கையுமாகத் தனியே ஓடுகின்ற ஒரு வேடனைக் கண்டு அழைத்து ஒரு மரநிழலிலே தன் அருகே இருக்கச்சொல்லி இக்கொம்புகள் பின்னி மிகுந்த பெருமரக்காட்டில் உயர்ந்த மலைகளில் வெற்றியுடைத்தான மேலான புதுமையுள்ளதாகக் கண்டவைகளைச் சொல் என்று வினவினான் என்றவாறு. (18)

**வேடனும்வ ணங்கியடி யேன்மிருக நேடும்**
**காடிதுவ ளைந்துகரு நாய்கொ டொருகாளை**
**ஓடுமிர வும்பகலு முண்ணிலுயி ருண்ணீர்**
**நீடு தட முண்டமுத நீருமுள வெங்கும்.**

இ-ள்: வேடனும் வணங்கிக் கும்பிட்டு விண்ணப்பஞ்செய்வான்; அடியேன் மிருகம் ஏறுகால் இறங்குகால் பார்க்கும் காடு இது; இந்தக் காட்டைச் சூழ்ந்து நாய்க் கத்தும்படி *ஒருபிள்ளை இரவும் பகலும் ஓடித் திரியும்; குடித்தவர்கள் பிராணனை வாங்குகிற தண்ணீர் மிகுந்த குளமும் உண்டு; குடித்தவர்கள் ஒருகாலும் சாகாத் தண்ணீர்க்குளமும் பல விடத்தும் உண்டு என்றவாறு. (19)

* ஒருபிள்ளை - பைரவர்.

**எண்டிசைம யங்குமொரு தாரியெழி னிழல்**
**விண்டகல்வி லாததரு மேவுமொரு தாரி**
**கண்டவர்க ரந்துரைக றங்குமொரு தாரி**
**கொண்டநிழல் கண்டுவிழ கூவலொரு தாரி.**

இ-ள்: தன்னிடத்தில் சென்றவர்களை எட்டுத் திசையும் தெரியாத வண்ணம் மயக்கும் ஒருவழி; விளங்காநின்ற நிழல் காலையும் மாலையும் தன்னைவிட்டு கிழக்கு மேற்கு நீங்கு தலுண்டாகாத மரங்கள் பொருந்தும் ஒருவழி; முதற்கண்ட வரைப் பின் காணாமலிருக்க அவர் வார்த்தை முழங்காநிற்கும் ஒருவழி; கிணற்றை எட்டிப்பார்த்துத் தன்னிழலைக் கண்ட மாத்திரத்திலே நிழலுடனே தாங்களும் வீழும் கிணறும் உள்ளது ஒருவழி என்றவாறு. (20)

**ஓவிடலி லோசையொரு பாலெழுந திப்பால்**
**மாவடிவி டாதவொரு தேவருளர் மாடே**
**கூவன்முழை யால்வழி குலாவியொரு பச்சைப்**
**பாவையிரு போதும்விரி போதுபயில் விக்கும்.**

இ-ள்: ஒழியாத ஓசைமிகுந்த ஒருபால் ஆற்றங்கரையிலே மாவடி நீங்காமல் ஒரு தேவர் இருப்பார்; அவருக்கு அருகாக ஒரு கிணற்றுக் குள்ளே ஒரு கிளைவழியாக வந்து ஒரு பச்சைப்பாவை இரண்டு போழ்தும் அத்தெய்வத்தைப் பார்த்துக்கொண்டு சென்று பல பூவையும் சொரியா நிற்கும் என்றவாறு.

நதியாவது திருக்கம்பையாறு, மாவடிவிடாத ஒருதேவர் ஏகாம்பர நாதர். கூவல்முழை என்பது ஒரு பிலம். பச்சைப் பாவை-காமாட்சி. (21)

**துரங்கமிசை கொண்டுவளை [1]செண்டுகொடொர் கண்டன்**
**பரந்துலவு வெள்ளமலி பன்னதிபு குந்துட்**
**கரந்தவிட முன்னரிது கானமிதன் மேன்மை**
**இருந்தபடி சொல்லிலவை யெல்லையில வென்றான்.**

இ-ள்: குதிரை ஏறிக்கொண்டு வளை சென்று கையில் பிடித்து கொண்டு ஒரு [2]கிராதன் நித்தம் பரவித் திரியும்; அனேகம் ஆறு பெருகிவந்து இன்ன இடத்திலே போனது என்று தெரிதற்கு அருமையாம்; இக்காட்டில் பெருமை புதுமை உள்ளது; எல்லாம் சொல்லி ஒருகாலமும் முடிய சொல்லப்போகாது என்றான் என்றவாறு. (22)

---

1.'செண்டனொரு சொண்டன்' எனவும் பாடம்
2.கிராதன் என்றது ஐயனாரை.

**மற்றவரை யெய்தவழி செய்கவென வேடன்**
**துற்றசரி யூடுகொடு போகியிவர் சொன்ன**
**கொற்றவரே னக்குமர னுங்குறுகி னான்முன்**
**கற்றமறை சொற்றமறை கம்பர் திரு முன்பு.**

இ-ள்: நீ சொன்ன மாவடித் தேவரைக் காணத்தக்கதாக வழிவிடு என்று சிங்கவன்மன் சொல்ல, வேடனானவன் சுவடு மறைந்த சரிவழிக்குள்ளாகக் கொண்டுபோய் இவர் தாம் நான் சொன்ன தேவர் என்று காட்ட, கௌடதேச குமாரனும் முன்னே பிரமாதிகளாலே கற்கப்பட்ட வேதங்கள் ஈச்சுவர அயிக்கியம் விஞ்ஞாபிக்கும் திருவேகம்பர் திரு முன்னே அணுகினான் என்றவாறு. (23)

**பேசரிய வன்பொடுப ணிந்துபெரு வாழ்வுற்(று)**
**ஆசையுடன் முக்கணரை யங்கணரெ னக்கண்(டு)**
**ஏசில்புகழ் கூறியிரு போதுமக லாமெய்ப்**
**பூசனைகள் செய்தருள்பொ ருத்திடவி ருந்தாள்.**

இ-ள்: பேசுதற்கு அரிய பத்தியுடனே நமஸ்கரித்துப் பெறாப்பேறு பெற்று விருப்பத்துடனே திரிநேத்திரரைக் கிருபாகடாக்ஷம் உள்ளவர் என்று தரிசித்து, பொல்லாங்கு அற்ற சிவத்தியானம் பண்ணி, அகோராத்திரி நீங்காமல் சத்தியமான பூசைபண்ணி அருள் பொருந்த இருந்தான் என்றவாறு. (24)

**அண்டர்பெரு மானழகு கண்டகல்வ தின்றிப்**
**பிண்டிகனி தேனுணவு பெற்றவையி டக்கொண்(டு)**
**உண்டுறையு நாளிலொரு நாட்குமர னுண்மைத்**
**திண்டிறலி னான்வருக வென்றுமொழி *செய்தான்.**

இ-ள்: ஏகாம்பரநாதர் திருமேனியின் அழகைக்கண்டு விட்டு நீங்காமல் தினை மாம்பழம் தேன்முதலான உணவுகளை வேடன் கொண்டுவந்து கொடுக்கக்கொடுக்கக் கைக்கொண்டு அருந்தியிருக்கும் நாளிலே ஒருநாள், கௌடதேச குமாரனானவன் வேடனைப்பார்த்துச் சத்தியமான திண்ணிய அதிசூரனே வருவாயாக என்று சொன்னான் என்றவாறு. (25)

---

*செய்வான்' எனவும் பாடல்.

தென்கடலி டைப்பொருவில் தேசமது லாவிக்
கொன்கடறு டைக்குடக டற்கரை ந டப்பாள்
என் கடனெ னைக்கடறி யாவுமகல் விப்பான்
நின்கடனெ னக்குமர னென்ன நிகழ் வித்தான்.

இ-ள்: தெற்குச் சமுத்திரத்துக்கு உட்பட்ட ஒப்பற்ற தேசங்களில் சஞ்சரித்துப் பெருமையுள்ள கரவழியையுடைய மேல்கடற்கரை வழியாகப் பூமிப்பிரதக்ஷணம் பண்ணுவதே எனக்குச் சங்கற்பம் என்றும், என்னைக்கொண்டு வழியெல்லாங் கடப்பிக்க உனக்குக் கடன் என்றும், கௌடதேச குமாரன் தன்னுடைய அபிப்பிராயம் தெரியச் சொன்னான் என்றவாறு. (26)

அந்தவுரை கொண்டெயின னாகிலடி யேனுற்(று)
இந்தவன முங்கடறி யாவையும றிந்தே
வந்துகொடு போவனிரு மன்னவென முன்னே
வெந்திறலி னானடிப ணிந்துவிடை கொண்டான்.

இ-ள்: கௌடதேசகுமாரன் அப்படிச் சொன்ன வார்த்தையைக் கேட்டு வேடன் அப்படியே திருவுள்ளமாகில் அடியேன் சென்று இப்படிப்பட்ட காடுகளும் சுரவழிகளும் பார்த்தறிந்து அழைத்துக்கொண்டு போவேன்; இவ்விடத்திலே மகாராசனே! இருப்பாயாக என்று முன்னே கொலைத் தொழிலில் சூரனாகிய கிராதகுமாரன் அவ்வரசனைப் பணிந்து விடைகொண்டான் என்றவாறு. (27)

காடுமலை யுங்கடறு மாடு தட மாடும்
கூடுமடு மீனமென நீடுகல வேடன்
ஓடியல மந்துசில நாள்களொழி வித்துத்
தேடிவழி கண்டபடி செப்பவணை வுற்றான்.

இ-ள்: காடுகள் மலைகள் சுரவழி இருடிகள் வனசரர் முதலானோர் ஆடப்பட்ட கடற்கரையும் புறச்சுனைப் பக்கங்களில் ஏறுகால் இறங்குகால் வழிகளும், நீங்காமல் மடுவில் வாழும் மீன்போலத் தடையற ஓடி இளைத்து நெடுநாளாகத் தேடித் தான் வழிகண்டபடியை இராசகுமாரனுக்குச் சொல்ல அணைந்தான் என்றவாறு. (28)

**அங்கவன ணைந்தரசன் மைந்தனடி பேணித்**
**துங்கவன மங்கணுழை தொல்சரியு மில்சீர்ச்**
**சங்கவன முங்கவன மாறருவி தண்கான்**
**எங்கணுநெ ருங்கியுள தில்லைவழி செல்ல.**

இ-ள்: அந்தக் கிராதன் இராசகுமாரன் அருகேவந்து நமஸ்கரித்துப் பெருவனம் கூறிய கண்ணுக்கு நுழையத்தக்க பழைய சரிவழியும் இல்லை ; ஓசை பொருந்தின [1]சங்கமுகக் கடலும் திரைப்பாய்ச்சல் ஒழியும் [2]புகார்முகங்களும் குளிர்ந்த இளங்காடுகளும் எவ்விடத்திலும் செறிந்திருக்கும்; அப்பாற் செல்ல வழி இல்லை என்றவாறு. (29)

**பின்னுமதன் மாடுசில நாணடைபெ ருக்கிச்**
**சென்னெறியின் முன்னொர் நதி சேரவளர் தில்லைத்**
**துன்னடவி யாயது துணுக்கெனமி குத்தே**
**என்னுள நடுங்கும்வகை யெங்குமுள தங்கண்.**

இ-ள்: பின்னரும் அந்தப் பக்கத்திலே சிறிது நாள் போவதும் வருவதுமாகச் செய்து சொல்லுகிற வழிக்குமுன் ஒரு ஆறு குறுக்கிட நெருங்கி வளர்ந்த தில்லைக்காடு செறிந்ருந்தது; என் உள்ளம் துணுக்கென நடுங்கும்படி காடு முழுவதும் கொடிய தெய்வமாக இருந்தது அவ்விடத்தில் என்றவாறு. (30)

**புண்டரிகம் விண்டமலர் பொன்மலிசு னைப்பால்**
**ஒண்டனியி ருந்தொர்புலி யன்பெரிது றங்கக்**
**கண்டனன டுங்கினன்ம டங்கினனெ டுங்கான்**
**மண்டியிது வந்தபடி யென்றுரைவ குத்தான்.**

இ-ள்: மலர்ந்த பொற்றாமரைச் சுனைக்கரை அருகே துய்ய இடத்திலே தனியே ஒருபுலியன் இருந்து உறங்கினன், அதைக்கண்டு நான்முன்னிலும் இரட்டிப்பாகப் பயப்பட்டுத் திரும்பி ஓடிப்போந்தேன்;அந்தப் பயமிகுதியினாலே நெடுந்தூரமான காடுங்கழிந்து சடுதியிலே போந்தேன் என்று சொன்னான் என்றவாறு. (31)

**கேட்டலும் கிழ்ந்துவினை யொத்தகிளர் வெய்தித்**
**தேட்டமுறு வேட்கைமிகு சிங்கவரு மா நீ**
**காட்டுபுலி யன்றனையெ னக்கடிது போவான்**
**மீட்டுமுயர் கம்பரை வணங்கிவிடை கொண்டான்.**

1. சங்கமுகம் என்பது கடலில் நதி சேருமிடம்.
2. புகார்முகம் என்பது முகத்துவாரம்.

இ-ள்: கிராதன் வார்த்தையைக் கேட்ட மாத்திரத்திலே இருதய கமலம் மலர்ந்து கன்மசாமியமுமான இச்சையுடனே ஆசாரியரைத் தேடுகிற மந்ததர சத்தினிபாதம் பொருந்தின வேட்கை மிகுந்த சிங்கவன்மாவானவன், நீ புலியனைக் காட்டுவாயாக என்று சொல்லிக் கடுகப்போம்படி. விரைந்து செல்லும் சித்தத்தை மீளத்திருப்பிப் பெரிய ஏகாம்பரநாதரை நமஸ்கரித்து விஞ்ஞாபனம்செய்து விடை கொண்டு போந்தான் என்றவாறு. (32)

**அத்தனுட னாருயிர்கள் கூடவணை விக்கும்**
**சத்திதரு வேடனர சன்றனய னைக்கொண் (டு)**
**எத்தகைய கானமு மியாறுமகல் வித்துச்**
**சித்தமலி தில்லைவன வெல்லைசெறி வித்தான்.**

இ-ள்: பரசிவனோடு ஆன்மக்களைச் சேரக்கூட்டுவிக்கும் அருட்சத்தியை ஒக்கும் வேடன், இராசகுமாரனைக் கைக்கொண்டு எந்தப்பெரிய காடுகளும் ஆறுகளும் நடந்து கடப்பித்துத் தரிசனமாத்திரத்திலே சித்தம் சிவமாக்கும் தில்லை வனத்தின் எல்லையை அணுகுவித்தான் என்றவாறு. (33)

**ஆவிகள் ம லங்கழுவு மாசிலருள் போல்வாழ்**
**வாவிகம லங்கணய னங்கள்மலி வித்துற் (று)**
**ஏவடுகொ டுஞ்சிலையன் முன்செல்பொழு திற்கொண்(டு)**
**ஓவியமெ னும்பரிசி ருத்தவனை யுய்த்தான்.**

இ-ள் : சர்வான்மாக்களையும் பாசச்சேதம் பண்ணுகிற சுத்தமான அருட்சத்திபோல் பொருந்திய பொற்றாமரைத் தீர்த்தத்தையும் தாமரைமலர்களையும் கண்குளிரப் பார்த்து நின்று அம்பினால் கொல்லும் சிலையையுடைய வேடன் அரசனைக் கைப்பற்றிக்கொண்டு செல்லும்பொழுது எழுதி வைத்த சித்திரம் போலே இருந்து உறங்கும் அவனைக் காட்டினான் என்றவாறு. (34)

## வேறு

**ஏராருங் குமரன்முனி யிருந்தபடி கண்டஞ்சிச்**
**சேராதே யகலமனந் தெரியாது திருவுள்ளம்**
**பேராத நிலைகலக்கல் பிழையாகு மெனவுய்த்தான்**
**ஆராத பெருங்காத லருஞ்சாபம் புரியச்சம்.**

இ-ள்: அழகு பொருந்திய இராசகுமாரன் வியாக்கிர பாதமுனிவர் நிட்டையிலிருக்கும் பரிசைக்கண்டு பயப்பட்டு, மனதி னாலும் அணுகப்போகாமல் நின்று, பெரியோர்கள் திருவுள்ளம் எப்படியாமோ ? அதுவும் அன்றி , நீங்காத சிவானுபவம் நீக்குதல் அபராதமாய் முடியும் என்று நினைத்து, ஒழியாத ஆசையையும் அரிய சாபமிடுவார் என்கிற அச்சத்தையும் பொருந்தி என்றவாறு. (35)

**அச்சமிகு மிவனிருப்பு முணர்வுமிக வணித்தாகை**
**நிச்சயம்வற் கலைபுலரா நீர்மையது பலாசிலையும்**
**பொச்சை தரு குசைப்புல்லும் பொலிசமித்தும் பூங்கலனும்**
**பச்சைபட மிசையுலராப் படர்சடையும் பரப்புதலால்.**

இ-ள்: நமக்குப் பயத்தை மிக உண்டாக்கும் இவர் இருக்கும் சமாதியும் நீக்கி இவர் உணர்வும் சடுதியில் உண்டாதல் நிச்சயம்; ஏனெனில் உடுத்த மரவுரி இன்னமும் உலராமையினாலும் பலாசிலையும் சிறுசெடியில் உள்ள குசைப்புல்லும் மிகுந்த சமித்தும் திருப்பூங்கூடையும் இவற்றின் மேல் பசுமை வாடாமையினாலும் நீண்ட சடை விரித்திருக்கையாலும் என்றவாறு. (36)

**என்செய்வோ மிருவினைக ளினிவிடுமோ தவமெவையும்**
**முன்செய்யு முனிவர்களு முனிவர்களோ முனிவாகில்**
**பின் செய்வ திவனருளாற் பெறுதுமெனக் குமரனவன்**
**தன்செய்ய கழலிறைஞ்சிக் கைதொழுது தனி நின்றான்.**

இ-ள்: இனி என் செய்வோம்; நாம் ஆர்ச்சித்த கன்மங்கள் நம்மைவிட்டுப் போகாது; நெடுங்காலமாகத் தவசு பண்ணும் முனிவர்களும் கோபிப்பார்களோ; கோபம் உண்டாகில் அது நீங்க அனுக்கிரகம் பண்ணுவது இவர் அருளால் பெறுதும் என்று அஞ்சாமல் கௌடதேசகுமாரன் வியாக்கிரபாதர் சீர்பாதத்தை நமஸ்கரித்து அஞ்சலியத்தனாய் (வேடனை அனுப்பிவிட்டு) த் தனியே நின்றான் என்றவாறு. (37)

**புந்தியினிற் பரபோகம் புணர்ந்தகன்று பொதுஞானம்**
**வந்தணுகி யதுகண்ணா மருவுமவன் றனைநோக்கிச்**
**சிந்தையினா லருமுனிவன் செல்கால மூன்றினையும்**
**அந்தமிலா வுணர்வைவிரித் தாராய்வா னாயினான்.**

இ-ள்: தனக்குப் பிராணனான மேலான சிவஞானத்தை நித்தியசமாதியிலே பொருந்தி நீக்கிப் பாசஞானத்தை வந்து

கிட்டி அது விடயமாக யோகப் பிரத்தியட்சத்தினாலே, வந்து நமஸ்கரித்த கௌடதேச குமாரனைப் பார்த்து, பெரிய வியாக்கிரபாத முனிவரானவர் தன்னுடைய சித்தத்திலே நடக்கின்ற பூதாதி மூன்று காலத்தினையும் முடிவில்லாத தன்னுடைய ஞானத்தை விரித்து விசாரிப்பாராயினர் என்றவாறு. பூதாதி மூன்று காலமாவன:பூத பௌஷிய வர்த்தமான காலங்களாம். (38)

**போன பல காலத்தின் பொலிவுகளு மினிப்புணர**
**மேனிகழுங் காலத்தின் விரிவுகளுஞ் செல்கின்ற**
**தானமலி காலத்தி னளவுகளு மாராய்ந்து**
**பான்மைதருங் கற்பமிது பாத்மமெனும் பரிசுணர்ந்து.**

இ-ள்: முன்னிருந்த மனுக்கள் செங்கோல் நடத்தின மகிமைகளும் பௌஷியகாலத்தில் சுவேதவராக கற்பத்தில் உண்டான இராசாக்கள் தெய்வப்பிராமணப் பிரபத்தியும் செங்கோன்மைத் தழைப்புகளும் வர்த்தமானமாகிற மிகுந்த காலத்தின் அளவையும் விசாரித்து, கௌடதேச மனுவின் முந்தின குமாரன் வந்தமையும் விசாரித்து, இந்தப் பிரகாரத்திலே அடைவே வருகிற இந்தக் கற்பம் பாத்மகற்பம் என்னும்படியும் அறிந்து என்றவாறு. (39)

**அக்கால மணிகண்ட னாடலரு ளியகாலம்**
**எதிர்கால மெனக்கால மெய்தியவிக் காலத்து**
**மிக்காலுந் திரைத்தரைக்கு வேந்தாவான் வியன்கவுட**
**திக்கான்வெய் யவன்மர பிற் றிகழ்மனுவா மெனத் தெளிந்து.**

இ-ள்: அந்த இறந்தகாலத்திலே தமக்கும் பதஞ்சலிக்கும் தம்பிரானார் தமது ஆனந்தநிருத்தம் தரிசிப்பித்த கற்பம் எந்தக்கற்பம் என்று தலைதெரியாமல் போம்படிக்கு வந்துதோன்றின. இந்தப் பாத்மகற்பத்தில் மிகுந்து முழங்குந்திரைக்கடல் சூழும் உலகுக்கு இராசாவாவான் வியப்பினையுடைய கௌடதேசத்திலுள்ளவன் சூரியவமிசத்தில் ஐந்தாம் மனுஎன்ன விளக்க அறிந்து என்றவாறு. (40)

**மற்றவன்முப் புதல்வருள ரன்னவரின் முன்வந்த**
**வெற்றிமிகுங் குமரனிவ னெனவிளங்கி விழிகுளிரக்**
**கொற்றவன்சே யெதிர் நின்று குவித்தகரத் துடனடுங்கச்**
**செற்றமின்மா முனிமகிழ்ந்து சிங்கவன்ம னேயென்றான்.**

இ-ள்: அந்த மனுவுக்கு மூன்று குமாரர்கள் உண்டு; அவர்களில் முந்தின குமாரனான அதிவீரனானவன் இவன் என்று அறிந்து கண் குளிரப்பார்த்துக் கௌடதேச குமாரன் சன்னிதியிலே கம்பிதனாய் அஞ்சலியுடன் நிற்கக் குரோதம் நீங்கிய மகா இருடி அதிகப் பிரியத்துடனே ஏ சிங்கவன்மனே ! என்றார் என்றவாறு. (41)

அடியனே னென்றஞ்சி யாராத காதலுடன்
நெடிதுவிழுந் திறைஞ்சிவிழி நீர்ததும்ப நின்றவனைச்
சடிலமுடித் திருமுனிவ னழைத்திருத்தித் தனிவந்த
படிதெளியும் படியெமக்குப் பகர்வாயென் றருள் செய்தான்.

இ-ள்: பயப்பட்டு அடியேன் அடியேன் என்று ஒழியாத ஆதரத்துடனே ஏகாங்கமாக நமஸ்கரித்துக் கண்ணீர் ததும்ப நின்றவனைச் சடாமகுடமுள்ள வியாக்கிரபாத மகா இருடி முன் வந்திருக்கக் கற்பித்து, நீ தனியே வந்த பிரகாரத்தை நமக்கு அறியும்படி பகர்வாய் என்று அருளிச்செய்தார் எ-று. (42)

அன்னவனுந் தொழுதடியே னாசில்கவு டேசமனு
என்னுமவன் மைந்தனெனக் கெம்பியரு மிருவருளார்
நின்னுடைய திருவருளா னீள் பிறவிச் சிறை நீங்கப்
பொன்னடிசேர்தவமியற்றப் போந்தனன்யா னெனப் புகன்றான்.

இ-ள்: அப்படிச் சொல்லக் கேட்கப்பட்டவனும், அஞ்சலி பண்ணி, அடியேன் குற்றம் இல்லாத கௌடதேச மனுவினுடையபிள்ளை எனக்குத் தம்பிமார் இருவர் உள்; உம்முடைய கடாட்சத்தினாலே, அநாதியே தொடங்கி நீட்டித்து வருகிற பிறவிச் சிறை தீரத் திருவடியைச் சேரத்தக்க தவம் செய்வதற்கு வந்தேன்என்றான் என்றவாறு. (43)

மறைமுனிவ னதுகேட்டு மன்னுமனு வழிசெலுத்து
முறையுனதா யாவனுடலு முதிர்ந்ததுமா யிருந்தமையால்
பெறலரிய வரசாளும் பேறுபெற லாயிருக்க
நிறைதவ நீ புரிவனெனு நினைவு தகா தெனவுரைத்தான்.

இ-ள்: பிரம இருடியான வியாக்கிரபாதர் அதனைக் கேட்டு, நிலைபெற்ற மனுவழியில் செங்கோல் செலுத்தும் முறைமை உன்னுடையதாகி, அவனுக்கு விருத்தவயதுமாய் இருந்தபடியினாலே யாவருக்கும் பெறுதற்கரிதான அரசாளும் பேற்றைப் பெறலாயிருக்க, மிகுந்த தவசு நீ பண்ணுவேன். என்கிற நினைவு உனக்குத் தகாது என உரைத்தார் என்றவாறு (44)

## இரணியவன்மச் சருக்கம்

**அரசாளு முருவல்ல வதிலாசை யினியில்லை**
**விரைசாருந் தொடைமனுமேன் மேவினனே லெம்பியர்கள்**
**தரைசால நடத்தியிடத் தகுவரடி யேனுமொரு**
**கரைசாரும் படியழகார் கடைக்கணளித் தருளென்றான்.**

இ-ள்: என் வடிவு குற்றவடிவு ஆதலால் அரசாளும் வடிவு அல்ல; ஆகையினாலே அதில் ஆசை இனி இல்லை; மணம் பொருந்தின ஆத்திமாலையையுடைய மனு சுவர்க்கத்த னானால் என் தம்பிமார்கள் பூச்சக்கர மனுவிலும் செங்கோல் நடத்தத் தக்கவர்களே ; அடியேனும் சம்சார சாகரத்தில் ஆழாமல் அருட்கரை காணும்படிக்குக் கடாட்ச திருட்டியான தெப்பம் அளித்தருளும் என்றான் என்றவாறு.

மனுவிலும் 'தரைசால நடத்தியிடத் தகுவர்' என்பது தர்ம விடவனும் பிரியவதனுமாகிய மனுக்களின் பின் அக்கினித் திக்கு முதலான சத்ததீவில் ஏழு மனுக்களும் சம்புத்தீவில் மனுவின் குமாரர்களான ஒன்பது மனுக்களும் நவகண்டமும் ஆண்டதினும் பரதன் பார தவருஷமான ஒன்பதாம் கண்டத்தை தான் ஆண்டதினும் பரதன் குமாரர்கள் ஏழுபேரும் சமுத்திராதோதமான ஏழுத்தீவும் ஆண்டதினும் மகாத்தீபம் முதலாக எவ்வேழுமனுக்கள் ஆண்டதினும் நன்றாக மகாமேரு விட்டு மகாகிரி நாலுகுலப் பருவதங்கள் எட்டும் குருவருடம் முதல் பாரதவருடாந்தமான ஒன்பது வருட கண்டங்களில் உண்டான ஆன்மாக்களுக்கு ஒன்றில் ஒன்று குறை வற நடத்திப் பரத கண்டத்தில் கைலாயம் முதலான எண்ணிறந்த திருப்பதிகளும் கோடித் தீர்த்தங்களும் மிகவும் விளங்கப் பண்ணிப் பத்துத்திக்கில் உண்டான புவனேசுரர்களையும் காலாக்கினி உருத்திரர் கூர்மாண்டர் மகாபலர் பிரமாவிஷ்ணு உருத்திரர் வீரபத்திரர் பத்திரகாளி இவர்களையும் செபம் ஓமம் பூசை தியானங்களினாலே பிரியப்படுத்தி நடத்தத்தக்கவர் என்றமை கண்டு கொள்க. (45)

**இன்பாரக் கேட்டிவன்ற னெழிற்குறைதீர் வுறிலரசாம்**
**வன்பாரம் பொறுத்தற்கு மனமுடையான் போன்றிருந்தான்**
**பொன்பாவும் பொதுமேவும் புனிதனருள் புரிந்தனனேல்**
**அன்பாரும் பணிக்கு நமக் காளாவா னெனவுணர்ந்து.**

இ-ள் : சுகமாகக் கேட்டு இவனுடைய சரீரக்குற்றம் தீர்ந்தால் அரசுநிலையாம்; வலியபூபாரம் பொறுத்தற்கு மனம் உடையவன்போலே இராநின்றான்; ஆதலால் பொன்னம்பலத்தில் எழுந்தருளிய அநாதிசுத்தர் திருவுள்ளம் செய்வாராகில் அன்பு நிறைந்த திருப்பணி மகாபூசை நித்திய நைமித்தியங்கள் முதலானவை திரவியலோபமற நடத்துதற்கு இவனே நமக்கு ஆளாவான் என்று தீர அறிந்து எ-று. (46)

**வருமளவு நில்லென்று மற்றவனைக் கரை நிறுத்தித்**
**திருமலியும் பதஞ்சலிபாற் சென்றவனுக் கிவன்வரவு**
**பரிவினுட னுரைசெய்து பைம்பொனணி மணிமன்றில்**
**கருணை நடந் தொழுதற்குக் காலமுமா யுள்புக்கார்.**

இ-ள் : யாம் வருமளவும் இந்த வாவிக்காரையிலே நில் என்று சிங்கவன்மாவுக்குப் கற்பித்து, வைபவம் மிகுந்த பதஞ்சலி மகாஇருடியிடத்தில் சென்று,அவருக்குச் சிங்கவன்மா வந்தபடியைக் கிருபையுடனே சொல்லி, இருவரும் கூடிவந்து பொன்விளக்கும் மணிமன்றத்து வாசலில் நின்று காருண்ணிய நிருத்தம் நமஸ்கரிக்கக் காலமானது அறிந்து வாயிலுள் புக்கார் என்றவாறு. (47)

**பெருக்குவினை வலியார்கொல் பிழைப்பார்முன் பிழைப்பான**
**கருக்குழிவெஞ் சிறைநீங்கக் கடைக்கணளித் தருளாதே**
**இருக்குமொழி முனியகன்றா னினியெங்கே யெனநொந்து**
**திருக்குளத்தின் கரைநின்றான் சிங்கவரு மன்றிகைத்து.**

இ-ள் : ஒரு கன்மம் புசிக்கையில் அனேக கன்மம் ஆர்ச்சிக்கும் வினைவழியைத் தப்பிப் பிழைப்பார் ஆர்? முன் ஆர்ச்சித்த பிராரத்தசரீரமான கருக்குழியாகிய கொடுஞ்சிறை நீங்கக் கடைக்கண் பார்த்தருளாமல் பதவாக்கியப் பிரமாண ஞானஇருடி எழுந்தருளினார்; இனி, பிழைப்பு எங்கே? என்று மிக விதனப்பட்டுத் திருக்குளத்தின் கரையில் சிங்கவன்மன் திகைத்து நின்றான் என்றவாறு. (48)

**நடந்தொழவந் துள்புகுந்த நன்முனிவ ரிறைவனுக்கு**
**மடங்கலென நிகழ்மன்னன் மைந்தன்வர வுரைசெய்தால்**
**அடங்கலரு மருடருமோ முனிந்திடுமோ வென்றஞ்சி**
**முடிந்தபடி முடிகவெனத் துணிந்தனராய் முன்றொழுது.**

இ-ள் : ஆனந்தநிருத்தம் சேவிக்கக் காலம்பெற்று உள்புகுந்த சுத்தமுனிவர் தம்பிரானர்க்குச் சிங்கம்போல

விளங்கும் இராசகுமாரன் வந்தமையை விண்ணப்பம் செய்தால் அடங்காத பரிபூரணமான கடாட்சம் தருமோ? கோபித்து அருளுமோ? என்று பயப்பட்டு முடிந்தவாறு முடிக என்று துணிந்தவர்களாய்ச் சன்னிதியிலே நமஸ்கரித்து எ-று. (49)

**காலமறிந் தருமுனிவர் கருணையனே கவுடேசன்**
**பாலனணைந் தனனுடலிற் பழுதகற்றிப் பரதஞ்செய்**
**கோலமவன் றனக்கருளி யடிமைகொள வேண்டுமென**
**மேலவனை யிடம்பார்த்து விண்ணப்பஞ் செய்தார்கள்.**

இ-ள் : சமயம் அறிந்து பெரிய முனிவர் இருவரும் கருணாகரனே! கௌடதேச இராசகுமாரன் இங்கே வந்தான் ; அவன் சரீரத்தில் பழுதுநீக்கி ஆனந்ததிருத்தம் அவனுக்கும் புலப்படுத்தி அடிமைகொண்டருள வேண்டும் என்று, எப்பொருட்கும் மேலானவர்க்குக் காலம் அறிந்து விண்ணப்பம் செய்தார்கள் என்றவாறு. (50)

**தெண்டிரைசேர் சடையாருந் திருவுள்ள மகிழ்ந்தருளி**
**முண்டகவா வியிற்புக்கு மூழ்கமொழிந் தவனைமுனி**
**கொண்டுவரு கெனவருளுங் குலவுதிரு வருள்கேளா**
**அண்டர்தொழுங் கணநாத ரருளிப்பா டென்றார்கள்.**

இ-ள் : தெள்ளிய கங்கையலைசேர்ந்த சடாமௌலியரும் திருவுள்ளம் மகிழ்ந்தருளிப் புண்டரீகப்பொய்கையிலே ஸ்நானம் பண்ணச் சொல்லிக் கற்பித்து, அவனை நம் எதிரில் கொண்டு வாருங்கள் என்று அருளிச்செய்த திருவருள் கேட்டுத் தேவர்கள் தொழும் கணநாதர் அருளிப்பாடு என்றார்கள் என்றவாறு. (51)

**அருங்கருளிப் பாடியரோ டருமுனிவர் கடிதணைந்து**
**சிங்கவன்மா வுனக்கின்பத் திருந்துநடம் புரிந்தருள**
**எங்கள் பிரா னருள்செய்தா னெய்துகவென் றவனையெழில்**
**பங்கயப்பூந் தடமதனிற் படிகவென வுரைசெய்தார்.**

இ-ள்: அவ்விடத்துப் பொருந்திய கணநாதர்களுடனே பெரிய முனிவர்களும் சடுதியிலே பொருந்தி, சிங்கவன்மனே! உனக்கு ஆனந்தநிருத்தம் திருவுளம்பற்ற எங்கள் தம்பிரானார் அருளிச்செய்தார்; வா என்று அவனைப் பொற்றாமரைப் பொய்கையிலே ஸ்நானம்பண்ணச் சொல்லிக் கற்பித்தார்கள் என்றவாறு. (52)

**அருளதனாற் றடம்படியு மவன்கடன்மே லருக்கனென**
**விரவுபசுங் கானடைந்த மேருகிரி யெனவிளங்கி**
**இரணியமா முருவாகி யெழுந்ததுகண் டதிசயித்துப்**
**பரவியது பெயராக யாவர்களும் பயில்வித்தார்.**

**இ-ள்:** அருளாலே ஸ்நானம் பண்ணி எழுந்திருக்கும் அவன் கடல்மேல் உதிக்கும் ஆதித்தனைப்போலவும் பசுமை பொருந்தின காடுசூழ்ந்த மகாமேருவைப்போலவும் பிரகாசித்துப் பொற்சொரூபமாய் எழுந்திருந்தமை கண்டு ஆச்சரியப் பட்டு எல்லாரும் புகழ்ந்து அந்த இரணியவன்னமே பேராக இரணியவன்மன் என்று பொருந்தப் பேர் கற்பித்தார்கள் என்றவாறு. (53)

**மல்குபுலிக் கான்முனிவன் மற்றவன் வலச்செவியில்**
**நல்குதிரு வெழுத்தஞ்சு நவின்றவனைக் கொடுபோந்து**
**பல்குபுகழ்த் திருச்சிற்றம் பலமுன்பு பணிவித்தான்**
**செல்வனுமங் கவன்காணத் திருந்து நடத் தெரிவித்தான்.**

**இ-ள்:** நெருங்கிய புலிக்கால்முனிவர், அந்த இரணியவன்மன் வலச்செவியிலே முத்தி அளிக்கும் ஸ்ரீபஞ்சாக்கர உபதேசம்பண்ணி, அவனை அழைத்துக்கொண்டு போந்து அனந்தமுகமாக வேதம் புகழும் சிதம்பரநாதர் சன்னிதியிலே நமஸ்கரிப்பித்தார். சிதம்பரநாததராகிய ஆனந்தச்செல்வரும் அவ்விடத்திலே அந்த இரணியவன்மன் காண ஆனந்த நிருத்தம் புலப்படுத்தினார் என்றவாறு. (54)

**திருநடமுன் தெரிபொழுதில் திறலரசன் புளகமுடன்**
**அருவியிரு விழிபொழிய வானந்த பரவசனாய்**
**உருகியுள மிகத்துளங்கி யுரைகுழறி விதிர்விதிர்த்துக்**
**கரகமலஞ் சிரமுகிழ்ப்பக் காசினியின் மிசைவீழ்ந்தான்.**

**இ-ள்:** ஆனந்தநிருத்தம் முன் கண்ணுக்குப் புலப்படத் தெரிந்த பொழுது, அருள்விரனாகிய வீரராசன் புளகித்துடனே இரண்டு கண்ணும் நீர்த்தாரை கொள்ள, ஒழியாத சுகம்மேலிட்டு, இருதயம் உருகி, நடுங்கி, வாக்குத் தழுதழுத்து மயிர்சிலிர்த்து, கைத்தாமரை சென்னியில் குவித்துப் பூதலத்தில் வீழ்ந்தான் என்றாவறு. (55)

## வேறு

**மாண்டகு மனங்க ரைந்து மண்மிசை வீழ்ந்தி றைஞ்சி**
**நீண்டசெஞ் சடையாய் போற்றி நின்மலா போற்றி துன்பம்**
**மீண்டுகொண் டுயிரு மாயா வுடலையும் வேத கஞ்செய் (து)**
**ஆண்டவங் கணனே போற்றி யண்ணலே போற்றி போற்றி.**

**இ-ள் :** இரும்பிலும் வலியதாக எண்ணத்தக்க மனது நீராளமாய் உருகப் பூதலத்திலே தாழ்ந்து பணிந்து நின்று, செக்கர்வானம் போன்ற நீண்ட சடையாய்! போற்றி; மலரகிதனே! போற்றி; துன்பச்சிறையிலும் மீட்டுக்கொண்டு உயிரையும் மாயாசரீரத்தையும் தரிசனத்தால் வேதகம்பண்ணி அருளாக்கி ஆட்படுத்திக் கொண்ட அருட்கண்ணனே! போற்றி; சர்வ கர்த்தாவே! போற்றி போற்றி!! என்றவாறு. (56)

**அடவியிற் பிறந்து துன்பா ராக்கைகொண் டுழன்று வீழக்**
**கடவிய வென்னை மீட்டுன் கருணை வெள் ளத்த முத்தித்**
**திடமிகு மறைகள் காணாத் திகழ்திரு மன்றி லாடும்**
**நடநிலை காட்டிய யாண்ட நாதனே போற்றி போற்றி.**

**இ-ள்:** வனத்திலே பிறந்து துக்கமிகுத்த சரிரத்தைக் கொண்டு பாவத்தைப்பண்ணி உழன்று திரிந்து அதோகதியிலே வீழக்கடவனான என்னை அதில்போக்காமல் மீள்விட்டு, உன் காருண்ணிய சமுத்திரத்திலே அழுத்தி, அகம் பிரமம் என்கிற திடமிகுத்த வேதங்கள் காணாமல் எப்பொழுதும் எல்லாப் பதார்த்தங்களிலும் விளங்காநிற்கிற ஞானமயமான மன்றில் முயலும் ஆனந்தநிருத்தத்தின் உண்மையைக் காட்டி ஆட்கொண்ட ஆன்மநாயகனே! போற்றி போற்றி! என்றவாறு. (57)

**முன்பருந் தவங்கள் செய்தேன் முயங்கிய புயங்கங் காணப்**
**பின்பருந் தவத்தோ ரொத்தேன் பிறங்கிடைக் கிடந்த காலம்**
**என்பணி கொள்வா யென்னை யினிப்பணி கொள்வா யீறில்**
**அன்பருள் செய்வா யென்றென் றடியிணை தொழுது வீழ்ந்தான்.**

**இ-ள்:** நீ பொருந்தின நிருத்தம் காண்பதற்குப் பூத காலத்து அரிய தவங்களைச் செய்தேன்; பின்னாகிய பௌஷிய காலத்தல் பெரிய இருடிகளுக்கு ஒப்பானேன்; விளங்கப்பட்ட நடுகின்ற வர்த்தமானகாலத்தில் எலும்பு ஆபரணம் அணிந்தவரே! என்னை ஊழியம் கொண்டருள்வீராக; முடிவிலாத அன்பு அளித்தருளுவீராக என்று விண்ணப்பம் செய்து ஸ்ரீபாதங்களிலே நமஸ்கிரித்து வீழ்ந்தான் என்றவாறு. (58)

**இவ்வகை புகழ வெந்தை யிரணிய வன்ம வன்பின்**
**மெய்வகை யுவந்தோ மிந்த வியாக்கிர பாத னுக்கும்**
**பைவளர் பதஞ்ச லிக்கு மெமக்கும்வான் பணித வர்க்கும்**
**செய்கவென் றருளிச் செய்தான் தேவர்கள் தேவ தேவன்.**

இ-ள்: இந்த அடைவிலே தோத்திரம் செய்ய, என்னுடைய தம்பிரானாரும் இரணியவன்மனே! உன் அன்பின்வாய்மையை உவந்தோம்! இந்த வியாக்கிரபாதனுக்கும் விரிந்த படத்தையுடைய பதஞ்சலிக்கும் எமக்கும் தேவர்கள் பணியும் தில்லைவாழந்தணர்க்கும் ஊழியம் செய் என்று அருளிசெய்தார் தேவர்கள் தேவர் என்றவாறு. (59)

**ஆதிநா யகன ளித்த வருடலை மேற்கொண் டாடித்**
**தீதிலாக் கோயில் காலஞ் சேவித்துத் திருமுன் போற்றிக்**
**காதலால் வணங்கி யேத்திக் கருமூலக் கார ணன்பால்**
**கோதிலா முனிம கிழ்ந்து குறுகினான் குமர னோடும்.**

இ-ள்: சர்வாதிபயானவர் திருவுளம்பற்றின அருளைத் தலைமேற் கொண்டு கூத்தாடி, குற்றம் இல்லாத கோயிலின் காலமறிந்து சேவித்து, சன்னதியிலே தோத்திரம் செய்து பத்தியினாலே வணங்கி ஏத்தி, ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் அருகே குற்றம் இல்லாத வியாக்கிரபாத மகா இருடிஅதிபிரியத்துடனே இரணியவன் மனுடனே வந்து குறுகினார் என்றவாறு. (60)

**இரணிய வன்ம நாமுன் னிறைஞ்சியதீங்கை யீங்கால்**
**திருநடங் காணப் பெற்றோ மென்றவன் றனக்குச் செப்பி**
**மருமலர் தூவு வித்து வளர்புலிச் சுரத்து மன்னும்**
**ஒருவன திருதாள் போற்றி யுறவுற விறைஞ்சு வித்தான்.**

இ-ள் : இரணியவன்மனே ! நாம் முன்னம் நமஸ்கரித்து வழிபட்டது இந்த வஸ்துவையாக்கும்; இந்த முதலை வழிபட்டதினாலே திருநடம் காணப்பெற்றோம் என்று அவன் தனக்கு அனுக்கிரகித்து, மணம் இனிய புட்பாஞ்சலி செய்வித்துப் பெரிய வியாக்கிரேச்சுரத்தில் பொருந்தின ஒப்பில்லாதவனுடைய ஸ்ரீபாதபங்கயத்தைத் தோத்திரம் செய்து, உறவு பொருந்த நமஸ்கரிப்பித்தான் என்றவாறு. (61)

**ஆதியைப் பதஞ்ச லிக்கா மண்ணலை யர்ச்சித் தற்குப்**
**போதுக வென்றுகொண்டு போய்ப்பணி வித்துப் போந்து**
**காதலி னிற்பு குந்து கருதுப மன்னி யன்பின்**
**பேதை நீ பெறாது பெற்ற பிள்ளைகைக் கொள்க வென்றான்.**

இ-ள்: ஆதிவஸ்துவானவரைப் பதஞ்சலிக்குத் தேவனான சுவாமியை அருச்சனை செய்தற்கு வருகை என்று அழைத்துக்கொண்டு போய் பணிவித்து, மீண்டும் காதலுடனே பன்னசாலை புகுந்து, திரிகாலமும் கருதப்படும் உபமன்னியனுக்குப் பின்பு நீ பெறாமற்பெற்ற பிள்ளையை இரட்சித்துக்கொள்; பெண்ணே! என்று தம் பத்தினியை நோக்கிச் சொன்னார் என்றவாறு. (62)

**என்றவ னருளக் கேட்ட வீரணிய வன்ம னென்னும்**
**வென்றிகொள் குமர னன்னை வியன்மலர்ப் பாத மேத்தப்**
**பின்றிகழ் சடையா னாமம் பேசு நாட் பிறந்த நாளா**
**மன்றுளா ரெமக்க ளித்த மணியென மகவைக் கொண்டாள்**

இ-ன்: என்று அந்த வியாக்கிரபாதர் அருளிச்செய்யக் கேட்ட இரணியவன்மன் என்னும் வெற்றிப்பாடுடைய குமாரன், மாதாவினுடைய மணம் பொருந்தின செங்கமலம்போலும் பாதங்களை வணங்கிப் போற்ற, பின் தாழ்ந்து விளங்கின சடையானுடைய ஸ்ரீபஞ்சாக்கர உபதேசம் பண்ணின நாளே பிறந்தநாளாகக்கொண்டு மன்றுள் நீங்காதார் நமக்கு அளித்த பிள்ளை என்று வளர்த்துக்கொண்டாள் என்றவாறு, (63)

**அந்தமி லின்ப மெய்தி யரசிளங் குமர னன்பால்**
**மைந்தனாய் வாழ நாளின் மறைமுனி கருணை யாலே**
**புந்தியா லுவந்தி ருத்து புதல்வனை யழைத்தி ருத்திச்**
**சிந்தையா ருபதே சங்க ளருளினாற் செப்ப லுற்றான்.**

இ-ள்: முடிவில்லாத இன்பம் பொருந்தி இராசகுமாரன் மாதாவும் பிதாவும் தன்பேரில்வைத்த அன்பினாலே தானே பிள்ளையாகி வாழும்நாளில், வேதமுனி கிருபையினாலே மனம் களிகூர்ந்திருந்து பிள்ளையை அழைத்து முன்னே வைத்துக் கொண்டு சித்தபாகம் மிக உண்டாக்கும் அருளுபதேசம் பண்ணத் தொடங்கினார் என்றவாறு. (64)

**வாக்கொடு மனமி றந்த மன்னவ னெங்கு மாகி**
**நீக்கற நிறைந்தா னேனு நிகழ்தாரா ததனான் முத்தி**
**போக்கெளி தல்ல வென்றப் புனிதனே புந்தி செய்தெம்**
**பாக்கிய வகையா லெண்ணில் பதிமிகும் பாரில் வைத்தான்.**

இ-ள்: வாக்கு மனாதிதராகிய இறைவர் பரிபூரணமாய்ச் சடசித்துக்களில் நீங்காமல் நிறைந்தாரேயாகிலும் ஒருவர்க்கும் விளங்கத் தோன்றாது. ஆகையால், முத்தியிலே போக்குவது எளிதல்ல என்று அநாதிசுத்தராகிய அவரே திருவுளத்தடைத்து நாம் முன்செய்த புண்ணிய மிகுதியினாலே எண்ணிறந்த *திருப்படைவீடு நீண்ட பூமியிலே கற்பித்தார் என்றவாறு. (65)

**பதிகளெண் ணிலவுண் டென்று பகர்தரு மவற்று ளெண்ணல்**
**கதிதர வறுபந் தெட்டாங் கற்பித மானத்(து)**
**இதமலி தொகையி லோரா றேறுமா றாம வற்றுள்**
**அதிகமா மாரூர் காசி யம்பல மென்றா ரன்றே.**

இ-ள்: எண்ணிறந்த திருப்படைவீடு உண்டு என்று வேதாகமம் சொல்லும்; அவற்றுள் முத்திக்ஷேத்திரமாகத் தம்பிரானார் கற்பிக்கப்பட்ட அறுபத்தெட்டுத் தானங்களில் திருவுள்ளத்து மிகவும் பொருந்தினது இந்தத் தொகையில் ஆறு திருப்படைவீடு மேன்மையுள்ள தாயிருக்கும்; ஆறாகிய அவற்றிற்குள் மேளான திருவாரூர், திருகாசி, திருவம்பலம் என்று வேதாகமங்களின் வழிப் போனவர்கள் அநாதியே சொன்னார்கள் என்றவாறு. (66)

**மெய்மை நற் சரியை பத்தி விளங்கிய ஞான மேவா**
**எம்மையொப் பவர்க்கு முத்தி யிறையிலி யாக விட்ட**
**மும்மை நற் பதிக டம்மின் முளைத்தவர் முடிந்தோர் மூவாச்**
**செம்மலர்க் கழல்கண் டோர்கள் சிவத்தினைச் சேர்வ ரன்றே.**

இ-ள்: சத்தியமான சரியாபதம் கிரியாபதம் யோகபதம், பத்தி ஞான வைராக்கியம் பொருந்தாத எம்மை ஒப்பவர்க்கு அத்துவித முத்தியை இறையிலியாகக் கொடுத்த நல்ல மூன்று திருப்படைவீடுகளில், திருவாரூரில் பிறந்தவர்கள் காசியில் இறந்தவர்கள் சிதம்பரத்தில் மூப்பு இளமை இல்லாத செந்தாமரைமலர் போன்ற ஸ்ரீபாதம் சேவித்தோர்கள் அப்பொழுதே சிவசாயுச்சியம் பெறுவார்கள் என்றவாறு. (67)

---

* திருப்படைவீடு - கோயில்.

பிறந்தில மாரூர் தன்னிற் பேசிய காசி மேவி
இறந்தில மிரண்டு முத்தி யின்பமும் பின்பதாநாம்
உறைந்திடுந் தில்லை ஞான யோகமார் தான மாமால்
செறிந்தடி காணச் சீவன் முத்தராய்த் திரிய லாமே.

இ-ள்: திருவாரூரிலே பிறக்கப்பெற்றோம் இல்லை; மரணம் முக்தி என்று சொல்லிய காசியிலேபோய் மரிக்கப் பெற்றோம் இல்லை; இரண்டு திருப்படைவீட்டில் சனன மரண முக்திகளும் இப்போது சாதிக்க என்னில், நெடுங்காலத்துக்குபின் கைகூடும் ஆதலால் முதற்றரம் ஆகாது; நாம் வந்து பொருந்தும் தில்லைவனம் ஞானங்கூடி நிறைந்த தலமாதலால் அதில் பொருந்தின ஸ்ரீபாதம் தரிசனம் பண்ணில் அப்பொழுதே சீவன் முத்தராய் எங்கும் சீராட்டித் திரியலாம் என்றவாறு. (68)

அரிவையூ ரழிவி லூரென் றலகினூல் பரவ மேருத்
திருவிலூ ரிர தத் தேந்துஞ் செம்மையா னம்மை யாளும்
பரிவிலூர் புலிபோ னல்கிப் பருமைசெய்பெருமை யாலே
பிரிவிலூர் தனியூ ரெம்மூர் பெரும்பற்றப் புலியூ ராகும்.

இ-ள்: சிவசத்தியூர் என்றும், அழிவிலாதவூர் என்றும் எண்ணிறந்த வேதாகமங்களால் புகழப்பட்ட மகாமேரு என்னும் திருக்கைவில்லைத் தாம் ஊரும் தேரிலே நின்று தாங்கும் செம்பவளக்குன்றை ஒப்பானார் எம்மை ஆண்டுகொண்டருளும் பரிவினாலே பெரியபுலிபோலத் திருவுளம்பற்றி வியாக்கிரபாதன் என்று ஒரு பெயராக்கின திருவருளின் பெருமையாலே அக்கினியும் உட்டினமும் போலத் தமக்கு நீங்காத ஞான சொரூபமாகிய ஒப்பில்லாத ஊர் எம் ஊருமாகி, எம்முடைய பேராலே பெரும்பற்றப்புலியூர் என்றும் பேரானது என்றவாறு.

பெரும்பற்றப்புலியூர் என்பதற்கு *முன்னர் உரைத்த பொருளை உரைத்துக்கொள்க. (69)

* பாயிரம் 19 ம் பாடல் உரை பார்க்க.

**தன்றனி மன்ற மெய்றுஞ் சச்சிதா னந்த மாகும்**
**என்றரு மறைக ணான்கு மீரிரு திசையும் பற்றி**
**நின்றருள் பரவ நாத னேரிழை காண வேணி**
**பின்றிதழ் தரநின் றாடும் பெற்றி நீ பெற்றி யன்றே.**

இ-ள்: தனது ஒப்பில்லாத சபை சத்திய ஞானாந்தமாகும் என்று எப்போதும் அருமறைகள் நான்கும் நாலு திக்கும் பொருந்தி விடாமல் நின்று திருவருளை தோத்திரம் பண்ணச் சிதம்பரநாதரானவர் கிரியாசக்தி காண விரிந்த சடை பின்விளங்க அசையாமல் நின்று ஆடும் ஆனந்தத்தை நீ காணப்பெற்றாயன்றோ என்றவாறு. (70)

**பாவக மிறந்த நாதன் பரதமுன் பணிக்க வந்தான்**
**தேவர் க டேவ னென்னுத் திகழ்திருச் சின்ன வோசை**
**மேவிய போதி லன்பு மென்புமை யுணர்வு மெய்யும்**
**ஆவியு முருக நம்மை யாண்டவா காண்டி யன்றே.**

இ-ள்: மனோபாவம் கடந்த பரமசிவம் முன் ஆனந்த நிருத்தத்தைக் கட்புலனாக அளிக்க வந்தார். தேவர்கள் தேவர் என்று விளங்கின திருச்சின்ன ஓசை கேட்டமாத்திரத்திலே தன் அளவில் சினேகமும் எம்முடைய சரீரத்திலே என்பும் பஞ்சேந்திரிய விடயங்களில் சுட்டறியும் சரீரமும் இவற்றிற்குப் பிராணனாய் நின்ற நாமும் வகுப்பற்றுப் பொறியில் கலந்து உருகி ஆனந்தவெள்ளமாக நம்மை ஆண்டு கொண்டவகை நீ காணப்பெற்றாய் என்றவாறு. (71)

**தேசமார் மன்ற கன்று சிவகதி தேடி யுற்றால்**
**காசியி லில்லை தில்லை கதிதரு மென்ற ணைந்தால்**
**பாசம தகல முத்தி பணித்திடு மென்றா ரென்றால்**
**ஈசன தருளி ரக்கத் தெல்லையார் சொல்லு வாரே.**

இ-ள்: தட்சிணதேசத்திலுள்ளார் நிறைந்த ஞானமாகிய சபையை அணுகாமல் நீக்கி, காசிமான்மியம் கேட்டு முத்தி பெறச் சென்றால் காசி என்கிற அவிமுத்தத்தில் அவர்களுக்கு முத்தி இல்லை, காசிக்ஷேத்திரத்தில் உள்ளவர்கள் சிதம்பர மான்மியத்தைக்கேட்டு அடைந்து ஸ்ரீபாததரிசனம் பண்ணின மாத்திரத்திலே பஞ்சபாசம் அகலச் சிவசாயுச்சியத்தைக் கற்பித்திடும் என்று வேதாகமவழிச் சென்றோர்கள் சொன்னார் என்றால் சர்வேசுரனுடைய அருளின் காருணியத்தையார் அளவுபடுத்திச் சொல்லுவார்கள் என்றவாறு. (72)

**கன்றம ரன்பா லான்பால் கவர்தருங் கால மேனும்**
**வென்றிகொ ளம்பு வீழும் வேலையா யினுமி மைப்பில்**
**சென்றுறு மமைய மேனுத் திருவடி தெளிய நோக்கி**
**நின்றவர் காண நின்றார் நீள் பவ நீங்கி னாரே.**

இ-ள்: கன்று வாய்வைத்த மாத்திரத்திலே இரங்கிச் சுரந்த பசுவின் பால் கறக்கிற காலமாத்திரமாகிலும் வெற்றி கொள்ள எய்த அம்பு ஆறிவிழும் காலமாகிலும் ஒரு நிமிடம் சென்று பொருந்தின மாத்திரத்திலேயாகிலும் ஸ்ரீபாதம் விளங்கக் கண்டு, ஸ்ரீபாதத்திலே ஒருகால் கூடிநின்றவர்கள் எதிர்ப்பட்டு நின்று ஆர்த்தபிறவித்துயரால் நீட்டிப்பு நீங்கினார்கள் என்றவாறு. (73)

**ஆரண வுருவார் தில்லை யம்பல மெய்தப் பெற்றோர்**
**ஒருணர் வாவ ரென்று மொன்றல ரொன்றா ரல்லர்**
**காரண ராகா ரொத்த கருத்திலர் நிருத்த வின்பப்**
**பூரண ரவர்கள் வாழும் புவனமும் பொதுவா மன்றே.**

இ-ள்: வேதசொரூபமாயுள்ள தம்பிரானாருடைய தில்லையம் பலத்தைக் தரிசிக்கப்பெற்றவர்கள் பூரண ஞானமாவார்கள்; எக்காலும் வேதாந்தம் சொல்லும் சாயுச்சியம் போல ஒன்றாயிரார்கள் இரண்டறுத்திருக்கையாகிய பொருந்தியிருப்பார்கள்; பஞ்சகிருத்திய கர்த்தாக்களாகார்; அஃது ஏதென்னில், கிருத்தியம் பண்ணுவதற்கு இச்சை இல்லாதவர் ஆதலால் நிருத்தானந்த பூரணானுபவர்; அப்படிப்பட்ட அடியார் எந்த பூமியிலே திருவுளம் வாழ்ந்து எழுந்தருளினும் அவ்விடம் எங்கும் சுத்தஞானமயமாய் எ-று. (74)

**கண்ணுத லாடல் வெற்பிற் காரிகை காணு மிந்தப்**
**புண்ணிய மன்றெ வர்க்கும் பொதுவெனு மதனாற் சூதன்**
**தண்ணளிவியாதன் மைந்தன் சவுனகன் றனயனென் றென்(று)**
**எண்ணரு முனிவர் தில்லை யெல்லையி னெய்தி னார்கள்.**

இ-ள்: பரமேசுரனுடைய நிருத்தத்தை மலையரையன் புத்திரியாகிய பரமேசுவரி காணும் இந்த ஞானமயமாகிமன்று யாவர்க்கும் பொது என்பதனால் சூதமகாஇருடி, காருணியராகிய வியாசர், அவர் புத்திரர் சுகர், அவர் புத்திரர் சௌனகர் என்று பின்னும் எண்ணிறந்த முனிவர்கள் தில்லையெல்லையை நமஸ்கரித்து முத்தரானார்கள் என்றவாறு. (75)

**மார்கழி யாதி ரைத்தாம் வருவிழா வெழுதல் போற்றிச்**
**சீர்மலி கமல வாசந் திகழ்சிவ கங்கை யாடிப்**
**பார்திகழ் பாத மேத்திப் பணிந்தரு ளணைந்து சிந்தை**
**ஆர்தரு மன்பு நீடி யவருநற் றவர்க ளானார்.**

இ-ள்: மார்கழிமாதம் திருவாதிரை நாளை உடைத்தாய் வரும் திருவிழாவில் பெருமான் எழுந்தருளுதலைப் போற்றிச் சேவித்து, இலக்குமிகரமான பொற்றாமரை மணம் கமழும் சிவகங்கையில் ஸ்நானம்பண்ணி, சர்வலோகங்களும் விளங்கின ஸ்ரீபாதத்தைப் பரவி நமஸ்கரித்து, அருள்பொருந்திச் சித்தம் நிறைந்த அன்புபெருகி, அந்த ஆன்மாக்களும் எண்ணிறந்த முத்தரானார்கள் என்றவாறு. (76)

**நற்றவ மைந்த வெந்தை நயந்தபே ரருளா னாமும்**
**உற்றதிங் கலர்கள் கொய்வா னோங்குகோங் காதியேற**
**வெற்றிகொள் வரத்தா லிந்த வியாக்கிர பாத மேன்மை**
**பெற்றன மிதனாலெல்லாப் பெருமையும் பெற்றா மன்றே.**

இ-ள்: நல்ல தவசுடைய மைந்தனே! என்னுடைய தம்பிரானார் விரும்பிய திருவருளினாலே நாமும்பொருந்தினது இவ்விடத்துத் திருப்பள்ளித்தாமம் எடுப்பதற்கு உயுர்ந்த கோங்கு சண்பகம் முதலான விருட்சங்களில் ஏற, மேலான வரத்தினாலே இந்த வியாக்கிரபாதன் என்கிற மேன்மைபெற்றனம்; இதனாலே விதிப்படி மலர் எடுத்து அருச்சித்து, எல்லையில்லாத எல்லாப் பெருமையும் பெற்றோம் எ-று, (77)

**உன்னரு முனக்கு முன்னா மோங்குப மனிய னென்னும்**
**மன்னுநம் புதல்வன் முந்த மாதுலன் மனைப்பா லுண்டு**
**பின்னையிங் கெய்தி நம்பாற் பெறாதுபால் பெருமா னோடு**
**பன்னரு மன்பு நீடிப் பாற்கட லருளாற் பெற்று.**

இ-ள்: மனம் வாக்குக்கு எட்டாத அருட்புதல்வனான உனக்கு முன்பாகச் சனித்த விசிட்டமான உபமன்னியன் என்கிற பேர் நிலைபெற்ற நம்முடைய பிள்ளை ,முன்னர் மாமனாராகிய வசிட்டர் ஆச்சிரமத்திலே சுரபியின் பால் குடித்து வளர்ந்து, பின்னர் இங்கே வந்து நம்முடைய இடத்தில் பால் பெறாமல் தம்பிரானாரிடத்து மிகுந்த அன்பினாலே அழுது அவர் திருவருளினாலே திருப்பாற்கடல் பெற்று உண்டு தெவிட்டி என்றவாறு. (78)

ஆண்டிடு சாபங் கொள்ளு மவரையுந் துவரை யும்போய்க்
காண்டுமென் றாண்ட ணைந்தக் கரியவன் முடிமேற் பாதம்
நீண்டவன் புடனே வைத்து நீலகண் டரையு நல்கி
ஈண்டுவந் தகன்றா னின்னு மெய்துவ னின்று நாளை.

இ-ள்: பிருகு மகாஇருடி ஆச்சிரமாகிய அவ்விடத்தே இட்ட சாத்தைக் கைக்கொண்ட மகாவிஷ்ணுவின் நவாவ தரமான கிருஷ்ணனையும் துவாரகாபுரியிலே சென்று சித்த பாகம் அறிவோம் என்று அவ்விடத்திலே பொருந்தி, அந்தக் கிருஷ்ணன் சிரசின்மேல் மிகுந்த காருணியத்தினாலே திருவடி வைத்து விசேடதீட்சைபண்ணி, நித்தியார்ச்சனைக்கு நீலக்கண்டர் என்கிற சிவலிங்கப் பெருமானையும் எழுந்தருளப்பண்ணிக் கொடுத்து இவ்விடத்தில் வந்து பின்னையும் போனான்; இன்னமும் இன்று நாளைக்குள்ளே வருவன் என்றான் எ-று. (79)

பங்கமில் புகழ னந்தன் பதஞ்சலி யாகி யன்பால்
இங்கணைத் தெம்மோ டாகி யிருந்தபின் னிறையெ மக்கு
மங்கல நடமுந் தெய்வ மன்றமும் வழங்கி வானோர்
தங்களை யெங்க ளோடுந் தகும்பணி தந்து கொண்டான்.

இ-ள்: குற்றமற்ற புகழையுடைய சேடன் பதஞ்சலி வேடமாய் அன்பால் இங்கு வந்து எம்முடனே கூடியிருந்த பின் இறைவனே எங்களுக்குச் சிரேட்டமான ஆனந்தநிருத்தமும் திவ்வியமான ஞானாம்பரமும் புலப்படுத்தி, தேவர்களையும் எங்களுடனே கூட ஊழியம்பண்ணத்தக்கதாக மேன்மைதந்து அடிமைகொண்டார் என்றவாறு. (80)

சயமலி சாம வேதத் தலைவரி லொருவ னான
செயிமினி முனிவ னண்ணித் திருநடந் தொழுது வாழ்ந்து
வியன்மலர்ப் பாத மன்பால் வேதபா தத்த வத்தால்
நயமிகப் பரவி யின்ப நண்ணினா னெண்ண மார.

இ-ள்: சிவப்பிரீதி மிகுந்த சாமவேதியர்களில் ஒப்பில்லாத சைமினி மகாஇருடியானவர் வந்து சிதம்பரநிருத்தம் தொழுது பெருவாழ்வுபெற்று, மேன்மையாகிய செங்கமலப் பொற்பாதங்களைப் பத்திசுரபுமாக வேதபாதத் தவத்தினால் இனிமை மிகத் துதித்துப் பரமானந்தத்தைப் பொருந்தினார் நினைவின் படியே மிக என்றவாறு. (81)

**துற்கட னென்றோர் பாவி துணிதரு வணிக னென்போன்**
**கற்கட மனைய சிந்தைக் காதகன் மாக மாதத்**
**திற்கட னாகு நாளுற் றிறைதகு துறையிற் றில்லை**
**நற்கடற் படிய முத்தி நண்ணினா ரெண்ணி லார்கள்.**

இ-ள்: கொலைக்குத் துணிந்துள்ள மகாபாதகனான துர்க்கட வணிகன் என்கிற பெயரையுடைய கள்ளச்சம்பாகாரன், மலை மருங்கில் சுரவழி ஒத்த சித்தத்தையுடைய கொடுந் தொழிலாளன் மாசிமாதத்தில் நட்சத்திரமாகிய மகத்தில் பொருந்தி,தம்பிரானார் தீர்த்தம் செய்தருளுகிற பாசம் அறுத்தான் துறையில் ஒருநாள் சிதம்பரக்ஷேத்திரசமீபமான நற்கடலிலே ஸ்நானம் செய்ய, எண்ணிறந்த பேர் அவனுடன் முழுகி முத்திபெற்றார்கள் என்றவாறு. (82)

**மாசிலா வுலகிற் றீர்த்தம் வானவ ரனைய தில்லை**
**ஆசிலா வேத கஞ்செ யகிலவா விகளெ வர்க்கும்**
**தேசமா ரயன்மால் போல்வ திகழ்திருக் குளமெ வர்க்கும்**
**ஈசனா மென்ன மேலா யெளிதுமா யிருக்கு மன்றே.**

இ-ள்: குற்றமற்ற உலகங்களில் கங்கை காளிந்தி காவிரி முதலான தீர்த்தங்கள் இந்திரன் முதலான தேவர்களுக்கு ஒக்கும்; சிதம்பரதீர்த்தத்தில் குற்றமற்ற பரிசவேதியை எவர்க்கும் பண்ணுகிற நவதீர்த்தம் முதலான எல்லா வாவிகளும் பிரகாசம் மிகுந்த பிரம விஷ்ணுக்கள் இருடிகளை ஒக்கும்; அருள் விளங்கும் புண்டரீகப்பொய்கை தேவர்கள் விஷ்ணுக்கள் பிரம இருடிகள் யாவர்க்கும் சர்வேசுவரனைப் போலக் கங்கை முதலான தீர்த்தங்களுக்கும் சிதம்பர தல நவத்தீர்த்தங்களுக்கும் தான் கர்த்தாவுமாய் அருட்டண்ணளியே வடிவு ஆதலால் தன்னை அடைந்தோர் யாவர்க்கும் எளிதாயிருக்கும் என்றவாறு. (83)

**கங்கைகா ளிந்த பொன்னி கன்னியா திகள்வ ணங்கும்**
**பங்கய வாவி தானே பழுதுக ளகற்ற வற்றால்**
**இங்குறின் னவைக ழித்த விலஞ்சியிக் கனக மேனி**
**மங்கல மன்று ளாடு மன்னவ னருளா மன்றே.**

இ-ள்: கங்கை, காளிந்தி, காவிரி, கன்னி, சரசுவதி, நர்மதை, யமுனை முதலான சர்வ தீர்த்தங்களும் தங்குமிடத்திலே உண்டான பாவங்கள் போக வணங்கும் புண்டரீக புட்கரணிதானே சர்வ

ஆன்மாக்களிடத்திலும் உள்ள பாசச் சேதம் பண்ணவல்லது ஆதலால் இவ்விடத்து உன்னுடைய தேகக் குற்றத்தை நீக்கி இந்தப் பொற்றாமரைத்தீர்த்தம் பொன்வடிவைத் தந்தது, மன்றில் நிருத்தஞ் செய்தருளும் சர்வேசுவரனுடைய அருளாகும் என்றவாறு. (84)

**மன்னவ னெமக்க ளித்த வாழ்வுகேள் வழாத மைந்த**
**கன்னலுஞ் சுவையும் போன்மெய்க் காட்சியுங் கருத்தி லின்பும்**
**அன்னிய மின்மை காட்டி யகம்புற மென்றி ரண்டு**
**பின்னபி லருளுந் தந்த பெற்றியார் பெற்று ளாரே.**

இ-ள்: தேவராசன் நமக்குத் திருவுளம்பற்றின பெரு வாழ்வை ஒழுக்கம் நீங்காத மைந்தனே! கேட்பாயாக ; சர்க்கரையும் சுவையும் போலக் கொண்ட திருமேனியும் ஈசுவர தியானானுபவமான ஆனந்தக்களிப்பும் அன்னியமின்மையைப் புலப்படுத்தி உள்ளென்றும் புறம்பென்றும் இரண்டறச் சுட்டி உண்டாக்கி அறிகிற ஆன்மஞானத்தை நீக்கி ஒரு நீர்மையாக்கும் அருளே நமக்கு வடிவாகத் தந்த பேற்றை நீ பெற்றதே அல்லது மற்று யாவர் பெற்றுள்ளவர் என்றவாறு. (85)

**இன்றெமக் கிறைவன் மத்தி யிகபரத் தெளிதி னல்கும்**
**மன்றிது வென்று தொல்லை மறைமுனி யுபதே சங்கள்**
**அன்றருள் செய்ய மைந்த னருவிகண் சொரிய நைந்து**
**சென்றுமுன் பணிந்து தந்தை சேவடி சென்னி வைத்தான்.**

இ-ள்: இப்பொழுது நம்முடைய சுவாமியானவர் முத்தியைப் பரத்திலும் இகத்திலும் எளிதாகத் திருவுளம்பற்றும் சபை இது என்று பழைய மறைமுனிவர் சாத்திரவித சம்பிரதாயவித அனுபவவிதமான உபதேசங்களை அப்பொழுது அருளிச்செய்ய, இரணியவன்மன் விழி நீர்த்தாரைகொள்ள நெக்குருகி எதிர்சென்று அட்டாங்கமாக நமஸ்கரித்து, பிதாவாகிய வியாக்கிரபாதர் சேவடிகளைத் தன்னுடைய சிரசிலே வைத்துக்கொண்டான் என்றவாறு. (86)

**சென்னிசேர் பாதங் கண்ணுஞ் சிந்தையுந் திகழ வைத்து**
**முன்னுற வணங்கி யேத்தி முகமிக மலர்ந்து ஞானம்**
**என்னையும் பொருளா நல்கிற் றிறைவறின் கருணை யென்று**
**பன்னரு மன்பு நீங்காப் பரிவுளம் பெருகு வித்தான்.**

இ-ள்: சிரசினிடத்துப் பொருந்திய சீர்பாதத்தைக் கண்களிலும் இருதயத்திலும் விளங்க வைத்து மீளவும் சன்னிதியில் நமஸ்கரித்துத் தோத்திரப்பண்ணி முககமலம் மிகவும் மலர்ந்து, ஆதியந்த சூனியமாயிருக்கிற ஞானத்தைப் பொருளல்லாத என்னையும் பொருட்படுத்தித் திருவுளம்பற்றினது தேவரீர் காருணியசத்தியே அன்றி வேறில்லை என்று தன்னிடத்தில் உண்டான உரையிறந்த அன்பினாலே ஒழியாமல் பிதாவினும் களிகூரப்பண்ணினான் என்றவாறு. (87)

ஆயபே ரருளால் வாழ மரசிளங் குமர னாளும்
தூய நீர்த் தடம்ப டிந்து துணைவனைத் தொழுது தந்தை
சாயைபோ லமர்ந்தனந்தன் றாள்களும் பணிந்தவர்கங்கு
ஏயுமா றேவ லுஞ்செய் திளங்கதிர் போலி ருந்தான்.

இ-ள்: இப்படிக்கு உண்டாகிய பேரருளினாலே பெரிய வாழ்வுபெற்று வாழும் வாலிபனான இராசகுமாரன் நாள் தோறும் அருள்நீர்ப்பொய்கையில் படிந்து, ஆன்மசகாயனைத்தொழுது, பிதாவுக்கு நிழல்போல் பொருந்தி, பதஞ்சலி மகாஇருடி சீர்பாதசேவையும் பண்ணி, அவர்கள் இருவருக்கும் பொருந்தின பணிவிடையும் செய்து, பாலசூரியனைப்போலப் பிரகாசித்திருந்தான் என்றவாறு. (88)

### வேறு

இங்கி வன்றிகழ் வெய்து நாள்மனு
என்னு மன்னன்வ சிட்டனைச்
சிங்க வன்மனை யென்னை நீதிசெ
லுத்து மாறுசெ லுத்துகென்(று)
அங்க வன்றன்ம னந்தி ருத்திய
ருத்தி யோடு பரித்துமெய்ச்
சங்க மங்கழி வித்த ரும்புகழ்
தாவி லாவுட லாயினான்.

இ-ள்: இவ்விடத்து இந்த இரணியவன்மன் அருள் வளக்கம் பொருந்தின நாளிலே கௌடபூமியில் மநுவிந்திர இராசா வசிட்டமகாஇருடியைப் பார்த்து 'என்னைக்கொண்டு மநுநீதி சோராமல் நடத்தினாற்போல, சிங்கவன்மனைக் கொண்டு செங்கோல்நடத்துவீராக' என்று அவ்விடத்தில் அந்த இருடி

அநுமதிகொண்டு மிகுந்த ஆதாரத்துடனே எடுத்துக் கொண்டிருந்த போக சரீரத்தைக் கழிவித்துக் குற்ற மற்ற பெரிய புகழுடம்பை அதிட்டித்திருந்தான் எ-று. (௮௯)

**இன்னு யிர்க்குல மானொ டண்ணலெ டுத்து விட்டது றக்கநேர்**
**மன்னு யிர்ப்படை பின்னொ டர்ந்தும யான வாழ்வுமு டித்துதல்**
**பொன்னி லக்கமில் கூறை யாதிபொ ழிந்த ழிந்துவ சிட்டனீ (டு)**
**உன்னமைச்சர்கள் மன்னர்மைந்த ருடன்கடன்செய் திருந்துழி.**

இ-ள்: இனிய உயிரொத்த குலஸ்திரீயுடனே இராசாவும் உடலெடுத்து விட்ட நீக்கத்துக்கு நேராக நிலைபெற்ற அகத்தடிமை புறத்தடிமை முதலாயினோர் பின் தொடர்ந்து போய் மயானத்தொழில் முடித்து நல்ல கனகதானம், இலக்க மில்லாத வத்திரதானம், பூதானம், கோதானம், கன்னிகாதானம் முதலியவையும் கொடுத்துக் கையேற்பு முதலானவையும் கொடுத்து வசிட்ட மகாஇருடி நெடுங்காலத்திலுள்ள மந்திரிகள் குறுநில அரசர்கள் இராசகுமாரர் இருவருடன் கூடித்தாம் செய்யவேண்டிய கடமைகளைச் செய்திருக்கும் காலத்தின் என்றவாறு. (௯0)

**யாது செய்குவ மென்ன மைந்தர்களெந்தை முந்த விசைந்ததே**
**மேத கும்படி செய்க வென்ன விசிட்ட னான வசிட்டன்யான்**
**நீதி தங்கிய சிங்க வன்மனை நேடி யிங்கணை விப்பனீர்**
**தீத கன்றிட வென்றி செய்திரு மென்று தென்றிசை**
**செல்குவான்.**

இ-ள்: இனிமேல் செய்யும் காரியம் எது என்று யாவரும் வினவ, குமாரர் இருவரும் எம்முடைய பிதாவுக்கு முந்தப் பொருத்தமானதே பெருமைதரும்படிச் செய்தருளு வீராக என்ன, வசிட்ட மகா இருடி நாம் போய்த் தேடி மனுநீதி பொருந்திய சிங்கவன்மனை அழைத்துக்கொண்டு இங்கே வருவோம்; நாம் வரும் அளவும் நீங்கள் குற்றம் நீங்கப் பகை தீர்த்து இருங்கள் என்று தென்திசை நோக்கிச் செல்லுவார் என்றவாறு. (௯1)

**அங்க வங்கம டைந்துகங்கை படிந்த தன்கரை யானடந்து**
**எங்கு நாடிவ ளங்கொள் காசியி றைஞ்சி விந்தம கன்றெழில்**
**தங்கு மாளுவ குச்ச ராதி தகுந்தெலுங்கு கடந்து நற்**
**சிங்க வன்ம னிருந்த வெல்லை யறிந்து தில்லை செறிந்தனன்.**

இ-ள்: அங்க வங்க தேசங்களைப் பொருந்திக் கங்கா ஸ்நானம்செய்து, அதன் கரைவழியாகச் சென்று எவ்விடமும் தேடி, மரணமுத்தி க்ஷேத்திரமாகிய வளமை குடிகொண்ட காசியை நமஸ்கரித்து, விந்தகிரியைக் கடந்து, அழகு பொருந்திய தகுதியுள்ள மாளவ குச்சராதி தெலுங்கு தேசங்களையும் கடந்து , நல்ல சிங்கவன்மா இருந்தவிடம் விசாரித்து அறிந்து தில்லைவனத்தைப் பொருந்தினார் என்றவாறு. (92)

**மன்னு மாறயர் வெம்மை யாற வசிட்டன் வண்கள வார்நிழல்**
**தன்னி னாதனை யெய்து மாறுணர் தண்பு லிச்சரணத்தனீ**
**முன்ன மேவுக யானு மிந்த முயக்கு பூசை முடித்துவந்(து)**
**உன்னொ பாகுவ னென்ன மைந்த னுவந்து சென்று பணிந்தனன்.**

இ-ள்: வசிட்டமகாஇருடி நிலைபெற்ற வழி நடந்த விடாய் நீங்கும்படி நல்ல திருக்களா நீழலில் பொருந்தின தம்பிரானாரை நமஸ்கரித்து இருக்குமதனை அறிந்த குளிர்ந்த காருண்யத்தையுடைய வியாக்கிரபாதர்,நீ முன்னே போ; யானும் இந்தப் பூசையை முடித்துக் கடுகவந்து உன்னுடனே கூடுவன் என்று அநுக்கிரகிக்க, இரணியவன்ம குமாரனும் மனப்பிரியத்துடனே சென்று வசிட்ட மகாஇருடியை நமஸ்கரித்தான் என்றவாறு. (93)

**தொழுதல் கண்டவ னென்ற றிந்துமொர்**
**தொன்மை நன்மைக ளின்மையால்**
**வழுவி லாமக னார்த டம்புயம்**
**வாழி யேயென மாமுனி**
**மொழிக ளுந்தரு கின்மை யாலமு**
**முன்பு துன்பு குவிப்பதொத்(து)**
**இழவ றிந்திடு மாக வீழ்ந்திடர்**
**ஏறு மாதரை கீறினான்.**

இ-ள்: நமஸ்கரித்தைக் கண்டு சிங்கவன்மன் அருளினாலே இரணியவன்மனானதை அறிந்திருக்கையிலும் முன்பு போல ஓர் ஆசீர்வாதம் பண்ணாமையால் குற்றமில்லாத உம்முடைய மகனாகிய மநுவின் வெற்றிப் புயங்கள் வாழ்ந்தனவோ என்று இரணியவன்மன் கேட்க, வசிட்ட மகாஇருடி பிரதி யுத்தரம் சொல்லாமல் கிலேசிப்பதற்கு முன்னாகத் துன்பங்களைக் கூட்டுவதொத்துப் பிதாவின் கிலேசம் இரணியவன்மன் அறியும்வண்ணம் தலையிறக்கிட்டுத் துக்கம் அவனை *ஆபாத மத்தகம் அளவாக ஏறும்படித் தரையைக் கீறினார் என்றவாறு. (94)

*1. ஆபாத மத்தகம் என்பது பாதம் முதல் சிரசு அளவும் எனக்கண்டு கொள்க,

துன்ப மெய்திய வாறு ணர்ந்தணை தொல்பு லிச்சாரணத்தனிள்
வன்ப ணிசனொ டெய்தி நீதி வசிட்ட னோர்வர வந்துதாம்
முன்பு செய்வகை யாலு ஞான முதிர்ச்சி யாலு முயங்கினோர்
அன்பு நீடிய தத்த மிற்றிக ழாத ரங்கள் பெருக்கினார்.

இ-ள்: இரணியவன்மகனுக்குத் துக்கம் வந்தபடியை அறிந்து வந்த பழைய வியாக்கிரபாத முனிவர், இனிய வலிய பணீந்திரனாகிய பதஞ்சலியுடனேகிட்டி, நீதிவழுவாத வசிட்டரும் தாங்களும் ஒருவருக்கு ஒருவர் எதிரே வந்து தாம் முன்பு செய்யும் பிரகாரத்தினாலும் ஞானாதி சயத்தினாலும் ஞானதிசயத்தினாலும் கூடின மூவரும் தம் தம்முடைய சினேகாதிசங்களினாலே தங்களில் தாங்கள் விளங்கச் செய்யும் அங் கீகாரங்கள் வந்திப்பித்தார் என்றவாறு. (95)

மன்னு நற்றவர் தம்மி லுய்த்தபின்
மைந்தன் வந்து வணங்க நாம்
என்னு ரைத்து முடிந்த வாறிது
என்று தந்தை யெடுத்துமேல்
மின்னி லைத்துள *தண்ணிர் மொக்குளும்
வேறி தற்குவ மித்திடில்
தன்னை யொத்துள தென்னி லாருடல்
தஞ்ச மாநினை நெஞ்சரே.

இ-ள்: நிலைபெற்ற நல்ல இருடிகள் தம்மில்கூடியிருந்த பின்பு இரணியவன்மா வந்து நமஸ்கரிக்க,நாம் என்ன சொல்வோம் மு டிந்தவாறு இந்தப் பிரகாரமாயிருந்தது என்று சொல்லி வியாக்கிரபாதர் மார்பார எடுத்து அணைத்து ஆகாசத்தில் தோன்றி அழியும் மின்னலை யும் நிலைபெற்ற தண்ணீரில் தோன்றி அழியும் நீர்க்குமிழியையும் சரீரத் துக்குத் திருட்டாந்தமாகச் சொல்லில் திருட்டாந்தம் ஆகாமல் தன்னையே தான் ஒத்திருப்பது ஆதலால் இந்த உடல் நிலையாயிருக்க தக்கது என்று நினைக்கத்தக்கவர்கள் யார்? என்றவாறு.

நீர் என்பது 'நிர்' எனக் குறுகிற்று. (96)

* தன்னின் எனவும் பாடம்.

**பிரம ரேமுத லான தந்தி பிறங்கெ றும்பிடை பேணுசீர்**
**உருவி னோர்களில் யாரு ளோர்சரு கோடு**
**வாடையொதுக்வுற்று**
**இரிய நூறிய கூறை மாருத மென்ன வல்வினை நல்குமால்**
**அருளி லோரென நோத காதென வாறு மாமுனி கூறினான்.**

இ-ள்: பிரம தேவர்கள் முதலாக யானை எறும்பின் இடைப்பட்ட வாழ்வுபெறும் சரீரத்தை உடையவர்களில் யாவர் நசியாதவர்கள் ? வீசும் காற்று, பல சருக்கையும் ஓரிடத்திலே ஒதுக்க, அதனைச் கூறைக் காற்றானது பறக்கடிப்பது போல ஒரு வினையால் இவ்வுடல் புத்திர மித்திர களத்திராதிகளுடனே கூடியிருக்க, மேல் ஒருவினை நேரிட்டு அந்தப்பாசக் கூட்டத்தை நீக்கும்; ஆதலால், அருளில்லாதவரைப் போல விதனப்படாதே என்று கிலேசம் நீங்கும்படி வியாக்கிரபாத முனி அருளிச்செய்தார் என்றவாறு. (97)

**மருவ ரும்புகழ் வாய்மை நீடு வசிட்டன் மாதவ மன்னிநீர்**
**இருவரும்பெறு நன்மை பொன்னுரு வெய்து மைந்தனும் யாமு மிப்**
**பொருவ ரும்புவி யோரு மேலமர் போக ரும்பிரி யாவரும்**
**கருவ ரம்பு கடக்க நல்கினி ரென்று நன்றி கதித்தனன்.**

இ-ள்: அண்ட ஒண்ணாத தவமும் சத்திய வாசகமும் என்றும் நீங்காத வசிட்டமாமுனி, மகத்தான தவசுகளைப் பண்ணி நீங்கள் இரண்டு பேரும் பெற்ற பெருவாழ்வைப் பொன்னுருடைந்த இராசகுமா ரனும் யாமும் இந்த ஒப்பில்லாத பூமியில் உள்ளவர்களும் சுவர்க்கத்தில் உண்டாகிய தேவர்களும் ஒருக்காலும் நீங்காத கருக்குழிச் சிறைவரம்பு கடந்து நீங்கத்தக்கதாக அனுக்கிரகம்பண்ணினீர்கள் என்று நல்ல வார்த்தை சொன்னார் என்றவாறு. (98)

**தில்லை யெல்லை புகுத்தி வன்பெறு**
**சீர்கொள் நீடருள் கூறிலோர்**
**எல்லை யில்லை வசிட்ட நீயும்**
**இறைஞ்ச வெய்துக வென்றுதல்**
**தொல்லை மல்ல விலஞ்சி மேவு**
**தொழுந்த கைப்புன லாடுவித்(து)**
**ஒல்லை மல்கிய மன்ற வாய்மை**
**உணர்த்தி முன்பணி வித்தனன்.**

இ-ள்: இந்தச் சிதம்பரக்ஷேத்திரத்திலே வந்து புகுந்து இவன் பெற்ற சீர்சிறந்த பேரருளை வகுத்துச்சொல்ல முடியாது; வசிட்டரே!

நீரும் தம்பிரானாரை நமஸ்கரிக்க வாரும் என்று நல்ல பழைய வளப்பத்தையுடைய தடம்பொருந்தின அருள்வடிவான தீர்த்தச்செல்வத்தில் ஸ்நானம் செய்வித்தும் உடனே பரிபூரணமாகச் சிதம்பரத்தினுடைய ரகசியத்தின் உண்மையை விளங்க உபதேசித்தும் தம்பிரானார் சன்னிதியில் நமஸ்கரிப்பித்தார் என்றவாறு.

இதில் இவன் என்றது இரணியவன்மாவை. வாய்மை என்றது ஞானதீட்சை பண்ணின முறைமையை. (99)

**கரவி லாடல் வணங்கி வண்கரு மூல கார்ண னாரணப்**
**பொருவில் பாத மிறைஞ்சி நீடு புலீச்சு ரந்தொழு தெங்கணும்**
**பரவி நீடு வசிட்ட மாமுனி பாய்பு லிச்சர ணத்தன்வாழ்**
**விரவு மாச்சிர மத்தின் மேவி விருந்த ருந்தி யிருந்தனன்.**

இ-ள்: திரோதானம் இல்லாத ஆனந்தநிருத்தத்தை நமஸ்கரித்து வளவிய கருமூலகாரணன் என்று திருநாமம் பொருந்திய ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானாரது வேதச்சிலம்பு அணிந்த ஒப்பில்லாத ஸ்ரீபாதங்களை நமஸ்கரித்தும்,அந்தத் திருஎல்லையில் எங்கும் உண்டானசிவலிங்கமூர்த்தங்களையெல்லாம் தரிசித்து வணங்கியும், தவசு நீங்காத வசிட்ட மகாமுனிவர் பாயும் தொழிலையுடைய விக்கிரபாத மகா இருடி வாழ்வு பொருந்தின ஆச்சிரமத்திலே சென்று விருந்து அருந்தி இருந்தனர் என்றவாறு.

இதில் கருமூல காரணன் என்பது பந்தமூலமாயோபாதானத்தைப் பிரேரேபிக்கும் நிமித்த காரணன் என்றறிக. (100)

**அந்தி வந்தனை தந்த னந்தன தாசி லாச்சிர மத்திலுற்(று)**
**எந்தை பாத மிறைஞ்சி வந்திரு ளெல்லி செல்ல வெழுந்து நல்**
**சந்தி சேர்பணி ராச னுந்தகு சைவ ராசனு மெய்தவே**
**வந்த வைதிக ராச னான வசிட்டன் மன்னி யிருந்தனன்.**

இ-ள்: சந்தியா காலத்தில் அநுட்டானம் பண்ணிப் பதஞ்சலி மகா இருடியினுடைய குற்றமில்லாத பன்னசாலைக்குப் போய்த் திருவனந்தேசுரமுடைய தம்பிரானாரது திருவடி தொழுது, மீள வியாக்கிரபாதர் பன்னசாலையிலே வந்து இரண்டராத்திரிபோன வைகறையில் எழுந்திருந்து, பிராத காலத்தின் அநுட்டானம் பொருந்தின பதஞ்சலியும் அப்படிப்பட்ட சைவ சிரேட்டரான வியாக்கிரபாதரும் வந்து பொருந்த, வைதீகசிரேட்டரான வியாக்கிரபாதரும் வந்து பொருந்த, வைதிக சிரேட்டரான வசிட்டமகாஇருடி அநுட்டானம் முடிந்தார் என்றவாறு. (101)

**தீதி லாத விராச ராசனும் வந்து வந்தனை செய்து நான்**
**ஏதி லாரென நோத கேனரு ளெந்தை மாரிவர் மைந்தன்யான்**
**ஆத லாலுயர் வீடு மெய்துவ னென்று முன்ன ரமர்ந்தபின்**
**கோதி லாத வசிட்டன் வந்தமை கூற வானிட ராறுவான்.**

இ-ள்: குற்றமில்லாத இராசராசனாகிய இரணியவன்மனும் இருடிகள் முன்னே வந்து நமஸ்கரித்து யான் காமிகளைப் போலே வித னப்படேன்; அருட்பிதாக்கள் இருவர்கள்; இவர்களுக்குக் குமாரன் நான் ஆனதினால் உயர்ந்த மோக்ஷத்தைப் பொருந்துவேன் என்று சொல்லித் தமக்கு முன் விதனம் நீங்கி அமர்ந்திருந்தப்பின், குற்றமற்ற வசிட்ட மகா இருடி தாம் எண்ணிவந்த காரியத்தைச் சொல்லுவார் வியாகுலம் ஆற என்றவாறு. (102)

**அருந்த திக்கிறை யோனெ மக்கிவ**
**னுக்கு ஞாலம் ளித்து நீ**
**திருந்த வுய்த்து நடத்து கென்றுரை**
**செய்து மன்னுயிர் சென்றபின்**
**தகுந்த மன்னுயிர் போன மேனி**
**தகக்கி டந்தது தம்பிமார்**
**இரந்து கொண்டனர் கொண்டு போதர**
**இங்கு வந்தன னென்றனன்.**

இ-ள்: கௌடதேசன் சிங்கவன்மனான என்மகனுக்கு நம்மு டைய இராச்சியத்தைக் கொடுத்து நீர் நன்றாக நடத்திக் கொண்டுபோம் என்று எமக்குச்சொல்லி உயிர் நீங்கினவளவில், அவர் உனக்குத் தந்த அவருடைய இராச்சியமானது உயிர்போன சரீரம் போல் வாழ்வற்றுக் கிடந்தது; தம்பிமார் வேண்டிக்கொண்டார்கள்; ஆகையால் உன்னைச் சிங்காசனத்திலே வைக்க அழைத்துக்கொண்டு போம்படிக்கு இங்கே வந்தோம் என்று அருந்ததி கணவராகிய வசிட்டர் கூறினார் என்றவாறு. (103)

**வன்பு லிச்சர ணத்த னீடு**
**வசிட்டன் வந்தமை சிந்தைசெய்(து)**
**என்செ யத்தகு மென்று மைந்தனை**
**எய்த வாள்விழி செய்யமுன்**
**தன் க ருத்தறி வித்த லான்மொழி**
**தந்தி டான தறிந்துமேல்**
**நின்செ யற்கிசை யத்த குந்திறம்**
**நீப கர்ந்திடு கென்றலும்.**

இ-ள்: ஞானவீரராகிய வியாக்கிரபாதர் பழைய வசிட்ட மகா இருடி வந்தகாரியத்தை ஞானத்தால் அறிந்து யோசித்து இதற்கு என்ன செய்யத்தகும் என்று இரணியன்வன்மனைக் குறித்துக் கிருபையாகிய ஒளிப்பொருந்திய விழியினாலே பார்த்தருள முற்பட, எந்தைமார் நீங்கள் இருவர்கள் என்றும் உங்களால் உயர்வீடு எய்துவேன் என்றும் முன்னே கருத்துத் தோன்றச் சொன்னபடியாலே அப்போது உத்திரங்கொடாது நின்றார்; அதைத் திருவுள்ளத்திலே அறிந்து இனிமேல் செய்வதற்குப் பொருந்தத்தக்க அபிப்பிராயம் எதுவோ அதை நீ சொல்லு என்ற அளவில் என்றவாறு. (104)

**வேறு**

**அந்தமி லரசுஞ் சித்தி யனைத்துநீ டமரர் வாழ்வும்**
**இந்திர சால நீர்மே லெழுத்துமின் கொப்பு ளிப்பொய்ச்**
**சிந்தனை வேண்டே னாண்ட திருமுனி திருமு னிந்த**
**வந்தனை வழுவா வாழ்வு வழங்குவா யாக வென்றான்.**

இ-ள்: எழுபது சதுர்யுகம் வரைக்கும் செங்கோல் நடத் துகிற முடிவில்லாத இராச்சியபாரம் பொறுத்தலும், அணிமா திகளாக இருக்கிற சித்திகளும், ஒழியாத தேவர்கள் பதமும், கபடநாடகமான இந்திரஞாலம், நீர்மேல் எழுதிய எழுத்து, தோன்றி அழியும் மின்னல், நீர்க்குமிழி என்னும் இவைகள் போல மெய்யில்லா தவைகளாம்; ஆதலால் இந்தப் பொய்வாழ்வை நினைக்கவும் வேண்டேன்; என்னை ஆண்ட ருளிய திருமுனியே! உமது சன்னிதியிலே இப்போது யான் செய்து வருகிற பணிவிடை நீங்காத மார்க்கத்தைத் தந்தருளு வீராக என்று விண்ணப்பம்செய்தேன் என்றவாறு. (105)

**ஆகினீ முனிவ னோடு மாண்டணைந் தரச மௌலி**
**நாகமா விரதந் தானை நவமணி நிதியு ளிட்ட**
**போகமார் பொருள மைச்சர் பேதையர் பொருந்தக் கொண்டு**
**வேகமாய் வருவா யென்று வியாக்கிர பாதன் கூறி.**

இ-ள்: மாயாபோகம் வேண்டாம் என்பையாகில் வசிட்ட மகா இருடியுடனே உன்னுடைய தேசத்துக்குப்போய் இராச வாஞ்சிதமான மணிமுடி யானை குதிரை தேர் பதாதி நவரத்தினங்கள் முதலான நிக்ஷேபங்களையும் இராசபோகத்துக்குப் பொருந்தின கனகம் இரசிதம் முதலானவையும் திவ்வியமான பட்டாடைகளையும் கஸ்தூரி முதலான சுகந்தங்களையும் மந்திரிகள் ஊழியப் பெண்கள் இன்னம் வரப்பொருந்தின பேர்களையும் கைக்கொண்டு கடுக வருவாயாக என்று வியாக்கிரபாதர் அநுக்கிரத்து என்றவாறு. (106)

**மன்றமர் நடமுன் போற்றி யெம்முடன் மருவி னோரின்**
**முன்றிகழ் முனிவர் மூவா யிரவரை முதுவேள் விக்கென்று**
**அன்றயன் வேண்டிக் கொண்டா னவர்களை யந்தர் வேதி**
**சென்றுடன் கொணர்வா யென்று திருமுனி யருளிச் செய்தான்.**

இ-ள்: சிதம்பரத்தில் அனவாத தாண்டவம் நெடுங்காலத்துக்கு முன்னே எம்முடனே தரிசித்திருந்தவர்களில் முன் எண்ணப்பட்ட மூவாயிரம் பிரம இருடிகளையும் பழைய யாகத்துக்காக அந்நாளிலே பிரமா நம்மைக்கேட்டு அழைத்து கொண்டுபோனார்; ஆதலால் நீ அந்தர்வேதிக்குப்போய் அவர்களை உன்னுடனே கூட்டிக்கொண்டு வருவாயாக என்று வியாக்கிரபாதர் அருளிச்செய்தார் என்றவாறு. (107)

**திருவுள மான தொன்று செய்தவ மென்று செப்பப்**
**பொருபுலி முனிம கிழ்ந்து பொதுநட முடனே போற்றி**
**அருள்புரி பெருமா னிந்த வடிகளேம் பணிந் டத்த**
**விரைவொடு வருவா னேக வேண்டும்விண் ணப்ப மென்ன.**

இ-ள்: தேவரீருக்குப் பொருந்தின காரியம் செய்யுமதே அடியேனுக்குப் பெருந்தவம் என்று இரணியவன்மன் விண்ணப்பம் செய்ய, ஆணவமலத்தை வென்ற வியாக்கிரபாத முனி பிரியப்பட்டு இவனுடனே போய்ச் சிதம்பர நிருத்தம் தரிசித்துத் தம்பிரானே திருவுளம் வாழ்ந்தருளித் தேவரீருடைய இங்கு உண்டான எங்கள் பணிவிடை குறைவற நடத்தச் சடுதியிலே வரும்படிக்குப் போகத்தக்கதாக அருள் வேண்டும்; இது எங்களுடைய விண்ணப்பம் என்றார் என்றவாறு.

(108)

**கண்ணுத லோனு மெண்ணில் கருணையு மருளு நல்க**
**எண்ணரு மின்ப மெய்தி யெந்தைதாள் சிந்தை செய்து**
**விண்ணவ விசைவால் மைந்தன் விடைகொண்டு மீண்டு போத்தான்**
**மண்ணுற வண்ணல் பாதம் வசிட்டனும் வணங்கி வந்தான்.**

இ-ள்: நெற்றிக் கண்களையுடைய சிதம்பரமூர்த்தியும் எண்ணில்லாத கிருபையும் அநுக்கிரகமும் திருவுளம்பற்ற எண்ணரிய ஆனந்தம் பொருந்தித் தம்பிரானார் திருவுளப் பொருத்தத்தினாலே இரணியவன்மன் என்கிற குமாரன் விடை கொண்டு தம்பிரானார் ஸ்ரீபாதத்தையும்நமஸ்கரித்துக் கொண்டு வியாக்கிரபாதர் பன்னசாலைக்கு மீளவந்தான், மண்ணுறச் சர்வேசுவரன் ஸ்ரீபாதங்களை வசிட்டமகா இருடியும் அட்டாங்கமாக நமஸ்கரித்து விடைக்கொண்டு உடனே வந்தார் என்றவாறு. (109)

**அன்னை நீ றளிப்பப் போற்றி யாருயி ரவர்பா லாகப்**
**பன்னக வுரவோன் றாளும் பணிந்துப்போய் பரமர் தில்லைப்**
**பொன்னம ரெல்லை போற்றிப் போதுவான் புகழ்புலிக்கால்**
**மன்னவன் றன்னை யாண்ட வகைமொழி வழியாக சென்றான்.**

இ-ள்: விக்கிரபாதமுனிவர் பத்தினியாகிய தாயானவள் தன் நெற்றியில் விபூதி இடத்துதித்து வணங்கித் தன்னுடைய உயிரை மாதா பிதாக்களிடத்தில் இருக்கவைத்துப் பதஞ்சலி மகாஇருடி என்னும் ஞானவீரரது சீர்பாதமும் நமஸ்கரித்து வடக்கு நோக்கிப் போய்ப் பரமேசுருடைய தில்லைவனஞ்சூழும் பொன்னம்பலத்தின் எல்லையைப் புகழ்ந்து வணங்கிச் செல்லுகின்றவன், கீர்த்தியையுடைய வியாக்கிர பாதராகிய சுவாமி தம்மைத் தீட்சைபண்ணி இரக்ஷித்து ஆண்டு கொண்ட முறைமை வகைப்பட வழிமுடியுமளவும் அதிலே ஒருப்பட்டுச் சிதம்பரம் முதல் தன்னுடைய தேசம் மட்டும் இராப்பகல் அனவரதகாலமும் புலிமுனியாகிய பிதாவினுடைய காருண்ணியத்தை வசிட்டருக்குச் சொல்லிக்கொண்டு போனான் என்றவாறு. (110)

**விற்கழி யம்புந் தந்து மேவிய விகங்க மும்போல்**
**கற்கடங் கடித கன்று கவுடதே யத்துத் தங்கள்**
**நற்கட கத்துக் கோயி னண்ணலு மெண்ணில் மாதர்**
**வற்கமுந் தம்பி மாரு மால்கடற் கிளர்ச்சி கொண்டார்.**

இ-ள்: வில்லினின்றும் நீங்கிக் குறிபிழையாது செல்லும் அம்பும் கயிறுகட்டிவிட்ட காற்றாடியும் போலக் கல்வழியை விரைவிலே கடந்து கௌடதேசத்திலிருக்கும் மதில் சூழ்ந்த தங்கள் நல்ல பட்டணத்தின் மாளிகையைப் பொருந்திப் புகுந்த அளவில், எண்ணிறந்த மாதர் கூட்டங்களும் சிறிய தாயும் தம்பிமாரும் பெருங்கடல் ஒலித்தாற்போல அதிசயத்துடனே அழுதார்கள் என்றவாறு. (111)

அழுந்திய துயர நீங்கி யனுசரை யாற்றி யாயும்
இழந்தன னாகா வண்ண மிவரிருந் தனரே யென்றச்(சு)
அழிந்தமெய்த் தாய ருள்ளத் தளர்வுக ளாற்றி மற்றை
ஒழிந்தநற் சுற்றத் தரர்க ளியாரையுந் துயரொ ழித்தான்.

இ-ள்: தான் அடைந்த விதனத்தை நீக்கித் தம்பிமாரைத் தான் ஆறப்பண்ணித் தான் தாயினை இழந்தவனாகவண்ணம் இவர்கள் இருந்தார்களே என்று இலக்குமி நீங்க வடிவமாறின தாயாருடைய மனக்கிலேசங்களை நீக்கி மற்றுள்ள பந்துக்கள் யாரையும் வருத்தம் நீக்கினான் எ-று. (112)

எண்டகு துறைகொள் மாக்க ளியாரையு மினித ழைத்துக்
கண்டுதன் கனக மேனிக் கவினவர் காண நல்கி
அண்டர்தம் பெருமா னாடு மம்பலத் துழனி யுன்னி
ஒண்டிறற் குமர னாளோ ரூழியா மெனவொ ழித்து.

இ-ள்: எண்ணிக்கைப்பட்ட துறைதோறும் தகுதியான மனிதரைப் பிரியத்துடனே அழைப்பித்து, அவர்கள் யாவரும் வரக்கண்டு, தனது பொன்மயமான சரீரத்தை அவர்கள் காணும்படியாகக் காட்டி, தேவதேவன் ஆனந்த நிருத்தஞ்செய்யும் சிதம்பரத்தில் அடியார்கள் துதித்தலால் எழும் ஓசையைச் சிந்தித்துக்கொண்டு, அருள்வீரனான இராசகுமாரன் ஒருநா ளைப்பொழுது ஒரூழிப்பொழுதாம் என்னத் தக்கதாக நீக்கி என்றவாறு. (113)

பன்னுமந் திரிக டம்மைப் பார்த்தினி யிங்குப் பன்னாள்
மன்னிநான் வைக லேனென் வழுவுடற் பழுத கற்றிப்
பொன்னுரு வாகச் செய்த புலிமுனி சரணம் போற்றற்(கு)
என்னுடன் போது வீரே லெய்துமென் றவர்க்கி சைத்தான்.

இ-ள்: பிரதானமாகச் சொல்லப்பட்ட மந்திரிகளைப் பார்த்து, தான் இனிமேல் இவ்விடத்துப் பலநாள் பொருந்தி இருப்பேன்

என்கிற எண்ணமுடையனல்லேன்; ஆதலால் என்னுடைய குற்றம் மிகுந்த சரீரத்தின் சிங்கநிறத்தைப் போக்கிக் கனகவடிவாக்கின வியாக்கிரபாத மகாஇருடியினுடைய சீர்பாத சேவை பண்ணுதற்கு என்னுடனே கூட வருவீர் களாகில் வாருங்கள் என்று இரணியவன்மன் அவர்களுக்குச் சொன்னான் என்றவாறு. (114)

**போது வீராகின் மாயா போகமே யன்று மன்றில்**
**வேதநான் முகன்மால் காணா விண்ணவன் வெளியே நண்ணி**
**மாதொரு பாக மாக மகிழ்ந்துநின் றாடும் வாழ்வும்**
**ஏதிலீர் பெறுவீ ரென்றங் கிரணிய வன்மன் சொன்னான்.**

இ-ள்: என்னுடன் வருவீராகில் இந்த மாயா போகவாழ்க்கைமாத்திரமன்று, வேதம் பிரமவிஷ்ணுக்கள் காணாத கனக சபையில் சிதம்பரமூர்த்தி ஆனந்தசொரூபியாய் யாவர்க்கும் திருட்டிகோசரமாக நின்று கிரியாசத்தி காண நடிக்கிற சத்தியமா ன வாழ்வையும் ஒன்றுக்கும் உறுப்பற்ற நீங்களும் பெற்று வாழ்வீர்கள் என்று இரணியவன்மன் சொல்லினான் என்றவாறு. (115)

**மொழியது கேட்ட மைச்சர் முகமக மிகம லர்ந்து**
**வழுவிலா வெம்மை யாளு மன்ன நீ சொன்ன தொன்று**
**தொழுதியா முயல்வோ மென்று சொல்லித்தென் றில்லை நோக்கி**
**எழுகவான் பயண மென்றங் கெழுமுர சியம்பு வித்தார்.**

இ-ள்: இரணியவன்மன் சொன்ன வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில் மந்திரிகளெல்லாம் முககமலமும் இருதயகமலமும் மிகவும் மலர்ச்சிகொண்டு எம்மை ஆளாகவுடைய குற்றமில்லாத இராசாவே! நீர் கற்பித்தது யாதொன்றோ அதனை ஒத்துக்கொண்டு யாங்கள் அப்படியே செய்வோம் என்று சொல்லித் தக்ஷிணதிக்குத் தில்லையை நோக்கிப் பயணம் யாவரும் புறப்படுங்கள் என்று எழுச்சிமுரசு நகரிசூழ அறைவித்தார் என்றவாறு. (116)

**அந்தமில் கனக வெற்பு மருறவ மணிப்பொ ருப்பும்**
**எந்திரத் தேரி னீட்ட மொட்டக மிவுளி யானை**
**தந்திரம் பண்டி வண்டி பரித்தெழத் தயங்கு நாட்டு**
**மைந்தர்கள் மகளிர் சைவர் வைதிகர் மகிழ்ந்தெ ழுந்தார்.**

இ-ள்: கனகச் செய்குன் றுகளைப் போலவும் நவரத்தினச் செய்குன்றுகளைப் போலவும் விளங்காநின்ற சூத்திரம் பொருந்தின அனந்தம் தேரணிகளும் எண்ணிறந்த ஒட்டகங்களும் குதிரைகளும் யானைகளும் உருளை பூட்டிய வண்டில்களும் பதாதிகளும் சுமந்து செல்லச் செல்வமிகுந்த கௌட தேசத்திலுள்ள புருடர்களும் பெண்டுகளும் சைவர்களும் வைதிகர்களும் பயணப்பட்டார்கள் என்றவாறு. (117)

**அன்னைய ரனுசர் மைந்த ரரிவையர் கணிகை மார்கள்**
**உன்னுமெய்க் காவ லாள ராரிய ருரிமை யோர்கள்**
**இன்னுமெண் ணிலர்க ளோடு மிரணிய வன்ம னேகி**
**மன்னுசீ ரந்தர்வேதி மாதவர் தம்மைச் சார்ந்தான்.**

இ-ள்: சிறிய தாயர்கள் தம்பியர் இருவர் மற்றுள்ள குமாரர்கள் குமாரத்தியர்கள் உள்ளும் புறம்பிலும் உள்ள ஊழிய மாதர்கள் மெய்க்காவற்காரர்கள் அகத்தடியார் பின் னும் எண்ணிறந்த ஐவகைக்குழு, ஐவகைச்சுற்றம், முதலானோர் சூழ இரணியவன் மாவானவர் சென்று, நிலைபெற்ற ஐசுவரியம் பொருந்தின பிரமாவின் யாகத்தலமான அந்தர்வேதியிலிருந்த மூவாயிரம் பிரம இருடிகளையும் வந்து பொருந்தினான் என்றவாறு.

ஐவகைக் குழுவாவன: மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர், ஐவகைச் சுற்றமாவன: நட்பாளர், அந்தணாளர், மடைத்தொழிலர்,மருந்துவக்கலைஞர், நிமித்தப்புலவர். (118)

**மும்மையா யிரவர் நீங்கள் முதுபதிப் பொதுவி லாடும்**
**நம்மையா ளுடையான் பாத நாடொறு நயந்து போற்றற்கு**
**எம்மை நீர் பிரியா தெய்தற் கெழின் முனியிசைத்தா னென்று**
**செம்மையா ரிரவி போலத் தேர்பல சேர வுய்த்தான்.**

இ-ள்: நீங்கள் மூவாயிரம் பிரம இருடிகளும் பழைய தலமான சிதம்பரத்தில் அனவரதநிருத்தம் செய்யும் எம்முடைய தம்பிரான் ஸ்ரீபாதங்களை அனவரதமும் சேவை பண்ணுதற்கு உங்களை நீங்காமல் எம்மை வரத்தக்கதாகப் பெரிய வியாக்கிரபாதர் எமக்கு அருளிச்செய்தார் எனச்சொல்லி, செவ்வொளி நிறைந்த மலைகள் போன்ற மூவாயிர மாணிக்கத்தேரை முன்னே அணியாக நிறுத்தினான் எ-று. (119)

**அங்கவர் தங்கள் துங்க வங்கிக ளாத ரித்து**
**மங்கையர் மகளிர் மைந்தர் வான்கலை யரணி மற்றும்**
**எங்கணு நிறைய வேற்றி யிரதமுற் புரவி பூட்டிப்**
**பொங்கிய வோம தேனுப் போதுவ தொடர்ந்து போத.**

இ-ள்: அவ்விடத்து அந்த இருடிகள் நித்தியாக்கினிகளையும் ஆதரத்துடனே எடுத்துக்கொண்டு ஏறி, பத்தினிகள் புத்திரிகள் பிள்ளைகள் கிருஷ்ணாசினம் அரணி சமித்து நெய் பொரி தருப்பை பாத்திரங்கள் முதலானவைகளை ஏற்றித் தேருக்கு முன்னாகக் குதிரைகளைப் பூட்டிச் சுரந்த முலைகளையுடைய ஓமார்த்தமான பசுக்கள் மற்றும் வேண்டியவைகள் கூடிவர என்றவாறு. (120)

**அந்தமில் பரிச னஞ்சூ ழரவமு மரசர் போற்றும்**
**வந்தனைத் துவைப்புந் தெய்வ மறையவர் மலிதே ரார்ப்பும்**
**தந்திரச் செருக்கும் வேழத் தமரிப்புஞ் சைந்த வங்கள்**
**முந்திய வொலியு முந் நீ ரேழினு மிகமு ழங்க.**

இ-ள்: முடிவு இல்லாத பரிசனங்கள் சேவித்துவரும் ஓசையும் இராசாக்கள் தோத்திரம்பண்ணி வணங்கும் ஓசையும் திவ்வியமான பிரமஇருடிகள் ஏறின மூவாயிரம் தேர்க்கூட்டத்தின் ஓசையும் சேனையின் ஓசையும் யானை பிளிறுதலாலான ஓசையும் குதிரைகள் அனுமானிக்கும் ஓசையும் ஏழு கடலின் ஓசையினும் அதிகமாக முழங்கும் படி என்றவாறு. (121)

**விழிநுழை யாத கானும் வியன்சரி யாகுஞ் சாயும்**
**கழிவுற மடியு மானைக் காலுறுந் தேர்க்கா லோட**
**வழிபடு மவர்காற் றூளி வானமும் புனித மாகப்**
***பொழில்பெரு வழியா மாறு புரவல னெடிது போந்தான்.**

இ-ள்: முன்னே கொடிப்படை செல்லுதலால் கண்ணுக்கு நுழைய ஒண்ணாத செறிந்த பெரிய காடும் பெரிய சரி வழியாகும்; குதிரைகள் தாண்டிச் செல்லுதலால் மரமுள்ளது சாய்ந்துவிழும், கழிந்தொடிந்து யானைக்காலாலே மிக்க நருக்குண்டுபோம்; தேர்க்கால் செல்லப் பெருவழியாம்; பின்னே வருமவர்களுடைய பாதம் பட்டுத் தூளியாய் அந்தத் தூளி தேவலோகமும் சுத்தமாகக் காடெல்லாம் பெரியவழியாகும்படி, கௌடராசனாகிய இரணியவன்மன் நெடுந்தூரம் வந்தான் என்றவாறு. (122)

---

*'பொழிபெரு' எனவும் பாடம்.

**மன்னவர் தத்த மெல்லை வழிவிட வடவி வாழும்**
**கொன்னவில் விலங்குத் *தந்தங் கொடுவழி விடப்போந்**
**இன்னறநல் வளனெ னாம லெடுத்துவந் தெங்கு மீண்டிப்**
**பன்னதி வெள்ள மல்கும் பரவைபோல் விரவி யோங்க.**

இ-ள்: அங்கம் வங்கம் முதலிய தேசங்களிலுள்ள இராசாக்களும் தம்முடைய எல்லை அளவாகச் சேவித்துவர,வனத்தில் வாழும் கொலைத்தொழிலுக்கு மிகுத்துச்சொல்லப்பட்ட சிங்கம், புலி முதலான மிருகங்களும் தம் தம்முடைய கொடுந்தொழிலான வழியைவிட்டுநீங்க அந்தந்தத் தேசத்திலுள்ள அபூர்வ பதார்த்தத்தில் வேறு நல்ல பதார்த்தங்கள் இன்னமும் இருக்கின்றது என்று சொல்லுதற்கு இல்லாமல் கொண்டு வந்து எவ்விடத்தும் பொருந்திப் பல ஆறுகள் பெருகிக் கூடும் சமுத்திரம் போலச் சேனைகள் பொருந்தி ஓங்க என்றவாறு. (123)

**எண்டகு நாடுங் காடு மலைகளும் யாறு நீங்கிக்**
**கண்டது வழியா மண்டிக் கடிதுவந் தலர்ந்த கண்டல்**
**வெண்டரு மடலு நீறும் விரை தரு சோறு நல்கித்**
**தெண்டிரைப் புலவு மாற்றுந் தில்லையி னெல்லை சேர்ந்தான்.**

இ-ள்: எண்ணத்தக்க நாடுகளும் காடுகளும் மலைகளும் ஆறுகளும் கடந்து, தனக்கு நேரிட்டதே வழியாக விரைந்து வந்து, பூந்தாழை யானது வெண்மையைத் தரும்மடலும் நீறும் மணம் பொருந்திய சோறும் சொரிந்து கடலின் புலால் நாற்றத்தை நீக்கும் தில்லைவனத்தின் எல்லை யை அணுகினான் என்றவாறு. (124)

**புரவியை விரைந்து போந்து புதல்வன்முன் பணிந்து போற்றி**
**வருபெருஞ் செல்வங் கூற மாமுனி மகிழ்ந்து வாழ்த்தித்**
**திருவுடை யந்த ணாள ரெழுந்தருள் சீர்மை காண்பான்**
**இருவரு மெதிரே சென்றா ரியாவருந் தேரி ழிந்தார்.**

இ-ள்: மனோவேகத்துக்கு ஒத்த குதிரையை மேற்கொண்டு துரிதமாக வந்து புதல்வனாகிய இரணியவன்மன், வியாக்கிரபாதர் சன்னிதியிலே

*'அந்தக்' எனவும் பாடம்.

நமஸ்கரித்துத் துதித்து, வருகிற சேனை ஐசுவரியத்தின் மிகுதியும் இருடிகள் வரத்தும் விண்ணப்பம் செய்ய, வியாக்கிரபாதரும், சந்தோஷத்துடனே ஆசீர்வாதம்பண்ணித் திருவுடையந்தணர் என்று திருநாமத்தையுடைய இருடிகள் எழுந்தருளுகிற பெருமை காணும்படி பதஞ்சலி மகாஇருடியும் தாமும் இருடிகளுக்கு எதிரே வர மூவாயிரம் இருடிகளும் தேரினின்றும் இழந்தார்கள் எ-று. (125)

**அங்கவ ரணைந்து வாழ்த்தி யணைப்பவாழ்ந் தமல வுன் றன்**
**மங்கல வருளான் மீண்டு வருநெறி பெற்றோ மின்னம்**
**பங்கயன் வரினு மண்ணல் பாதபங் கயங்கள் நீங்கா**
**இங்கெமை முனிவ போக வினிவிடா தொழிக வென்றார்.**

இ-ள்: அவ்விடத்து இருடிகள் எல்லோரும் வியாக்கிரபாதரை வாழ்த்தி ஒருவருக்கு ஒருவர் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கிருதார்த் தராய், சுத்தனே! உனது மங்களமான அருளினாலே இவ்விடத்துக்கு மீளவும் வரும்வழி பெற்றோம்; இன்னம் பிரமா வந்தாலும் அண்ணலுடைய ஸ்ரீபாதபங்கயங்களைப் பிரியாமல் இருக்க எங்களைப் போகவிடாதே ; முனிவனே! என்று சொன்னார்கள் என்றவாறு. (126)

**மாமணித் தேவர்கள் மன்றின் வடகுட பானி றுத்தித்**
**தாமணைந் தருமு னிக்குத் தம்பிரா னருளி னாலே**
**தூமலி வகையாற் காட்டத் தொகையிலோர் முனிவ ரங்குத்**
**தேமலி யலங்கல் மார்பன் கண்டிலன் திகைத்து நின்றான்.**

இ-ள்: பெரிய மாணிக்கத் தேர்களைச் சிதம்பரத்துக்கு வடமேற்குமூலையிலே நிறுத்தித் தாங்கள் இப்பால் வந்து பொருந்தித் தம்பிரானார் அருளினாலே வியாக்கிரபாதர்க்குச் சுத்தம் மிகுந்திருக்கிற தங்களை எண்ணிக் காட்டும்போது, மூவாயிரவரில் ஒரு இருடியை அவ்விடத்துக் காணாமல் மணம் பொருந்தின ஆத்திமாலை மார்பனான இரணியவன்மன் திகைத்து நின்றான் என்றவாறு. (127)

**செம்மைமெய்ப் பெரியோர் போலத் தேடரி தென்று மைந்தன்**
**மெய்ம்மையின் துயர நோக்கி விமலன்விண் ணவருங் கேட்ப**
**எம்மையொப் பவர்கள் யாரும் யாமவர்க் கொப்போ மென்றே**
**அம்மையப் பனுமா வானா மவர்களி லொருவ ரென்றான்.**

இ-ள்: செம்மை பொருந்தின சத்திய சொரூபிகளான இந்தப் பெரியோர்களைப் போல், இனி ஒருவரையும் தேடக் கிடையாது என்று இரணியவன்மனானவன் திரிவிதகரணத்தினாலும் உண்மையாகப்படும் வருத்தத்தைக்கண்டு விமலன் விண்ணவரும் கேட்கத்தக்கதாக அந்த இருடிகளெல்லாரும் எமக்கு ஒப்பானவர்கள்; யாம் அந்த இருடிகளுக்கு ஒப்பாவோம்; ஆதலால் நாம் அவர்களுக்குள்ளே ஒருவராகக் 'கைக்கொள்' என்று செகத்துக்கு மாதாவும் பிதாவுமாகிய சிதம்பரநாதர் அருளிச்செய்தார் என்றவாறு. (128)

என்றருள் செய்த வாய்மை யாவருங் கேட்டுத் தில்லை
மன்றினின் றாடு கின்ற மறையவன் மறையோர் தம்மில்
ஒன்றென லாகு மேன்மை யுடையரென் றுளந்து ளங்கிச்
சென்றடி பணிந்தான் மைந்தன் தேவர்பூ மாரி பெய்தார்.

இ-ள்: இப்படி அருளிச்செய்த சத்திய வாசகத்தை எல்லாரும் கேட்டுத் தில்லைமன்றில் ஆனந்த நிருத்தம் செய்கிற வேதகர்த்தாவான சர்வேசுவரன் இந்தப் பிரம இருடிகளில் நாமும் ஒருத்தன் என்று சொல்லத்தக்க பெருமையுடையார்கள் என்று சித்த நடுக்கத்துடனே சென்று இரணியவன்மன் நமஸ்கரித்தான் தேவர்கள் புட்பவருஷம் வருஷி தார்கள் என்றவாறு. (129)

அண்டர்நா யகன ளித்த
வருளினால் தம்மை யஞ்சி
மண்டனில் வீழ்ந்தெழுந்து
வாழ்ந்துதாழ்ந் தயர்ந்து வாழ்த்தி
எண்டிகழ் முனிவ ரெம்மை
யெழுமையு மடிமை யாகக்
கொண்டரு ளென்று கொண்டைக்
கோலொடு குணலையிட்டார்.

இ-ள்: அண்டத்துக்கு நிமித்த காரணனாயுள்ளவன் கடாக்ஷித்த அருளினாலே தம்மைத்தாமே அறிந்து பயப்பட்டு, பூதலத்திலே தண்டாகாரமாக வீழ்ந்து, மீள எழுந்திருந்து, பெருவாழ்வுபெற்று உன்மத்தராய் நமஸ்கரித்து, மோகிதராய் வெகுவிதமாகத் துதித்து, மூவாயிரம் இருடிகளும் எங்களை ஏழு பிறப்பிலும் அகத்தடிமையாகக் கொண்டருளுவாயாக என்று கொண்டைக்கோலுடனே குணலைக்கூத்தா டினார்கள் என்றவாறு. (130)

மன்மகன் தொழுது நின்றிம்
மறையவர்க் கேவல் செய்தற் (கு)
என்னமா தவம்பு ரித்தேன்
யானென விறைஞ்சி யேத்தப்
பன்னரு மிருடி மைந்தன்
பான்மையைப் பரவ மன்றில்
பொன்னடி பணிந்து வாழ்த்தி
யாவரும் புகழ்ந்து போந்தார்.

இ-ள்: இராசகுமாரன் நமஸ்கரித்து நின்று, இந்தப் பிரம இருடிகளுக்குப் பணிவிடை செய்ய யான் எந்தப் பெரிய தவசு பண்ணினேன் என்று சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துப் புகழ, வாக்குக்கு எட்டாத பெருமையுடைய இருடிகளும் இரணியவன்மன் சுபாவத்தைத் துதித்துச் சிதம்பரத்தில் தம்பிரானார் ஸ்ரீபாதத்தை நமஸ்கரித்து வியாக்கிர பாதர் பதஞ்சலி முதலான யாவரும் இரணியவன்மனை ஆசீர்வாதம் பண்ணி நல்ல வார்த்தைகள் சொல்லி ஆச்சிரமங்களிலே வந்தார்கள் என்றவாறு. (131)

நடநிலை பிரியா தானோர் ஞானவா னிருந்தாற் பாச
மிடையிரு ளகன்று கோடி விற்கிடை வெளியா மென்றால்
திடமிகு தவர நேகர் செறிதலால் திகழுந் தில்லை
அடவியு மிருணீங் கிற்றென் றதிசய மாகா தன்றே.

இ-ள்: ஆனந்த கிருத்தத்துக்கு அதிட்டானமான ஞானத்தை நீங்காத சைதன்னியத்தை உடையவராகிய ஒரு *ஞாதாவானவர் யாதோரிடத்தில் இருக்கிறாரோ, அவ்விடம் சூழ்ந்த பாசம் நெருங்கின அந்தகாரம் நீங்கிக் கோடி விற்கிடை நீளம் சிவப்பிரகாசமாம் என்று வேதாகமம் சொல்லுதலால் அத்திடசித்தரான பெரிய இருடிகள் அனேகம் பேர் நெருங்கி இருக்கையினாலே தில்லைச்சிற்றம்பலம் என்ற பழம்பதியில் காடுகள் யாவும் பாசம் நீங்கிற்று என்னுமது அதிசயமாகாதே என்றவாறு. (132)

* ஞாதா - ஞானவான்.

**அருந்தவ ரடங்கத் தில்லை யம்பலஞ் சூழ வைகத்**
**திருந்திய குமரன் மன்றந் திகழ்குண திசையிற் சேரப்**
**பொருந்திய தானை மல்கப் புகழ்படை வீடு செய்தங் (கு)**
**இருந்தனன் பின்பு செய்த வியல்புக ளியம்ப லுற்றாம்.**

இ-ள்: மூவாயயிரம் பிரம இருடிகள் முதலான பெரியோர் யாவரும் தில்லையம்பலத்தைச் சூழ்ந்திருப்ப, குற்றம் நீங்கின இரணியவன்மனானவன் சிதம்பரத்துக்குக் கிழக்காகப் பொருந்தித் தன்னைச் சேவித்து வந்த சதுரங்கபலத்துக்கும் இடம் உண்டாகக் கொன்றவன் குடியிருப்பு என்று சொல்லப்பட்ட படைவீடு கற்பித்து அவ்விடத்துக் கட்டின மாளிகையில் இருந்தான்; பின் நிகழ்ந்த காரியங்களைச் சொல்லப் புகுகின்றோம் என்றவாறு. (133)

## இரணியவன்மச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - 362.

## ஆறாவது

# திருவிழாச் சருக்கம்

**எண்ணி லிருந்தவ ரெந்தை நடந்தொழு தின்பார**
**மண்ணில் வணங்கி யிணங்கரு மன்பொடு வாழ்நாளில்**
**திண்ணிய சிந்தைக ளொன்றி நினைந்தருள் தேர்வாராய்**
**அண்ணன் மருங்குயர் புங்கவர் சங்க மமர்ந்தார்கள்.**

இ-ள்: எண்ணிறந்த பெரிய இருடிகள் எம்பிரானாருடைய ஆனந்தநிருத்தம் சேவித்துக் களிகூர்ந்து, பூதலத்தில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஒப்பரிய அன்புடனே வாழும் நாளிலே, திடசித்தங்களினாலே ஒத்து விசாரித்துத் தம்பிரானார் திருவருள் எப்படி என்று அறிவாராகிவந்து சிதம்பரநாதருக்கு அருகாகப் பெரியோர் யாவரும் திருக்கூட்டமாகி இருந்தார்கள் என்றவாறு. (1)

**சங்க மிருந்தபி னங்கமர் புண்டரி கத்தாளோன்**
**இங்கர சன்றரு மைந்தரின் முந்தைய னிப்பார்மெய்ப்**
**பொங்கருள் கொண்டு புரப்பவ ளிப்புவி முற்காவல்**
**பங்கமில் தம்பியர் தம்பதி யென்றுரை பாரித்தான்.**

இ-ள்: அக்கூட்டத்தார் அப்படியிருந்தபின் அவ்விடத்துப் பொருந்தின வியாக்கிரபாதர் இவ்விடத்துக் கௌடதேசன் தந்த குமாரரில் முந்தின குமாரனாகிய இரணியவன்மன் இந்தத் தேசத்தைச் சத்தியமான, சிவாக்கினையின் பெருமையினாலே செங்கோல் நடத்தக்கடவன்; குற்றமில்லாத இப்பூமியின் முறைமைக்குத் தம்பிமார்கள் தங்கள் தேசத்துக்கு முதற்காவலாக இருக்கக்கடவர்கள் என்று அவர்கள் பதியாகிய கௌடதேசத்துக்குக் கர்த்தராகக்கடவர் என்கிற வார்த்தையை யாவரும் கேட்ப விரித்துரைத்தார் எ-று (2)

**உருகு பதஞ்சலி மன்னுப மன்னிய னன்மாமன்**
**திருவுடையந்தணர் யாரு முவந்துரை செய்யச்சீர்**
**இரணிய வன்மனை முன்மர பின்மண மேய்வித்தே**
**மருவிய மன்றயன் மண்டப மொன்று வகுப்பித்தார்.**

இ-ள்: இரணியவன்மனை அடிமைகொண்டு தேவ காரியம்முடிய இராச்சியம் கொடுத்த திருவருளின் பொருமை கண்டு நீராளமாய் உருகின பதஞ்சலி பாலியத்திலே திருப்பாற்கடல் பெற்றுக்

கிருஷ்ணனுக்கு விசேட தீட்சை பண்ணி மற்றுமுண்டான எண்ணிறந்த பெருமை பொருந்தின உபமன்னிய பகவான் அவருடைய நல்ல மாதுலனாகிய வசிட்டர் திருவுடையந்தணராகும் தில்லை மூவாயிரவர் மற்றுமுள்ள தெய்வ இருடிகள் யாவரும் பிரியத்துடனே அவ்வண்ணமே செய்யக்கடவது என்று சொல்ல, கீர்த்திமானாகிய இரணியவன்மாவை இராசநீதிக்குப் பொருந்த விவாகஞ்செய்வித்துச் சிதம்பரத்துக்கு அருகாக அவனுக்குப் பொருந்தின இடத்திலே ஒரு அபிஷேக மண்டபமும் கட்டுவித்தார் எ-று. (3)

**மற்றதின் மங்கல மாலைகள் தோரணம் வாழ்தீபம்**
**பொற்றவி செண்பல கைக்குல நெய்பொரி புற்பூநூல்**
**சுற்றிய கும்பமு டன்கல சம்பல சூழ்வித்தே**
**அற்றிகழ் வொன்று சடங்கதி வாச மமைத்தார்கள்.**

இ-ள்: அந்த மண்டபத்தில் மங்கலார்த்தமான தருப்பை, மாலைகள், மாவிலைத் தோரணங்கள், தூண்டா விளக்குகள், கனக சிங்கா தனம், அட்டமங்கலப் பலகைத்திரள், தருப்பை, குசைத்தூறு இவை முதலான புற்கள், நெய், பொரி, பொற்பூ, வெள்ளிப்பூ, கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ, முதலானவை ஓர் இராத்திரி முழுவதும் அதிவாசகிருத்தியம் விளங்கப் பண்ணினார்கள் என்றவாறு. (4)

**காலை தொடங்கி நடந்து சடங்கு கணித்தோதும்**
**வேலையின் மங்கல நீடபி டேகம் வியந்தாடி**
**மூல முயங்கிய மாமுடி தார்முது வாள்பெற்றங் (கு)**
**ஏல விருந்தபி னிட்டன ராண்டொன் றிரண்டென்று.**

இ-ள்: உதயகாலம் துவங்கி ஓமம் நடந்து முடித்துச் சோதிடர்கள் எண்ணியிட்ட முகூர்த்தத்தில் மங்கலார்த்தமாய் இருக்கிற நவதீர்த்தங்களினால் மிக அபிடேகம்பண்ணி, பாரம்பரியமான மகத்தான மணிமகுடம் ஆத்திமலை பழைய வீரகட்கம் வியாக்கிரபாதர் கையினாலே கொடுக்கப்பெற்று அந்த மண்டபத்திலே சிங்காதனத்தில் அருந்தபின் ஆண்டு ஒன்று இரண்டு என்று திருவாண்டெழுத்திட்டார் எ-று. (5)

**சிந்தை மகிழ்ந்தெதிர் வந்தனை தன்றன யன்செய்யத்**
**தந்தை மகிழ்ந்து தழீஇவள ராசிகள் தானல்கிப்**
**புந்தி யிலக்கு புலிப்பதி காவல் புரப்பாயென்(று)**
**அந்தமின் முந்து புலிக்கொடி யங்கை யகத்துய்த்து.**

இ-ள்: சிந்தை களிகூர்ந்து தன்னருட்புதல்வனான இரணியவன்மச் சக்கரவர்த்தி எதிரே வந்து நமஸ்கரிக்க, அருட்பிதாவாகிய வியாக்கிரபாதர் பிரியத்துடன் தழுவிக்கொண்டு மிகுந்த ஆசீர்வாதம் செய்து, அறிவுக்கு அறிவான வியாக்கிரபுரத்தைக் காத்தளிப்பாயாக என்று முடிவில்லாத பழைய வெற்றிப் புலிக்கொடியை அழகிய கைத்தலத்தில் திருவுளம் பற்றிக் கொடுத்து என்றவாறு. (6)

போதுக வென்று வலங்கொடு புக்கருள் மிக்காடும்
நாதன்மு னன்மலர் சிந்தி வணங்க நயந்தண்ணல்
பாத மிரண்டு மெடுத்தவன் முச்சி பரிப்பித்தான்
ஓத மெழுந்திதென யாவரு மோகை யுரைத்தார்கள்.

இ-ள்: வருக என்று பிரதட்சிணமாகக் கொண்டுசென்று உள் புகுந்து அருள்மிக ஆனந்தநிருத்தம் செய்யும் சிதம்பரநாதர் சன்னிதியிலே நல்ல புட்பாஞ்சலி பண்ணி நமஸ்கரிக்கக் கற்பித்துத் தம்பிரானார் திருப்பாதுகை இரண்டினையும் எடுத்து இரணியவன்மன் சிரசிலே வியாக்கிரபாத மகாஇருடி தரிப்பித்தார். அப்போது சமுத்திரம் முகுளித்து எழுந்தாற் போலத் தேவஇருடி பூதகணம் மனிதர் முதலான யாவரும் பிரிய வார்த்தைகள் சொன்னார்கள் என்றவாறு. (7)

ஈறில் பொருந்தன மென்னவை நின்னவை யிப்பார்மேல்
ஆறினி லொன்றுகொ ளஞ்சினி லொன்றுகொ ளத்தாவிப்
பேறு பிறந்தடி யேன்மர போர்கள் பிழைத்தாலும்
கூறரு மன்பு கொடுத்தடி மைப்பணி கொள்கென்றான்.

இ-ள்: என்னுடைய பூர்வார்ச்சிதமான முடிவில்லாத சகல ஐசுவரியமும் தேவரீருக்கு ஆகக்கடவன ; இப்பூமியிலே ஆறில் ஒன்று தேவரீர் கடமைகொண்டருளும்; நின்ற அஞ்சு கூறிலே ஒரு கூறு அடியே னுக்கு இகத்துக்குச் சீவன உபாயமாகத் தந்தருளும்; இப்பெற்றியிலே வந்து என் வமிசத்திலே பிறந்த நின்னுடைய அடியார்கள் குற்றங்கள் செய்தாலும் பொறுத்தருளிச் சொல்லுதற்கரிதாகிய பக்தியை உண்டாக்கி அடிமைத்தொழில் கொண்டருளுக என்றான் என்றவாறு. (8)

அண்ணலு மவ்வகை செய்குவ மென்றருள் செய்போதில்
கண்ணமர் தாரைகள் காரை நிகர்ப்பக் கரைவுற்றங் (கு)
எண்ணரு மின்னரு ளெய்தி யிறைஞ்சி யெழுஞ்சேயைத்
திண்ணிய நன்முனி கொண்டுடை யானடி சேர்வித்தான்.

இ-ள்: தேவநாதரும் அப்படிச்செய்வோம் என்று திருவுளம் பற்றின காலத்துப் பொருந்தின கண்ணீர்த்தாரை மழை ஒப்ப நீராளமாய் உருகி, அவர் எண்ணரிதாகிய இனிய அருள்பெற்று நமஸ்கரித்து எழுந் திருந்து அவ்விடத்திலே நிற்கிற குமாரனை ஞானவீரரான நல்ல வியாக்கிரபாத மகாஇருடி கொண்டுசென்று ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார் ஸ்ரீபாதங்களை அணுகுவித்தார் என்றவாறு. (9)

**அங்கும் வணங்கி வணக்கரு மானையை மேல்கொண்டு**
**மங்கல மாநகர் சூழ்வர மாமுனி தானேவச்**
**சங்க வியங்கள் முழங்க வலங்கொடு தார்மார்பன்**
**பொங்கின பங்கய மாதமர் கோயிலி னுள் புக்கான்.**

இ-ள்: ஸ்ரீமூலத்தானமுடைய சிவபெருமான் சன்னிதியில் நமஸ்கரிப்பித்துப் பாகரால் வணக்கரிய மத்த கஜத்தின் மேற்கொண்டு மங்கலமாய் மகத்தாயிருக்கிற சிதம்பரநகரைப் பிரதட்சிணம்வர வியாக்கிரபாதர் கற்பிக்கச் சங்கவாத்தியங்கள் முழங்க ஆத்திமாலை மார்பனான இரணியவன்மன் பிரதட்சிணமாக வந்து கற்பு மிகுந்த இராசலட்சுமி உறைகின்ற திருமாளிகைக்குள்ளே புகுந்தான் என்றவாறு. (10)

**தார்புனை யாரணி செம்பிய னெம்பியர் தானல்கும்**
**பாரும தூரும தாக வெனாவணி தார்பட்டம்**
**போர்தரு சாமரை தோரைகள் நீள்குடை பொற்பீடம்**
**தேரணி மாவய மாநிதி யாதிகள் சேர்வித்தான்.**

இ-ள்: தாராகத் தொடுத்த ஆத்திமாலையை அணிந்த இரணிய வன்மனானவன் தம்பிமாரை அழைத்து உங்களுக்கு நலம் பொருந்தின தேசமும் கௌடதேசமாகக்கடவது; படைவீடும் கடகமேயாகக்கடவது என்று கற்பித்து, ஆபரணமும் மாலையும் கொடுத்துப் பட்டங்கட்டி, பொருந்தி வீசும் உபய சாமரையும் பீலிக்குடை தவளச்சத்திரம் பொற்பீடம் தேர்நிரை மகத்தான ஆறுபோல மத அருளி பாயும் யானைகள் குதிரைகள் பதாதி கள் முதலானவையும் கொடுத்தான் என்றவாறு. (11)

**வென்றி நடந்தொழு தம்பியர் வந்தடி மேல்வீழ்வுற்(று)**
**அன்றவர் சென்றபின் மன்றம் வணங்கி யவன்றந்தை**
**முன்றொழு தந்தணர் வந்தனை மாளிகை முன்செய்வான்**
**இன்றரு ளென்றவை யெங்கு மிலங்க வெடுப்பித்தான்.**

இ-ள்: அந்தத் தம்பிமார் சிதம்பரநாதருடைய வெற்றி பொருந்தின ஆனந்தக்கூத்தை வணங்கிவந்து தன்னையும் வந்து நமஸ்கரித்து அனுப்பிக் கொண்டு போகத்தக்கவர்களை அனுப்பப்போனபின், சிதம்பரமூர்த்தியினுடைய சேவை பண்ணின இரணியவன்மனானவன் தன்னுடைய பிதாவாகிய விக்கிரபாதரை முன்தொழுது, தில்லை வாழந்தணரை அவரவர் திருமாளிகையிலே சென்று நமஸ்கரித்து, திருமாளிகைகளும் கட்டுவதற்குத் திருவுளம்பற்றும் என்று அநுஞ்ஞை பெற்றுகொண்டு வந்து, எவ்விடத்தும் விளங்க மூவாயிரம் திருமாளிகை கட்டிமுடிக்கத்தொடங்கினான் என்றவாறு. (12)

**ஏழ்நிலை மாளிகை கூளிகை சாளர மேரார்சீர்**
**வாழ்மதில் தோரண வாயில்கள் தேரணி மாவீதி**
**சூழ்வுற மேருவி னேர்பல கோலிய சோழேசன்**
**தாழ்வுடனே மாதவர் யாரையு நீள்குடி சார்வித்தான்.**

இ-ள்: எழுநிலைமாளிகையாகச் சமைத்து மகுடங்கள் வைத்துப் பலகணி வைத்து அழகு நிறைந்த மதில் வாழ்வு பெறப் பண்ணி நிலைத் தோரணம் பொருந்தின வாசல்கள் நிலைத்தேர் நிறைந்த பெரிய திருவீதிகள் சுற்றும் பொருந்த இப்படி மகாமேருவை ஒத்த திருமாளிகை கட்டின இரணியவன்மச் சக்கரவர்த்தி தாழ்ச்சியுடனே மகா தவசுகளை யுடைய திருவுடை அந்தணர் எல்லாரையும் குடியேற்றுவித்தான் என்றவாறு. (13)

**இற்றரு பண்ட மிலங்க *நிலங்களை யேய்வித்து**
**மற்றவர் தம்மி லொருத்த னிருத்தம் மகிழ்ந்தாடும்**
**பற்றரு சின்மய வம்பர மும்பர் பரிந்தாகம்**
**பெற்ற பயன் திரு வம்பல மொன்று செயப்பெற்றான்.**

இ-ள்: இல்வாழ்க்கைக்கு வேண்டத்தக்க பதார்த்தபண்டம் கொடுக்கும் படி நிலங்கள் உண்டாக்கிக் கொடுத்து அந்தத் திருவுடையந் தணருக்குள்ளே ஒருவரான சிதம்பரநாதர் நிருத்தம்செய்யும் பசு பாச ஞானத்தால் அறியப்படாத ஞானமயமாகிய அம்பலத்தைத் தேவர்கள் ஆதரத்துடனே உடல்பெற்ற பிரயோசனமாக ஒப்பற்ற பொன்னம்பலத்தை தானும் திருப்பணிசெய்யப்பெற்றான் என்றவாறு. (14)

**பொன்னணி மாநவ மாமணி யாதி பொருப்பாக**
**முன்னர் கொணர்ந்து குவித்தருள் பெற்று முனிச்செல்வன்**
**தன்னிசை வோடுயர் வானவர் கம்பியர் தம்மைக்கொண்(டு)**
**உன்னரு மம்பல மொன்று சமைத்தணி யொப்பித்து.**

---

* 'நிலங்களி லேய்வித்து' எனவும் பாடம்.

இ-ள்: சுவர்ணம் ஆபரணம் மகத்தான நவரத்தினம் முதலான எல்லாம் மலைப்போலே முன்னே கொண்டு வந்து குவித்துத் தம்பிரானார் திருவருள்பெற்ற விக்கிரபாதர் அனுமதியுடனே பெரிய தெய்வத்தச்சரைக் கொண்டு மனத்துக்கு எட்டாத ஒப்பற்ற அம்பலம் ஒன்று சமைத்து அழகு பெற அலங்கரித்து என்றவாறு. (15)

**காண விலக்க வொழுங்கணி வித்தவை கைக்கொண்டுப்**
**பூணு மணிக்குற டொத்த தளத்தியல் பொற்பாரத்**
**தூணிரை யுத்திர நற்பல கைத்திரள் தொல்கோவைக்**
**கோணமர் கைத்தொகை முச்சி யணைத்தணி கொள்வித்து.**

இ-ள்: கண்ணியம் என்றும் போதராணம் என்றும் இரண்டுவகையாகச் சொல்லும் இவைகளில் கண்ணியத்தின் வகைப்படி யிலே உபாநாதித் தூபி அந்தமான உயரத்தைக் கண்ணியத்தில் இத்தனை அங்கிஷம் இன்ன அவயவம் என்று கற்பித்துக்கொண்ட பட்டோலை செய்து கையிலே பிடித்துக் கொண்டு, அதிட்டானவசத்தாலே அதிட்டானத்துக்குப் பொருந்த உட்பீடம் என்கிற பணியை இரத்தினங்களி னாலே செய்து, அதிட்டானத்துக்குச் சொன்ன கூற்றிலே அதிட்டானம் பன்மணிகளாலேபண்ணி அதிட்டானம் பண்ணி முடிந்த இடத்திலே பொற்பலகையாக நன்றாகத் தளமிசைத்து, இதின்மேல் தூணுக்குச் சொன்ன கூற்றிலே பிரமகாந்தம், விஷ்ணுகாந்தம், உருத்திரகாந்தம், சூரியகாந்தம், சூரியகண்டு பேதம், சந்திரகாந்தம், வியாளபாதம், அத்திபாதம், சிங்கபாதம் இவை முதலாகவுள்ள பல தூண்களைப்பற்றி அடைவே நிறுத்திப் பலவகைப் போதிகையும் உட்பட நிறுத்திப் பிரஸ்தாரத்தில் சொன்ன கண்ணியத்திலே உத்திரத்தின் அவயங்களுக்கு அங்கபோதத்தின் அவயங்களும் கூடப் பலகால் சாதனம்பண்ணி, வித்தார்த்திலங்கிசத்தில் அங்கிசவழியிலே கைக்கு நீளங்கொண்டு இந்தக் கையழகு பொருந்த வக்கிரமாக வெட்டி முகத்தாயதே சேர்ப்பித்து இதற்கு அக்கிரத்துக்கு அணித்தாகச் சந்திரகாந்தத்திலே அதனைப்பலகால் சாதனம் பண்ணுவித்து இதின்மேல் தூபிக்குச் சொன்ன அங்கிசத்தால் தூபிப் பிரதிட்டை பண்ணினான் என்றவாறு. (16)

**பன்மணி மாலைகள் கொண்டணி தொங்கல் பயிற்றிச்சூழ்**
**பொன்மலி முன்மதில் கோபுர வாயில் பொருந்தச்செய்(து)**
**என்மல மங்கவ ருங்கரு மூல விறைக்கும்பொன்**
**தன்மய மாமொளி ராலய மொன்று சமைப்பித்தான்.**

இ-ள்: பல இரத்தினமாலைகளைக்கொண்டு அழகுபெற நிரை சிறக்க நாற்றி, பிரதமாவரணம் முதலான பொன்மதில்களும் அந்த

மதில்களில் கோபுரங்கள் பிரதிபந்தம் பாதபந்தம் போதம் முகமாலை பக்கசாலை கூடம் பஞ்சரம் அந்தராளம் கும்பலதை விருத்தகூடிதம் தோரணம் கண்டம் வேதிகை சிகரம் பூரணகும்பம் தூபி இந்தவகைப் பொற்சொரூப மாக வாசல்கள்தோறும் விதிப்படிப் பொருந்தசெய்து, பசு பாச ஞானங்கள் நீங்கத் தோன்றி அருளின் கருமூலகாரணன் என்கிற திருநாமத்தை யுடையவரான ஸ்ரீமூலத்தானமுடைய தம்பிரானார்க்கும் ஞானமயமான கனகாலயம் ஒப்பறக் கற்பித்தான் என்றவாறு. (17)

## வேறு

இன்னவகை திருப்பணிகள் பலவுஞ் செய்த
இரணியவன் மனைமுனிவர் யாரு மேத்திப்
பன்னரிய புகழ்கூறி நீறு சாத்திப்
பரந்தகலை வழிவழிபா டதற்குப் பல்க
மன்னுவகை யினினிபந்த வகுப்பு நாதன்
வைத்தபணி யெனமுனியை வணங்கி வாழ்த்திச்
சென்னியிலஞ் சலிசெய்திங் களித்த தன்றோ
திருந்துதவ மெனக்கென்றான் செங்கோள் மன்னன்.

இ-ள்: இந்தப்பிரகாரம்கனகமயமாகப் பஞ்சாவரணத்துக்குட்பட்ட திருச்சிற்றம்பலம், ஈசுவரி ஆலயம், புண்டரீகப் புட்கரணி மற்றுமுள்ள மண்டபங்களும் ஆவரணத்துக்குப்புறத்தில் வியாக்கிரபாதர் பதஞ்சலி பூதப் பசாசு காளி மூவாயிரவர் பிரமதேவர்களால் பூசிக்கப்பட்ட சிவலிங்க மூர்த்திகளுக்கு ஆலய முதலான மண்டபங்கள் கோபுரம்மதில்கள் முதலான திருப்பணிகள் பலவிதமாகச் செய்வித்த இரணியவன்மச் சக்கரவர்த்தியை இருடிகளெல்லாரும் புகழ்ந்து ஆசீர்வாதம் சொல்லித் திருநீறு சாத்தி விரிந்த ஆகமங்களிலே நித்திய பூசைக்குச் சொன்ன பந்ததியின் கட்டளைப்படி, தம்பிரானார் அருளிச்செய்தபடி என்று வியாக்கிரபாதர் அநுக்கிரகிக்க அவரை நமஸ்கரித்துத் துதித்து முகத்தாவிலே அஞ்சலியத்தனாய்த் தேவரீர் கற்பித்தன்றோ அடியேனுக்குக் குற்றமற்ற தவசு என்று இரணியவன்மன் சொன்னான் என்றவாறு. (18)

இத்தகைய முனிவருட னொரு நாள் மன்னன்
இலக்கியபே ரம்பலத்தி னிருந்து நூலின்
வைத்தமுறை யிறைவற்கு மஞ்ச னந்தூ
மலரமுது முதலான மல்க வைத்து
நித்தவிழா வெழவேண்டுஞ் செல்வ நல்கி
நிலவுபதஞ் சலிமுனியா னிறுத்து வித்த
புத்தகமின் புறமுனிவர் யானை யேற்றிப்
பொற்கோயில் வலங்கொண்டு புகுவித் தார்கள்.

இ-ள்: இப்படி மகத்தான வியாக்கிரபாதர் பதஞ்சலி மூவாயிரவ வர் முதலான இருடிகளுடனே இரணியவன்மன் ஒரு நாள் அப்பேரம்பலத் திலிருந்து பூசாபத்ததியில் சொன்ன கிரமத்திலே தம்பிரானார்க்குத் திருமஞ்சனம் திருப்பள்ளித் தாமம் நைவேத்தியம் முதலானவை குறைவறக் கற்பித்து நித்தியோற்சவம் நடத்துவதற்கு வேண்டியால்லாம் கட்டளை செய்வித்துக்கொடுத்துப் பிரசித்தரான பதஞ்சலிமகா இருடியினாலே சங்கிரகிக்கப்பட்ட சித்தாந்த இரத்தினாவளி என்கிற ஆகம ஏட்டை அதிகப்பிரியத்துடனே இருடிகளெல்லோரும் யானைப்பிடரியின் மீது வைத்துப் பொற்கோயிலைப் பிரதக்ஷிணமாக வருவித்து உள்ளே புகுவித்தார்கள் என்றவாறு. (19)

மனங்குளிர வன்னவர்கள் பின்னு முன்னூல்
மருவியறை மித்திகங்கள் வகுப்பான் மாதத்
தினங்கடொறு முணர்ந்துமது மாத மேவத்
திருந்துதம னகவிதியைச் செலுத்து முன்னா
அனங்கனது வள நகர மணையுங் காலை
அந்தகர்போன் மன்னவனிங் கமைக்க வென்ன
இனங்கொளிருஞ் சனங்கள் பணிந் தின்ப மெய்தி
எந்தைதிரு வசந்தவிழா வெழுவித் தார்கள்.

இ-ள்: இரணியவன்மன் சித்தம்களிகூர இதுவுமன்றி அந்த இருடிகள் அந்த ஆகமத்தில் பொருந்தின நைமித்தியங்கள் வகுப்பறுக் கும்படிக்கு மாதம் நக்ஷத்திரங்களின் அடைவே மாதபூசை விசாரித்துச் சித்திரை மாதம் பொருந்தக் குற்றமற்ற தமநகவி தியாகிய கொழுந்து சாத்தும் கிரியையை முடித்தற்கு முன்னாகக் காமராசன் தனதான பட்டினபிரவேசம் பண்ணுகிறகாலத்தில் அந்தப் பட்டினத்தின் சவுபாக்கியம் போல இந்த நகரியையும் இராசாவே அலங்கரிப்பாயாக என்று இருடிகள் கற்பிக்க இராசாவுக்கு இஷ்டமான பிரதம மனிதர்கள் நமஸ்கரித்துச் சித்தம் களிகூர்ந்து தம்பிரானாருடைய வசந்தோற்சவத் தை மிகவும் நடத்துவித்தார்கள் என்றவாறு. (20)

விரிந்தபுதுப் புனல்விளையாட்டாடி மாதம்
விரவுதிரு வாண்டெழுத்து விழவு மோங்கப்
பொருந்தும்வகை புரிந்தாடி புரட்டா திக்குள்
புகழ்பதினான் கட்டமிக ளொன்றிற் பூசை
தருந்தகுதி மிகுதி குறை தவறு நீங்கத்
தந்துநவந் தருபந்தாச் சமைத்து யாகம்
பரந்தவிர தாங்கமுடன் பவித்தி ரத்தைப்
பயில்வித்தைப் பசிப்பூரப் பரிச மைத்தார்.

இ-ள்: பரந்த புதுப்புனல் விளையாட்டு ஆடிமாதத்திலே கூடத் திருவாண்டெழுத்திட்டுத் திருநாளும் விளங்கப் பொருந்த நடத்திமுடித்து ஆடிமுதல் புரட்டாசிக்குட்படக் கற்பித்துச் சதுர்த்தசியிலாவது அட்டமியிலாவது ஒன்றி லொன்றிலே நித்தியபூசைக்குக் கற்பித்தபடியில் ஏற்றக்குறைசல்றக் குற்றம் திர முந்நூல் ஒரு நூலான ஒன்பது நூலான இருபத்தேழு இழையாலே பந்துமாலையாகப் பண்ணி அங்குரார்ப்பணம் மண்டபபூசை வேதிகார்ச்சனை, அக்கினி காரியம் ஸ்தாலிபாகம் பவுத்திரா திவாசம் வினியோகம் சயனம் பிரார்த்தானம் மண்டபபூசை முதலாக விரிந்த பவுத்திரம் சாத்தி ஐப்பசிப் பூரத் திருநாளைக்குக் கட்டளை பண்ணுவித்தான் என்றவாறு. (21)

**அந்தமிலெண் ணான்கறமுந் திருக்கண் சாத்தி**
**அவற்றின்மிகத் தனித்தென்னை யாண்ட வன்னை**
**எந்தைபிரான் மைந்தர்களோ டெழுச்சி கொள்ள**
**எழுந்தருளி வருந்திருநோன் பியைய வைத்துச்**
**சிந்தையின்மா லயனாண வெழுந்த செந்தீத்**
**திரளுருவண் ணலைநோக்கித் திகழ்க ணங்கள்**
**வந்தெவையு மழலாகி மல்கல் போலும்**
**வளங்கொடிரு விளக்கீடு விளங்க வைத்தார்.**

இ-ள்: முடிவில்லாத முப்பத்திரண்டு அறங்களையும் திருக்கண் சாத்தியருளி அந்த முப்பத்திரண்டு அறத்திலும் பார்க்க மிகுதி யாக என்னைத் தனியே ஆண்டுகொண்டருளிய லோகமா தாவாகிய சிவகாமசுந்தரி முன்னும் செகற்பிதாவாகிய சிதம்பரமூர்த்தி பின்னும் விநாயகர் சுப்பிரமணியர் அவர்க்குப் பின்னுமாகத் தண்டு சாத்தி எழுந்தருளிவருகிற திருப்பூரத்திருநாள் நடத்துவித்துப் பிரமா விஷ்ணுக்கள் மனதின் அகங்காரங்கள் கீழ்ப்பட மேலிட்ட தழற்பிழம்பான சோதிலிங்கத்தைத் தியானித்து வந்த கணங்கள் எல்லாம் அந்தத்தழல் வடிவுபெற்றுச் சோதிலிங்கத்தில் ஒத்த வளம் பொருந்திய தீபோற்சவத்தை விளங்க நடத்தினான் எ-று.

திருளுரு அண்ணல் என்பது சொக்கப்பனை.திகழ் கணங்கள்என்பது திருக்கோயில் நிறைய விட்ட திருவிளக்கு. (22)

மார்கழியா திரைநாளின் முனிவ ரெல்லாம்
வந்துதடம் படிந்துபொது வணங்கி வாழ்த்திப்
பார்தகுமா தொழுதகன்றார் முன்ன மென்று
பன்னமுனி மன்னவனீர் பயிற்று மிந்தச்
சீர்தருமா தினமென்னத் தில்லை வாழும்
திருவுடையந் தணரெந்தை திருநா ளென்று
சார்தருமா நவதீர்த்த நீத்தங் கொண்டு
தஞ்சனமஞ் சனவிழவு தகுவித் தார்கள்.

இ-ள்: திருமார்கழித் திருவாதிரை நட்சத்திரத்திலே இருடிகளெல்லாரும் வந்து சிவகங்கையிலே ஸ்நானம் செய்து சிதம்பரசேவை பண்ணித் தோத்திரம் செய்து பூமியிலே அட்டாங்கமாக நமஸ்கரித்து முத்தராய்ப் போனார்கள் முன்னாளிலே என்று வியாக்கிரபாதர் சொல்ல, இரணியவன்மச் சக்கரவர்த்தி யானவர் நீங்கள் இந்தத் திருநாளை விதிப்படியே நடத்துங்கள் என்று சொல்ல, தில்லைவாழும் திருவுடையந்தணர்கள் யாரும் எம்முடைய தம்பிரானார் திருநட்சத்திரம் என்று பிரியப்பட்டுக்கொண்டு தம் தம்முடைய பாவங்கள் போக வந்து சிவகங்கை படிந்து சிதம்பரக்ஷேத்திரத்தில் உண்டான நவதீர்த்தமும் அது நீங்கலாக மற்றும் உண்டாகிய எண்ணிறந்த தீர்த்தவெள்ளம் எல்லாமும் கொண்டு அருளின தண்ணளிபோன்ற திருமஞ்சனத் திருநாள் நடத்தினார்கள் எ-று.

இதில் சிதம்பரத்தில் தீர்த்தங்கட்குவகை "பாம்போடை புலிவாவி நந்தன்குட்டம் பாளைமான் சிவகங்கை பந்தன் கேணி, தேம்புனல்சேர் கொள்ளிடம்சீர் மணிமுத்தாறு திரை அலைக்குங் குய்யமிவை முதலாயுள்ள, வாம்பயிலு வனவாவி யாவும் தில்லை அம்பலத்தைச் சூழ்தலயன் திருமாலொக்கும், பூம்புனல்சேர் புண்டரிகப் பொய்கைமன்றிற் புனிதனருள் எனப்புலவர் புகன்றாரன்றோ" என்பதனால் கண்டுகொள்க. (23)

போனகமால் வரைபோன்மா நிவேத னத்தைப்
பொருந்தியதைப் பூசத்திற் புணர்வித் தேத்தி
ஈனமிலா முனியரசன் தன்னை நோக்கி
இமையவர்கள் அனைவரும்வந் தேத்தி வாழ்த்தும்
ஆனியென வருமாண்டி லானி மாதத்
தருள்விரவுத் திரதினம்வந் தணுகிற் றென்னத்
தேனகுதா ரணிமன்ன னிறைஞ்சி யானித்
திருநாளிங் கெழவிழவு செய்க வென்றான்.

இ-ள்: சோற்றுமலைபோல மகத்தான நிவேதனமாகிய திருப்பாவாடையைத் தைமாதத்தில் பொருந்தின பூசத்திலே விதிப்படி பொருந்த அமுதுசெய்யப்பண்ணித் துதித்துக் குறைவற்ற தவத்தையுடைய வியாக்கிரபாதர் இரணியவன்மனைப் பார்த்துத் தேவர்களெல்லோரும் பூலோகத்திலேவந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய் யும் ஆனிமாதத்திலேயா யிருக்கும் மாதோகலைவம் என்னத்தக்கதாக மற்ற வருஷத்தில் அருள்பொருந்தும் திருஆனியுத்திரம் வந்து அணித் தானது என்று சொல்ல, வண்டு மகிழும் ஆத்திமாலையையுடைய இரணியவன் மச்சக்கரவர்த்தி வியாக்கிரபாதரை நமஸ்கரித்துவந்து ஆனித்திருநாளில் இரதோற்சவம் இந்தத் திருப்படைவீட்டுக்கு ஒழிவில்லை எனத்தக்கதாக நடத்துங்கள் என்று பிரதான மந்திரிகளோடே சொன்னான் எ-று. (24)

தாரும்பா ருந்தரித்த தடந்தோ ளானும்
    தாவிலரு முனிவர்களுந் தலைவன் முன்னின்(று)
ஈரொன்பான் முதலான வோரொன் பானாள்
    எந்தைபிரான் திருவெழுச்சி யின்ப மெய்த
வாரும்பா ருள்ளோரும் வானுள் ளோரும்
    மாலயனும் மேலவரு மலங்கள் நீங்கி
யாரும்பா தம்பணிதற் கென்று வாயில்
    இலங்கவிடைக் கொடிவலங்கொண் டேற்று வித்தார்.

இ-ள்: ஆத்திமாலையையும் பூமியையும் தரித்த புயத்தையுடைய இரணியவன்மச் சக்கரவர்த்தியும் குற்றம் இல்லாத மகா இருடிகளும் ஆன்மநாயகரான சிதம்பரநாதர் முன்னின்று பதினெட்டுநாள் முதலான ஒன்பது நாளாகிய இருபத்தேழு நாளும் என்னுடைய பிதாவாகிய தம்பிரானார் திருநாள் தொழுது கண் களிகூர வாருங்கள் ; பூமியில் உண்டான மனிதரும் சுவர்க்கத்தில் உண்டான தேவர்களும் பிரமஇருடிகளும் உருத்திர மகேசுராதிகளும் உங்கள் பாசங்கள் நீக்கி, எல்லோரும் தம்பிரானார் ஸ்ரீபாதசேவை பண்ணுதற்கு என்று பேரிகை தாடனம் முதலான தேவதாகானத்தைப் பண்ணி இடபக்கொடியைப் பிரதட்சிணமாகக் கொண்டுவந்து ஏற்று வித்தார்கள் என்றவாறு. (25)

மண்ணுலகி லுண்ணிறைந்த மைந்தர் மாதர்
வானவர்க ளரமகளிர் மற்றுள் ளோரும்
எண்ணரிய மகிழ்ச்சியுடன் திசைகள் தோறும்
எய்துவார் மெய்தகுநோ யிரித்தோ மென்பார்
கண்ணிறைபொற் கோபுரங்கை தொழுது வீழ்வார்
கனகமயத் திருவீதி கண்டு வாழ்வார்
அண்ணல்பொதுப் பணிந்தயர்வார் நடமுன் போற்றி
ஆடுவார் பாடுவா ராயி னார்கள்.

இ-ள்: பூலோகத்தில் ஸ்திரீ புருஷர்களாய் உள்ளவர்களும் தேவலோகத்தில் உள்ள தேவர்களும் தெய்வ ஸ்திரீகளும் மகேசுராதிகளும் எண்ணரிதான பிரியத்தோடும் பத்துத்திசைகளிலும் வந்து பொருந்துவார்; சனன வியாதியைத் துறந்தோம் என்பார்; காட்சிக்கு நிறைந்த பொற்கோபுரங்களைக் கும்பிட்டு நமஸ்கரிப்பார்; பொன்மயமான திருவீதிகளைக் கண்டு பெருவாழ்வுபெற்று வாழ்வார்; தம்பிரானாரது சிதம்பரத்தை நமஸ்கரித்துத் தம்மை மறந்து நிற்பார்; ஆனந்த நிருத்தத்தைக் கண்டு துதித்து ஆனந்தபரவசராய் ஆடுவாரும் பாடுவோரும் ஆயினார் என்றவாறு. (26)

வேறு

இப்பெற் றியில்வரு மெத்திக் கினருமி
தெம்மிற் றகுமென நம்மிற்றுத்
துய்ப்பொய்ப் பிறவிகள் துய்த்தற் கெனமகிழ்
துணிவால் வருபவ ரணிவாழத்
தப்பற் றுயர்தவ மூவா யிரவர்கள்
தாவா மறையொடு தேவாரக்
கைப்பற் றியபணி முற்றப் புலிமுனி
கழலான் விழவெழு தொழில்செய்வான்.

இ-ள்: இந்தப் பேறு பெறும் எல்லாத் திசையிலுள்ளோரும் இந்தப் பாக்கியம் பசு பாச ஞானம் நீங்கினவர்களுக்கு அல்லவோ கிடைக்கும் என்று அகங்காரங்கள் நீங்கித் தீரப்புசித்துத் தொலைக்க வேண்டின சஞ்சிதாதிகளில் தோற்றம் நஷ்டமிடுதற்கு நிச்சயம் என்று வருகிற அடியார் நிறைவாழ்வு பெற விச்சின்னமில்லாத பெரிய தவசுகளை உடையரான மூவாயிரவர் ஒழியாத வைதிக சைவமந்திரங்களுடனே சோடசஉபசாரம் முதலான பூசைக்கு வேண்டினவைகள் சேரவியாக்கிரபாத மகாஇருடி பாதபத்தரான இரணியவன்மன் மாதோற்சவத்துக்குத் தக்க திருநாட்படிகளைச் சோடிப்பான் ஆயினான் என்றவாறு. (27)

நண்ணித் தினகரன் முதலோர் கிழமைகொள்
நலமார் நவமணி யணிமேவப்
பண்ணிப் பரிகல முதலா யினபகர்
திருவா சிகையரி பயில்பீடம்
விண்ணிற் றிகழ்தரு மகரத் தொழிலின
விரிவெண் குடைமிடை கொடியென்றென்று
அண்ணற் குரியன வெண்ணற் கரியன
அம்பொற் படிதிரு முன்புய்த்தான்.

இ-ள்: விதிப்படிக்குப் பொருந்த ஞாயிற்றுக்கிழமை முதலான ஏழு வாரத்துக்கும் மாணிக்கம் முத்து பவளம் மரகதம் புட்பராகம் வைரம் இந்திரநீலம் கோமேதகம் வைடூரியம் இந்த இரத்தினம் ஏழு கிழமைக்குமாகவும் எண்ணிறந்த திருவாபரணம் அந்தந்த வாரப்படியாகப் பண்ணிப் பரிகலம் முதலானவைகளும் சுடர்த் திருவாசிகை வட்டப்பூ சத்திரப்பூ முதலாகச் சொல்லும் திருவாசிகைகளும் வீரசிங்காதனங்களும் ஆகாசத்தில் விளங்கும் மகரத்தொழிலையுடைய கொடி விரிந்த வெண்கொற்றக்குடை நடுவே பொருந்தும் கொடிகள் என்றென்று வெகுவிதமாகச் சொல்லப்பட்ட பரமசிவத்துக்கு உரியனவும் எண்ணுதற்கரியனவுமாகிய சத்திர சாமரங்கள் எண்ணிறந்தன பொற்படியாகப் பண்ணுவித்துச் சன்னிதியில் கொண்டுவந்து குவித்தான் என்றவாறு. (28)

கடமா றெனவுமிழ் களியா னையினணி
கதிர்மா மணி நிலை தருதேர்முன்
திடமாய் நடைபெறு வடமால் வரைபுரை
சிலதேர் கவரியி னிரைதோரை
மிடைவாள் முகிறொடு கொடியா டைகள்விட
விழியா ரிசைவளர் மொழியார் பொற்
படகா திகள் நட மிடுவா ரொலிகடல்
பலவா மென நனி பயில்வித்தார்.

இ-ள்: மதங்கள் ஆற்றுக்கால் போல ஊறிவரும் மத்த கஜங்களின் நிரைகள் ஒளிபொருந்தின திவ்விய இரத்தினங்களினாலே பண்ணப்பட்ட நிலைத்தேர் முன்னே திடமாக நடக்கும் தொழிலைப் பெற்ற பெரிய மகாமேருவை ஒப்பான சிலதேர்கள் சாமரநிரைகள் பீலிக் குடைகள் நெருங்கி உயர்ந்து மேகங்களை அளாவின துகிற்பதாகைகள் ஆலாலம் போன்ற விழியார் சங்கிதம் பொருந்தி வரும் வார்த்தையுடைய வர்கள் பொலிவினை உடையதாகிய படகாதிவாத்தியக்காரர் நிருத்த மாடுவார்களால் உண்டாகப்பட்ட ஆராவாரம் அநேகக்கடல் போல மிகப் பண்ணுவித்தார் என்றவாறு. (29)

மேவும் பர்கள்மிடை மகுடஞ் சொரிமணி
விலகிப் பொலி திரு வலகிட்டுத்
தூவண் புனன்மது மலர்வெண் பொரிநனி
துதைவித் தெழின்மறு குயர்தெற்றி
பாவுந் துகில்பொதி யுறவங் கமுதணி
பலகும் பழுநிலை வளர்செம்பொன்
தீபங் களுமலி தரமங் கலவணி
திகழத் திசைதொறும் நிகழ்வித்து.

இ-ள்: இரதோற்சவத்துத் திருவீதியில் வந்து பொருந்தும் தேவர்கள் நெருக்கத்தினாலே உதிர்ந்த மகுட இரத்தினங்களை இருமருங்கும் தள்ளி நன்றாகத் திருவலகினாலே திருவலங்கிட்டுச் சுத்தம் செய்து, யாகசலத்தினாலே இடையறத்தெளித்து, பரிமள புட்பங்கள் வெண்பொரிகள் இவைகளினாலே மிகவும் நிறைத்து அழகு பொருந்திய திருவீதியில் அவரவர் வாயில்தோறும் இட்ட உயர்ந்த வேதிகையில் பொருந்தின காவணத்தில் அஸ்தரபரிவேஷிதமாய்ச் சலபூரிதமான பல பூரணகும்பங்களும், நிலைபொருந்தின பொற்குத்துவிளக்குகளும், அதில் விளங்கும் தீபங்களும் வளமை தர, இப்படிச்சொல்லப்பட்ட மங்கலார்த்தமானவை எல்லாம் ஒளி சிறக்க நாலு வீதிகள் தோறும் செய்வித்து என்றவாறு. (30)

பொற்பா லிகைமுளை பொலிவித் தளவறு
களபப் புதுவிரை மெழுகிச்சீர்
இற்பான் மணவணி தலவா யில்கள் கமு
கேரார் கதலிகள் சேர்வித்து
வெற்பா மெனமுகில் வரவா ரணநிரை
வெகுவா தெதிர்பொரு கரமானக்
கற்பா வியநெடு நிலைமா ளிகைமணி
கட்டா வளர்கொடி விட்டார்கள்.

இ-ள்: பொற்பாலிகைளிலே அங்குரார்ப்பணம் பண்ணி அளவிறந்த சந்தனம் கஸ்தூரி கர்ப்பூரம் மிருகமதாதிகளினால் மெழுகிச் சீர்விளங்கும் இந்த வீடுகள்தோறும் கல்யாண ஒழுங்கு சிறக்க எழுநிலை மாளிகை வாயில்கள்தோறும் கமுகும் வாழையும் அழகுபெற நாட்டி, மலை என்று சொல்லி மேகம் படிய வரப் பயப்படாமல் எதிர்ப்பட்டு யானைகளது துதிக்கையினால் தள்ளியும் வீசியும் அடித்தும் பிடித்தும் பொருமாறு போல நவரத்தின ஒளி பரந்த நெடுநிலைமாளிகைகள் தோறும் நீளிய கொடிகளினாலே மணிகளைக் கட்டிப் பறக்கவிட்டார்கள் என்றவாறு. (31)

**இடமால் வரை நிரை கண நா தர்களுடன்**
**இறையா மெனவெழு நிலைநீடு**
**மடமா னவைதொறு மதிமா சுணநதி**
**மருவா வளர்சடை யினர்பாதத்(து)**
**அடைவார் வடகலை தொடர்வார் திருவமு**
**தடுவா ரடுவென வடைவாவைத்(து)**
**இடுவா ரரகர விடுவார் வரவர**
**எண்டா னறவெதிர் கொண்டார்கள்.**

இ-ள்: இடமாகிய பெரிய கயிலாயத்தில் எழுந்தருளி இருக்கிற ஸ்ரீகண்டபரமேசுவரரும் அவரைச் சேவித்திருக்கிற கணநாதர்களும் போல எழுநிலை உயர்ந்த எழுநூறு மடங்கள் தோறும் சந்திரன் சர்ப்பம் கங்கை பொருந்தாத நீண்ட சடாதாரிகளும் அவர்களை நமஸ்கரிக்கிறவர் களும் ஆகமசாத்திரம் படிக்கிறவர்களும் திருவமுது சமைக்கும் அவரும் சமைத்த அமுதைப் பந்தி வைத்துப் படைப்பாருமான இவர்கள், அரகர என்று வரும் எண்ணிறந்த பேர்களை வாருங்கள் என்று எதிர்கொண்டு நிற்பார்களாயினார் என்றவாறு. (32)

**விண்ணோர் வனிதையர் மகவான் முனிவர்கள்**
**விரிபா ரிடமிகு கண நாதர்**
**மண்ணோ ரெனவுரு வினராய் வழிபட**
**மதமார் கயமுகன் முதனாளோர்**
**எண்ணோ ரளவாறு கனிபான் முதலிய**
**இசைவித் தவையவன் மிசைவித்துப்**
**பண்ணோ டியன்மொழி யவளோ டிறைதரு**
**பரவும் பவனிகள் பயில்வித்தார்.**

இ-ள்: தேவமாதர்கள் இந்திரன் இருடிகள் பூதங்கள் மிகுந்த கணநாதர்கள் இவர்கள் எல்லாரும் மானிடவேடத்தைக்கொண்டு திருநாளில் ஊழியம்பண்ணி மதமார்ந்த வேழமுக விக்கினேசுவரருக்கு ஒவ்வொன்று எண்ணிறந்த முப்பழம் திரட்டுப்பால் பணியாரம் முதலான அவலோடு கூட்டி முதல் திருநாளில் அமுது செய்யப்பண்ணி, பண்ணு டனே பொருந்தின திருவார்த்தையையுடைய சிவகாம சுந்தரியம்மையுடன் தேவராசனான தம்பிரானார் எல்லோரும் பரவக் காட்சி தந்தருளும் திருப்பவனிகள் நாள்தோறும் விருஷபயாகம் துவசாரோகணம் பேரி தாடனம் அங்குரார்ப்பணம் யாகசாலை அஸ்திரயாகம் பேரி தானமயானக்கிரமம் பரிவேடம் நீராசனம் கவுத்துகபந்தனம் தீர்த்தசங்கிர கணம் சூர்ணோற்சவம் தீர்த்தத் துவசாவரோகணம் தபனம் ஆன

அப்பதினாறு அங்கம் முன்னடந்த அங்கம் நீங்கலான அங்கங்களும் சிறக்க ஆயுதபாணியர் குதிரையணியாகவும் அதன்பின் யானையணியாகவும் அதன்பின் பசுபதாதிகளாகவும் அவர்பின் மகாவிரதராகவும் மகாசைவராகவும் அவர்பின் பிராமணராகவும் அவர்பின் தேவர்களான சோடசபத்தியில் உள்ளவர்களாகவும் அவர்பின் கணபதி சுப்பிரமணியராகவும் அவர்பின் உத்திரகணிகையராகவும் அவர்பின் காயகராகவும் அவர்பின் நிருத்தகாரராகவும் அவர்பின் காயகராகவும் அவர்பின் நிருத்தகாரராகவும் அவர்பின் மத்தளாதி வாத்தியக்காரராகவும் விதிப்படியே அணிவகுத்து இந்த அணிக்குப் பின்பாகத் தம்பிரானார் பார்வதி சகிதராக எழுந்தருளவும் தம்பிரானாரைச் சூழத்திக்குப் பாலர்களும் ஆயுதமூர்த்திகளும் சேவித்து வரவும் வியாக்கிரபாத பதஞ்சலிமுனி முதலாயுள்ள இருடிகள் திருப்புறக்கொடை சேவிக்கவும் தக்க திருநாளை நடத்துவித்தார் என்றவாறு. (33)

செழுவான் மதிபுனை பவனா னியில்வரு
திருநாள் விழவெழு பொழுதாரத்
தொழுவார் பிறிவரு நிலையா னினைவொரு
துணிவான் மொழியொரு பொருள்தோய்வற்(று)
எழலா லழிவுறு தொழிலால் விழிமழை
இசைவா லிருபய னிலதாவுற்(று)
அழியா தகமலி கசிவா லருளை
அடைந்தா ரினையர் மிடைந்தார்கள்.

இ-ள்: வளமைநீட்டித்த சந்திரசேகரானான திருவம்பலமுடைய தம்பிரானார் ஆனித்திருநாளில் எழுந்தருளிப் புறப்பட்ட அவதரத்தில் அனுபவசித்தமான பரமானந்தசுகத்தை வெளிப்படக் கண்ணாரக்கண்டு தொழுவார் எண்ணிறந்த பேர் இரண்டற்ற நிலையினாலே அன்னியமின்றி ஒருணர்வாதலால் வாசனையால் பண்ணுகிற தோத்திரங்களுக்குச் சுட்டில்லாத படியாலே ஒரு பொருளில் பொருந்தாமல் தழுதழுத்தலால் பிரதட்சிண நமஸ்காராதி கன்மங்களும் நழுவுதலால் கண்ணீர் மழைத்தாரை கொள்ளுதலால் இதஅகிதமில்லாதபடியினாலே ஒன்றைப்பற்றி மயங்காமல் ஞானானந் தக்களிப்பினாலே அருளாக்கமான முத்தான்மாக்கள் அனந்தங்கோடி பேர் நெருங்கிச் சேவித்தார்கள் என்றவாறு. (34)

மன்றா டியதிரு நடரா சனதுயர்
மணிமா ளிகைவெளி வளர்வானில்
குன்ற விறன்மணி முடிவா னவரணி
குழுமா னுடர்திர ளொடுகூடி
நின்ற ளெனவகி னயமே வியவுரு
நேசத் தவரவர் பாசத்தே
சொன்றாய் நிழலெழு மொளிமே னியிலெனை
உயருத் திரவிழ வயர்வித்தார்.

இ-ள்: மன்றினில் ஆடியருளிய நிருத்தராசருடைய பெரிய திருமாளிகையின் உள்ளாடு வெளியிலே உயர்ந்த சுவர்கத்தில் குறையாத வீரத்தன்மையையுடைய மணிமுடி வானவரது கூட்டங்கள் திரட்சையான மிகுந்த மக்கட்கூட்டத்துடனே கூடி, தங்களிடத்துத் தேசோரூபத்திலே இவர் இரட்சியாவண்ணம் பிரதிபலிக்க நின்றாற்போலவும் தம்பிரானார் சாத்திக் கழித்த சாந்துதரித்தவடிவுடைய பத்தசனங்கள் தம்தம்முடைய பாசத்தின் ஒளி திரண்டு நிகழ் எழுந்தாற்போலவும் நெற்றியில் விளங்கும் பெரிய திருஆனி உத்திரத் திருநாளைத் துவசாரோகணத்துடனே ஆனந்தமாக நடத்தி முடித்தார்கள் என்றவாறு. (35)

அருணற் புரவல னெதிர்முற் கதைமுனி
அறைவா னொருநிரு தனைவேறற்(கு)
இரணத் திறல்கரு விருளிற் றரவர
இகலா னெனவெறி கயிறாலே
மரணத் தினையுற வருணற் கதுபழி
வழியா யொருகடி வடிவாகிச்
சரணத் திருகரம் விரவக் களமொடு
சந்தித் திடுநெறி பந்தித்து.

இ-ள்: அருள் சிறந்த நல்ல இரணியவன்மச் சக்கரவர்த்திக்கு வியாக்கிரபாதர் பூர்வகதை ஒன்று அனுக்கிரகிப்பார்; ஒரு நிசாசரனை வெல்லும்படிக்கு யுத்தம்செய்து வெல்லும் உபாயம் கற்பிக்க இராத்திரி இருளில் வருணகுரு வர, கபடவேடத்தைக் கொண்டு மாற்றான் வந்தான் என்று எறியப்பட்ட பாசத்தினாலே குரு மரணத்தைப்பொருந்த வருணனுக்கு அந்தக் குரு நாசமான பிரமகத்தி பாவமான பழி ஒரு பசாசு ரூபமாகிக் கையையும் காலையும் கட்டிக் கழுத்திலே ஏறிட்டு முழங்கால் முழங்கை தலை எல்லாம் கூட்டி ஒன்றோடு ஒன்று சந்திக்கக் குண்டுகட்டாகக் கழலாமற்கட்டி என்றவாறு. (36)

காரார் கடலிடை நெடுநா ளிடுமிடர்
கடிவா னொருவரின் முடியாதாய்
நீரா யினபெற லரிதாய் மழைவிழ
நினையா தலமர நிலன்வானோர்
வீரா மடவர லருகா நடமிடு
விரகா விரைவிரி தருகொன்றைத்
தாரா வருணன துயர்பா தகவிடர்
தவிரா யெனநனி தொழுதார்கள்.

இ-ள்: கருமை பொருந்தின நடுக்கடலிலே கட்டுடனே கொண்டுபோய்ப்போட நெடுநாளாகவரும் துக்கமாகிய இந்தப் பாசத்தை நீக்கும்படி ஒருத்தராலும் முடியாதாகி மழை பெய்தற்கு நினைவுமற்று வருணன் மோகித்துக் கிடக்க, தண்ணீர் என்பது கிடையாமல் நிலத்திலுள் ளோரும் வானில் உள்ளோரும், புரமெரித்த தீரனே! சத்தியிடத்திலே பிரியத்தையுடையவனே! கூத்தாடவல்ல சதுரனே! மணம் விரிந்த கொன்றை மாலையுடையவனே! வருணனுடைய மகாபாதகமான துக்கத்தை நீக்கி அருளுவாய் என்று மிகுதியாகத் துதித்து நமஸ்கரித்து வேண்டிக்கொண்டார்கள் என்றவாறு. (37)

தேசிற் பொலிபொது நிறையற் புதனொலி
செறிநற் கடலெதிர் திகழ்வுற்றுப்
பாசத் தளையற வருளச் சலபதி
பரவித் தினமிது படிவுற்றோர்
ஆசற் றுயர்கதி யடையக் கடவுளும்
அனுகப் பெறவர மதுபெற்றான்
மாசித் திருமக மெனமற் றதுதக
மலிபொற் கொடியது பொலிவித்தான்.

இ-ள்: எல்லாப் பிரகாசத்திலும் மேலான பிரகாசத்தையுடைய சிதம்பரத்திலே பரிபூரணராய் இருக்கிற அற்புதரான சிதம்பரமூர்த்தி ஆரவாரம் பொருந்தின நல்ல கடலுக்கு எதிரே எழுந்தருளிப் பாசபந்தமற் றுப்போம்படிக் கடாட்சித்தருள, வருணனானவன் மிகவும் துதித்து இந்த நாளிலே யார் ஒருவர் இந்தத் துறையிலே ஸ்நானம்செய்கிறார்களோ அவர்கள் பந்தபாசம் நீங்கிப் பரமுத்தி பெறவும் தம்பிரானார் வந்து திருக்கண் சாத்தி அருளவும்வரம் பெற்றான்,அதுமாசித் திருமகத்திலேயாயிருக்கும் என்று வியாக்கிரபாதர் சொல்ல, மாசிமகத்திருநாள் பொருந்த விதிப்படியே வியங்கக் கொடி ஏற்றுவித்தார்கள் என்றவாறு. (38)

எத்தன் மையினல முய்க்குஞ் சலபதி
இறைசேர் தரவர முறுநாளோர்
பத்தொன் பதுவிழ வுய்க்கும் படிகளி
பயிலுங் கயமுக னயிலுந்தேன்
மொய்த்தங் கொளிர்கனி யப்பம் பயறவன்
முதலா யினபல வுதவாவாழ்
நித்தம் பொலிவிழ வத்தன் றரமிக
நெஞ்சார் கரைவுற நைஞ்சார்கள்.

இ-ள்: எல்லாப் பிரகாரத்திலும் சுகப்பிராப்தி பெற்ற வருணன் தம்பிரானார் கடற்கரைக்கு எழுந்தருள வரம்பெற்ற நாள் ஒருபதுஎன்ன முன் ஒன்பதுதிருநாள் விக்கினம்வராமல் நடப்பதற்கு மதம்பொருந்தின யானை முகத்தையுடைய விக்கினேசுவரருக்கு அமுதுசெய்யத்தக்க தான தேன் பலவன்னங்களையுடைய எண்ணிறந்த பழம் திருப் பணியாரம் பயறு அவல் முதலாயுள்ள பதார்த்தங்களை அமுதுசெய்யப் பண்ணி நித்தியம் பெருவாழ்வு மிக்க திருநாட்பவனி தம்பிரானார் எழுந்தருளி யாவர்க்கும் காட்சிக்கொடுத்தருளக் கண்டோர் யாவரும் நீராளமாக நெஞ்சம் கரைந்து தம்மையிழந்து எண்ணிறந்த பேர்கள் உருகினார்கள் என்றவாறு. (39)

கண்ணா யிரமுடைய யவன்மா தவன்மலி
கமலா லயன்முத லெனலாகும்
விண்ணா டுடையவர் வடநீ டணிமுலை
விடவாள் விழியுடை மடவாராறு
எண்ணா யிரமுனி கணநா தருமறை
இசைநா ரதரணி யெனையோரிம்
மண்ணாள் பவருட னண்ணா வளர்திரு
மன்றா வருள்புரி யென்றார்கள்.

இ-ள்: இந்திரன் விஷ்ணு மிகுந்த கமலாசனன்முதல் எண்ணத்தக்க தேவலோகத்திலுள்ளவர்கள் எல்லோரும், கச்சு விடாத ஆபரணம் பொருந்தின முலைகளையும் விடமும் வாளும் ஒத்த விழிகளையுமுடைய தெய்வமாதர்களும், நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும் கணநாதர்களும் வேதங்கள் இசை பொருந்தின நாரதரும் அணிபொருந்தின ஒழிந்த தெய்வ இருடிகளும் இந்தப் பூமியில் மனிதரு டனே கூடிக்கொண்டு, ஞானநேயம் மிகுந்த சிதம்பரநாதனே! எங்களையும் கடாட்சித்தருள் என்று வேண்டிக்கொண்டார்கள் என்றவாறு. (40)

புகழும் பவனிக ளகமின் புறுநெறி
    புனிதன் றரவிழி புனல்கொண்டிட்(டு)
இகழும் பரகதி யெனவந் தரன
    தெழுச்சிக் கமரர் பழிச்சிக்கைத்
திகழுஞ் சலியோடு மிகுமங் கலவணி
    செய்வித் தலர்தட மேவிச்சேர்
அகமங் ககறர வமுதந் தருகுழி
    ஆடிக் கடல்வழி கோடித்தார்.

இ-ள்: எல்லாரானும் தோத்திரம் பண்ணப்பட்ட திருப்பவனிகள் மனம் களிகூருமாறு அநாதிசுத்தராய் இருக்கிற சிதம்பரமூர்த்தி தந்தருள, விழிநீர்த் தாரைக்கொண்டு திருட்டி கோசரமான பரமசுகம் அங்கு இல்லாதபடியினால் மூதான்மாக்களாலே பரகதி இகழப்படும் என்று தேவர்கள் எல்லோரும் இங்கே வந்து பரமானந்தமூர்த்தியுடைய திருவெழுச்சிக்குப் பிரீதராய்த் தோத்திரம் செய்து அஞ்சலி அத்தத்துடனே மிகுந்த மங்கலார்த்தமான பதார்த்தங்களைக் கூட்டித் திரு வீதிப் பெருவழியைப் பொருந்தின பாவங்களைப் போக்குகிற அந்த விரதமான தீர்த்த சலங்களிலே ஸ்நானம் பண்ணிக் கடலுள் எழுந்தருளுகிறவழியை மங்கலமாகக்கோடித்தார்கள் என்றவாறு. (41)

ஆனைத் திரள்கட லடையக் கருமுகில்
    அணியிற் பொலிவுற வரவஞ்சேர்
சேனைத் தொகைநதி யோதத் தினுமிசை
    திகழப் புயல்துயில் பயில்தாழைக்
கானத் திடையெழு காலுய்த் தெனவிழு
    கைதைத் துகள்வழை யெய்தக்குத்
தேனக் கனவன மானப் பொழிமழை
    சேரும் வகைதரு திருவீதி.

இ-ள்: திருப்பவனி சேவித்து முன்னே சென்ற யானையணி கடலுக்குள் அனேகதூரம் சென்ற அளவில் கடலிலே படிகிற மேகபந்தியிலும் பொருந்த காட்சி உண்டாக ஆர்ப்பரவம்பொருந்தின பதாதி சமுத்திரத்தில் சமுகமாகச் செல்வது ஆறுகள் எல்லாம் ஒருமுகப் படக்கூடிச் சமுத்திரத்திலே செல்லும் பிரவாகத்திலும் மேலிட்டு முழங்கிச்செல்ல மேகங்கள் நித்திரையைப் பயிலும் தாழைக்காட்டில் நின்று எழுந்தோறும் எழுந்தோறும் தள்ளிப்போடும் தாழைப்பூவின் நீறானது சுரப்புன்னைப் பூங்கொத்திலே மேகபரிசத்தினாலே நெகிழ்ந்து விழ, பூமியிலே தேன் உடைந்து விழுந்தாற்போலச் சொரியும் இது சத்தியமாகப் பொழிகிற மழையை ஒக்க ஆறு ஓடிவந்த சேறாடும் வகுப்பைத் தரும் திருவீதி எ-று. (42)

கொத்தார் மலரளி குலவும் புள்ளொலி
குழுமித் திசைதொறும் விழிமுத்தத்
தொத்தார் துதிவளர் தொண்டத் திரளொடு
சூலப் படைதிசை யடைகாவல்
பத்தா யுதவுரு வினர்சூழ் படையொடு
பயில்தூ ரியமிக வுயர்வானோர்
இத்தா ரணியின ருடனே விரவிமுன்
ஏவற் கொடுபுடை சேவித்தார்.

இ-ள்: பூங்கொத்துக்களில் நிறைந்த வண்டுகளின் இசை அந்த நிலத்திலுண்டான பக்ஷிகளுடைய ஆரவாரத்துடனே கூடின திக்கு கள் தோறும் ஆனந்தக்கண்ணீராகிய முத்துமாலை நிரம்பின தோத்திரம் மிகப்பண்ணும் அடியார் கூட்டத்துடனே சிவாஸ்திரமும் சிவாஸ்திரத்தைச் சூழும் தசதிக்கில் காவலாகிய தசாயுதருபிகளும் தம்பிரானாரைச் சூழ்ந்து புறக்காவலாக வரும் தொண்ணூற்றெட்டு ஆயுதங்களையும் தரித்த எண்ணிறந்த சேனையுடனே பொருந்தின அனேக கோடி வாத்தியம் மிக முழங்க மேலான சுவர்க்கத்திலுள்ள தேவர்கள் இப்பூமியிலுள்ள மனிதருடனே கலந்து அநாதியிலே தங்களுக்குக் காவல் கற்பித்த முறைமையிலே அந்தந்தத் தானங்களைக் கைக்கொண்டு சேவித்து வந்தார்கள் என்றவாறு. (43)

வருமா தெரிபவ ரெனவான் மிசையெழ
வளரா வளைதலை யின தாய்முத்(து)
அருமா மணிதிமி னுரைவாழ் சலசர
மலையா வரைபுரை திரைமோதிப்
பொருமா மிகவிரை தருமா கடலிடை
புளினத் தலைதரு வெளியுற்றுத்
திருமா லறிவரு பெருமா னணைவகை
திகழுஞ் சலபதி யெதிர்கொண்டான்.

இ-ள்: தம்பிரானார் எழுந்தருளிவருகிற பிரதாபத்தை ஆதரத்துடனே கண்டவர்களைப் போல, ஆகாசம் அளவாக உயர்ந்து களித்து எழுந்திருந்து வணங்கின தலையையுடையதாகி முத்துக்கள் அரியமகத்தான நவரத்தினங்கள் மரக்கலங்கள் நுரை தன்னிடத்தில் வாழும் மகரம் மச்சம் முதலானவைகளை அலைத்துத் தள்ளிப்போட்டு,

மலைகளை ஒத்த திரைகளினாலே கரையை மோதிப் பொருமாறு போல, மிகவும் ஆர்ப்பரவத்தைத் தருகிற கடற்கரையில் மணற்குன்றின்மேல் உண்டான வெளியளவாகச் சென்றேறி விஷ்ணுவினால் தவபலத்திலும் அறிவரிய தம்பிரானார் எழுந்தருளுகிற சவுபாக்கியத்தின் விரிவைப்பாசம் நீங்கி விளங்கும் வருணராசன் எதிர்க்கொண்டான் என்றவாறு (44)

**கட்டங் கியவொளி தெளியச் சலபதி**
**காணும் பொழுதிடை யடை துன்பக்**
**கட்டங் கறவருள் சரணங் களிலலை**
**கரமின் புறவிழ மழுவும்பொற்**
**கட்டங் கமுமுடை யவன்முன் பொலிமலி**
**கடன்மண் டியவவர் களுமாயைக்**
**கட்டங் கழிவுற மிகுமன் பிறையொடு**
**கற்றா வெனவருள் பெற்றார்கள்.**

இ-ள்: தன்னிடத்திலே தியானரூபமாயிருக்கிற பிரகாசம் திருட்டி கோசரமாகத் திருமேனிக்கொண்டு எழுந்தருளக் கண்ட அவதாரத்தில் வருணன் அந்தராயத்தில் பொருந்தின திரைக்கரங்கள் முன்னாக ஆனந்தத்துடன் நமஸ்கரிக்க, குருத்துரோக பாசபந்தத்தை நீக்கி அருளிய திருவம்பலமுடைய தம்பிரானார் ஸ்ரீபாதத்திலே மழுவும் தேசிட்டமான கட்டங்கமும் ஆயுதமாகவுடைய தம்பிரானார் சன்னதியில் ஆரவாரம் மிகுத்த சமுத்திரஸ்நானம் பண்ணின பத்த சனங்களும் மாயா பாசபந்தம் அவ்விடத்திலே அற்றுப் போகிற திறத்தைப் பொருந்தத் தங்களிடத்திலே தம்பிரானார் வைத்தருளிய மிகுந்த காருணியம் எங்ஙனம்? எனில், புனிற்றிற்றுப் பசுப் போலவும் தாங்கள் இளங்கன்று போலவும் மிகுந்த திருவருளைப் பெற்றார்கள் என்றவாறு. (45)

**குரையார் கடல்குட கரைமே லொளிவளர்**
**குணபா லுளவள னெடு நீளத்**
**திரையார் கரமலி கலனா நவமணி**
**திரள்மா நதியகில் துகில்சீரை**
**நரையார் கவரிகள் விரையார் தருமத**
**நற்பூ நிறைபுனல் கர்ப்பூரம்**
**வரையார் மதகரி நிரையா திகளோடு**
**வாழ்பொற் றிருவடி சூழ்விப்ப.**

இ-ள்: ஆரவாரம் அதிகரித்த கடலின் மேற்கரையின் மேல் பிரகாசம் மிகுந்த கீழ்க்கரையிலுள்ள வளமையுடனே மிகவும் நீண்ட திரைக்கரங்களினாலே படகு முதல் சொங்கு ஈறான எண்ணிறந்த மரக்கலம் அங்கு உண்டான நவரத்தினங்கள் விலையில்லாத பட்டுவஸ்திரங்கள் அகில் சீனத்தில் உண்டான அபூர்வ வஸ்துக்கள் வெண்சாமரங்கள் மணவிய சவ்வாது முதலானவைகள் குங்குமப்பூ பனிநீர்ச் செம்புகள் கர்ப்பூரவகை மலைகளில் உயர்ந்திருக்கிற மத்த கஜங்கள் முதலான பின்னும் எண்ணிறந்த வகைகள் எடுத்துக் கொண்டு வந்து எல்லார்க்கும் வாழ்வு கொடுத்தருளும் செங்கமலப் பொற்பாதத்திலே காணிக்கையிட்டான் என்றவாறு. (46)

பாசத் தளையறு துறைவுற் றிமையவர்
படியிற் படிபவ ருடனாடிப்
பூசற் றொழில் புரி திரைநற் பொலிவுயர்
புளினத் தலைதரு வெளியுற்றுத்
தேசத் தவரொலி கடலிற் பொலியொலி
சின்னத் தொலிதிசை மன்னச்சீர்
வாசப் பொழிலிடை யாறிக் கணபர்கள்
வானோ ரொடுகழி வழிவந்தான்.

இ-ள்: பாசம் அறுத்தான் துறையிலே எழுந்தருளித் தேவர்கள் பூமியில் பொருந்தின மனிதர் இவர்களுடனே திருமஞ்சனம் செய்தருளி இருந்து இந்தத்தேசத்தில் மானிடராக ஒன்றுக்கு ஒன்று மாறிப் பொரும் தொழிலைச் செய்யும் திரைகள் மிக விளங்கி ஓங்கும் மணற்குன்றின் மேல் நல்ல வெளியிலே எழுந்தருளியிருந்து இந்தத் தேசத்தில் மானுடர் வாக்கில் எழும் மகா ஓசை சமுத்திரத்தில் மிகுந்த ஓசை திருச்சின்னங்களின் ஓசை திக்குகளைப்பொருந்த இலக்குமிகரமான மணவிய பூங்காவின் நடுநிழலில் அரக்கர் கணநாதர்கள் தேவர்கள் சேவித்துவரக் கழிகள் பொருந்தும் வழியளவாக எழுந்தருளினார் எ-று. (47)

அன்றன் றலைகடல் வளனங் களவில
படிகொண் டடியிணை தொழுதன்பால்
இன்றென் றிடவர மென்றும் பெறவரம்
இறைதா வெனவிரை வுடனெய்தி
மின்றங் கியகழல் துதிகொண் டருளொடு
விரவுஞ் சலபதி விடைகொண்டான்
புன்றண் கதிர்மதி புனையும் பரன்மிகு
பொன்னம் பலமத னுள்புக்கான்.

இ-ள்: அந்தத் திவசத்தில் சமுத்திர பாரிசத்தில் பூர்வ பதார்த்தங்கள் அளவிறந்தன கொண்டுவந்து கழிக்கரையில் தம்பிரானார் ஸ்ரீபாதத்திலே காணிக்கையாகவிட்டு நமஸ்கரித்துத் தேவரீருடைய கிருபையினாலே இனிமேல் வருகிற மாசிமகத்துத் திருநட்சத்திரங்கள்தோறும் இந்த மாசிமக நட்சத்திரத்தைப்போல அடியார்களும் யானும் இந்தச் சௌபாக்கியத்தைப் பெறத்தக்கதாக, சுவாமியே! திருவுளம் பற்றியருள வேண்டும் என்று விண்ணப்பம் செய்து வேண்டிக்கொண்டவரமும் உடனே பெற்றுச் சுத்தப்பிரகாசம் பொருந்தின ஸ்ரீபாதங்களைத் துதித்து நமஸ்கரித்துத் தம்பிரானார் அருளினால் சேவித்து வந்த வருணன் மீண்டுப்போனான்: குளிர்ந்தபாலசந்திரனை அணிந்தருளும் ஞானத்துக்கு மேலான நேயமாச் சிதம்பரேசுரனார் பாசாதீதமான ஞானமயமாகிய சிதம்பரத்தில் எழுந்தருளினார் என்றவாறு. (48)

என்றென் றிகழ்வறு மாதந் தருதினம்
யாவும் புகழ்விழ வெழவாழ்வுற்(று)
ஒன்றும் புலிமுனி யுரகந் தருதவன்
ஒளிருங் கனகம துருவாகி
மூன்றங் கியபுர வலனங் கிகள்வளர்
மூவா யிரவர்கள் தேவாரும்
மன்றங் கியவிரு மன்றந் தொழுதுவ
ரந்தான் விரவ விருந்தார்கள்.

இ-ள்: இந்தவகையிலே குற்றமற்ற மாதங்களிலும் தினங்களிலும் யாவரும் புகழ்கின்ற திருவிழா முதலியவற்றை நடத்தி, மனப்பிர்யத்துடனே வாழ்வு பொருந்தும் வியாக்கிரபாத முனியும் பதஞ்சலி மகாஇருடியும் பிரகாசமான கனகவடிவாகி முன்னே பொருந்தின இரணியவன்மச் சக்கரவர்த்தியும் முத்தி வளர்க்கும் மூவாயிரவர்களும் திவ்விய மயமான சிதம்பரேசுரர்பொருந்தின கனகசபையை நமஸ்கரித்து நன்மை பொருந்த இருந்தார்கள் என்றவாறு. (48)

ஈரா றுயிருடன் மூவா றமரு
மெழுத்துப் புகன்முதல் விரியென்றும்
தாரா தரமென வுலகோர் பலகலை
தருமா விரணிய வருமாமுன்
சீரார் தரவரு திருநாள் படிமுதல்
சிலநாள் வழிசெல மிகநவ்விக்
கூரார் படையின னருளா லரசர்கள்
கொண்டா டிடுநெறி கண்டார்கள்.

இ-ள்: அகரம் முதல் ஔகாரம் ஈறான பன்னிரண்டு உயிரும், ககரம் முதல் னகரம் ஈறான பதினெட்டு மெய்யும் எனச் சொல்லுகின்ற முதலெழுத்துக்கள் முப்பதுமே காரணமாக எந்தக் காலமும் கைம்மாறு வேண்டாது பயன்தரும் மேகத்தை ஒப்பாக உலகத்திலுள்ளவர்களுக்கு ஆதாரமாகிப் பலவகைப்பட்ட கலைகளும் உண்டானமைப்போல, ஆதியில் இரணியவன்மச் சக்கரவர்த்தியால் நித்திய நைமித்திய முதலி யவை சிறப்புப்பெறச் சில நாள் நடந்துவரப் பிற்காலத்தில் கூர்மையுள்ள மழுப்படை தாங்கிய நடேசர் திருவருளால் சோழமன்னர்கள் திருவருட்செல்வம் பெருகுமாறு அவற்றை விசேடமாக யாவரும் கொண்டாடும்படி நடத்திவந்தார்கள். என்றவாறு. (50)

**சொற்றா னுமையொரு ளரனா மிகுபொருள்**
**துணிவா லவரருள் தொகுமாலிப்**
**பொற்றா மரைமலர் விரைசூழ் புனலணி**
**புலியூர் வளநகர் புகழ்தாமங்**
**கற்றா ருரைசெயல் பெற்றார் செவிகொடு**
**கவர்வார் பொருள்விரி பகர்வார்சீர்**
**உற்ற ரிருவினை யற்றார் மிகுபரி**
**வுடையார் திருவடி யடைவாரே.**

இ-ள்: சொல் உமையாகவும், பொருள் சிவபெருமானாகவும், வேதாகமங்கள் நிச்சயித்த மிகுந்த பொருட்டுணிவாதலால் அவர்கள் இரண்டு பேர் அனுக்கிரகமும் இந்த நூலில் குடிக்கொண்டிருத்தலால் கனக தாமரைமலரினது பரிமளம் சூழும் தீர்த்தங்கள் பொருந்திய பெரும் பற்றப்புலியூர் என்னும் வளப்பத்தையுடைய திருப்படைவீட்டைப் புகழும் பாமாலையைக் கற்றாரும் பாடம்சொல்லும் செயலைப் பெற்றாரும் செவிகொண்டு கேட்பாரும் இப்பொருள் விரிவைச் சொல்வாரும் செல்வத்தைப்பெறுவர்; பாவபுண்ணிய வாதனையின்றும் நீங்குவர் ;பரமசிவத்தினிடத்தில் மிகுந்த பத்தியுடையவர் ஆவார்; திருவடியை அடைவர் என்றவாறு.

'மிகுபரிவுடையார்' என்பதற்கு ஆன்மாக்களிடத்தில் அளவில்லாத கருணை உடையவராகிய நடேசர் எனினும் அமையும். (51)

செடிசேர் பொழிலணி புலியூர் வளநகர்
செல்வம் பெருகுக திருமன்றில்
கொடிசேர் விடையின னடிசே ரொளிதெளி
குறிகூ டுககுழு மறைகூழ்க
பொடிசேர் வடிவின ரடிசேர் முடியினர்
புனல்சே ரிருவிழி யினராகி
அடியே னெனதுய ரகல்கூ டிடுநெறி
ஆள்வா னடியவர் வாழ்வாரே.

இ-ள்: சிறுசண்பகம் முதலிய விருட்சங்கள் தங்கிய பொழில் சூழ்ந்த புலியூர் என்னும் பெருமை பொருந்திய சிவக்ஷேத்திரம் அருட்செல்வத்துடன் ஓங்குக ; சிற்சபையில் இடபக்கொடியை உடைய நடேசரது ஸ்ரீபாதங்களை அடைதற்கு ஏதுவான சிவஞானத்தைத் தெளிகின்ற சைவசமய மார்க்கம் உலகம் எங்கும் பரவுக ; திரண்ட வைதிகமார்க்கம் தழைக ; நீறணிந்தருளும் திருமேனியை உடையவராய்ச் சிற்சபாமத்தியில் ஆனந்தநிருத்தம் செய்யும் நலகண்டபரமேசுவரால் திருவடி தீட்சை பெற்றவர்களாகிய சிவன்மூத்தர்களும் ஆனந்தபாஷ்பம் தாரைதாரையாய்ப் பொழியும் விழியினராகித் திருவடி சேர்பவர் பாதங்களைச் சிரசில் சூடிடும் நெறியாள்வானுக்குரிய மற்றை அடியவர்களும் வாழ்வாராக எ-று. (52)

வேறு

மழைவ ழங்குக மன்னவ னோங்குக
பிழையில் பல்வள் னெல்லாம் பிறங்குக
தழைக வஞ்செழுந் தோசை தரையெல்லாம்
பழைய வைதிக சைவம் பரக்கவே.

இ-ள்: மாதம் மும்மாரி பெய்யக்கடவது; அரசன் நீதியோடு செங்கோல் செலுத்தக்கடவன்; குற்றமற்ற பலவகையாகிய வளங்கள் எல்லாம் விளங்கக்கடவன்; பழமையாகிய வைதிக சைவமார்க்கம் உலகம் எங்கும் பரவக்கடவது எ-று.

## திருவிழாச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருதத்தம்-415.

திருச்சிற்றம்பலம்

## கோயிற்புராணம் உரையுடன் முற்றிற்று.

## சந்தான குருபரம்பரை ஆதி

புண்ணியன் கைலைக் குருபரம் பரையிற்

போந்த மெய்கண்ட சந்ததியில்

பொருவில் சீர்த்து றைசை நகர்வளர்

சிவப்பிரகாசர் தம்பொன்னடி புனைந்த

எண்ணிநல் தவத்துச் சாந்த லிங்கேசன்

எல்லையின் மோனானந்த நிலையாம்

இரும்பொருள ளித்த விருத்த அம்பிகையாள்

இன்புறுங் குமாராசக் குறவன்

திண்ணிய அருள் சேர் சிதம்பரத் தேவன்

செப்புறும் பழனி மாமுனிவன்

கண்ணினுக் கிமையாங் குழந்தை வேலடியான்

கருமம் களைந்த முத்தையன்

கருதுமிச் சந்தானக் குரவர் கள்தாள்

கமலம் உள்நினைந்து கைதொழுவாம்.

**திருச்சிற்றம்பலம்.**

# செய்யுள் முதற்குறிப்பகராதி

(பக்க எண்)

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று




திருச்சிற்றம்பலம்
கொடிக்கவி
1. ஒளிக்கும் இருளுக்கும் ஒன்றே யிடமொன்று மேவிடிலென்
றொளிக்கு மெனினு மிருளட ராதுள் ளுயிர்க்குயிராய்த்
தெளிக்கு மறிவு திகழ்ந்துள தேனுந் திரிமலத்தே
குளிக்கு முயிரருள் கூடும் படிக்கொடி கட்டினனே.
2.பொருளாம் பொருளேது பேதேது கண்ணேது
இருளாம் வெளியே திரவேது - அருளாளா
நீ புரவா வையமெலாம் நீ அறியக் கட்டினேன்
கோபுர வாசற் கொடி.
3.வாக்காலும் மிக்க மனத்தாலும் எக்காலும்
தாக்கா துணர்வரிய தன்மையனை - நோக்கிப்
பிறித்தறிவு தம்மிற் பிரியாமை தானே
குறிக்கும் அருள் நல்கக் கொடி.
4.அஞ்செழுத்தும் எட்டெழுத்தும் ஆறெழுத்தும் நாலெழுத்தும்
பிஞ்செழுத்தும் மேலைப்பெருவெழுத்தும் - நெஞ்சழுத்தும்
பேசும் எழுத்துடனே பேசா எழுத்தினையும்
கூசாமற் காட்டக் கொடி.
திருச்சிற்றம்பலம்
“பட்டக்கட்டையில் பகல் குருடு ஏகுது பாரீர்”
பண்ணுருட்டி. 242647